# செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்கள்

சு. நாகம்மை




நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
41-பி ,சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை- 600 098.

CHETTINAATTU THAALAATTU PAADALKAL

by

*Su. Nagammai*

நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் வெளியீடு

முதல் பதிப்பு : ஜூலை, 2001

Code No. : A 1135

ISBN : 81-234-0725 - 4

விலை : ரூ.55.00

ஒளி அச்சு : அழகர் கிராஃபிக்ஸ்
☎ : 6560112

அச்சிட்டோர் A.yanar Offset, Chenn - 600 10

36.1

# பதிப்புரை

நாட்டுப்புறப் பாடல்கள் நாட்டு மக்களின் வளர்ச்சிக்கு எற்ப பல்வேறு வகைப்பட்டதாக விளங்குகின்றன. எழுத்தறிவு இல்லாத நாட்டுப்புறத்து மக்களின் வாய் மொழியாக வந்தவையே குழந்தைப் பாடல்கள். தாலாட்டு தான் மனிதன் கேட்கும் முதல்பாட்டு. தாலு என்றால் நாக்கு. நாவினை ஆட்டிப் பாடும் பாட்டு தாலாட்டு. தாலாட்டு நீலாம்பரி ராகத்தில் அமைகிறது.

செட்டி நாட்டாரின் வாய்மொழிப் பாடல்களுள் தாலாட்டு, ஒப்பாரி, திருமணப்பாடல்கள் சிறப்பாக விளங்குகின்றன. ஊர் பேர் தெரியாத செட்டி நாட்டு மூதாட்டியார் பாடிய தாலாட்டுகள் பல தலைமுறைகளாக வாய்மொழி மூலம் இன்று வரை பரவி வாழ்கிறது. செட்டி நாட்டுப் பெண்களின் உள்ளத்தை இராமாயணம், மகாபாரதம், திருவிளையாடல்புராணம், கந்தபுராணம் போன்ற சமயம் சார்ந்த கதைகள் கவர்ந்தன. இவர்களின் தாலாட்டுகளில் பக்தி மிளிர்கிறது.

செட்டி நாட்டுப் பெண்கள் கூட்டுக் குடும்பத்தில் வாழ்பவர்கள். குழந்தை பிறக்காவிட்டால் மலடி என்று மற்றவர்கள் வசைபாடுவார்கள். அதனால் மலடி என்ற சொல்லை மாற்ற வந்த பிள்ளை என்று தாலாட்டுப் பாடி பெருமை கொள்கிறார்கள்.

குழந்தையை இறைவனின் திருவுருவமாகவும் இறைவனின் குழந்தையாகவும் உருவகம் செய்து தன் உணர்ச்சியை வெளியிடுகின்றாள்.

செட்டி நாட்டுத் தாலாட்டுப் பாடல்களில் எதுகை, மோனை போன்ற தொடை அமைப்புகள் இயல்பாக அமைந்து பாடலின் ஒலிநயத்தைப் பொலிவு பெறச் செய்கிறது. தாலாட்டுப் பாடல்களில் உவமை நயம், உருவகம், இலக்கியச் சொல்லாட்சி, கற்பனைச் சிறப்பு, ஆகியவை அழகு செய்கின்றன. நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்று எண்வகைச் சுவைகள் கையாளப்படுகின்றன. கருத்து நலன், உத்தி நலன் உயர்த்திக் கூறப்படுகிறது.

இந்நூலில் இடம் பெற்ற பாடல்களைப் பாடியவர்களின் பெயர், ஊர் குறிப்பிட்டிருப்பது நன்றி மறவாத செயல். பாடல்களைத் தொகுத்துத் தந்துள்ள எழுத்தாளர் சு. நாகம்மை அவர்களின் முயற்சி பெரிதும் பாராட்டுதலுக்குரியது.

செட்டி நாட்டுத் தாலாட்டுப் பாடல்கள் என்ற இந்நூலைப் படிக்கின்ற ஒவ்வொருவரும் தாயுள்ளத்தைப் பெறுவார்கள். தாயுள்ளம் பெறுகின்ற அளவுக்குப் பக்குவப்படுத்துகின்ற நூலை வெளியிடுவதில் எமது நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம் பெருமிதம் அடைவதுடன் வாசகர்களின் பேராதரவைப் பெரிதும் எதிர்பார்க்கிறது.

–பதிப்பகத்தார்.

# முன்னுரை

நாட்டுப்புறப் பாடல்களாகிய எழுதா இலக்கியங்களும் எழுதும் இலக்கியங்களை ஒத்தனவே. எழுதும் இலக்கியத்தின் அடி நிலையாய் அமைவனவே. ஒப்பாரி, தாலாட்டு, ஏற்றப்பாட்டு, கும்மி எனப் பல வகைகளை உள்ளடக்கி யிருப்பினும் தாலாட்டுப் பாடல்கள் மட்டும் இங்கு ஆய்வுக்குக் கொள்ளப்பட்டுள்ளன. இத்தாலாட்டுப் பாடல்கள் சாதி முறைக்கேற்பவும் மாவட்டத்திற்கு ஏற்பவும் பலவாறு வேறுபடுகின்றன. எனவே குறிப்பிட்ட வரையறைக்குள் அடங்க வேண்டும் என்பதாலும், செட்டிநாட்டுப் பழக்க வழக்கங் களிலேயே பிறந்து வளர்ந்த சூழ்நிலையினாலும் செட்டி நாட்டுக்குரிய தாலாட்டுப் பாடல்கள் மட்டும் இங்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றிய பொதுநிலை ஆய்வுகளில் தாலாட்டும் ஒரு கூறாக ஆய்வு செய்யப்பட்டுள்ளது. ஆனால் நாட்டுப்புறப் பாடல்களுள் சிறந்த வகையாகக் கருதப்படும் தாலாட்டுப் பாடல்கள் பற்றித் தனியே செய்துள்ள ஆய்வு குறைவே. சரோஜினி அம்மாள் என்பவர் கேரளப் பல்கலைக்கழக முதுகலைப் பட்டத்திற்காக 'நாஞ்சில் நாட்டுத் தாலாட்டு' என்னும் தலைப்பில் ஓர் ஆய்வுரை தந்துள்ளார்.

ஆய்வாளர் நேரடியாகச் சென்று திரட்டிய பாடல்களோடு, நாட்டுப்புறப் பாடல்களின் தொகுப்புக்களிலிருந்து எடுக்கப்பட்ட பாடல்களும் ஆய்வுக்கு மூலங்களாயின. இவை பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.

சு. நாகம்மை

# குறுக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| உ. ஆ. | - | உரையாசிரியர் |
| க.தி.பா | - | களப்பணியில் திரட்டிய பாடல்கள் |
| நூ.எ.பா | - | நூல்களில் எடுத்தாண்ட பாடல்கள் |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| ப. | - | பக்கம் |
| P. | - | Page |

* * *

# உள்ளுறை

## இயல் - 1

# நாட்டுப்புறப் பாடல்களுள் தாலாட்டு

பறவைகளில் அவள் மணிப்புறா

பாடல்களில் அவள் தாலாட்டு.

-கவியரசு கண்ணதாசன்.

# நாட்டுப்புறப் பாடல்களுள் தாலாட்டு

**1.** நாட்டுப்புற மக்களின் நடைமுறை வாழ்க்கை நெறியில் அவர்களின் இதய கீதங்களாகக் காற்றில் மிதந்து வருவனவே நாட்டுப்புறப் பாடல்கள். நாட்டுப்புற மக்களின் பல்வேறுபட்ட உணர்ச்சிகள் அவர்களின் வாழ்க்கை முறைகள் ஆகியவற்றைக் காட்டும் கண்ணாடியாக நாட்டுப்புறப் பாடல்கள் விளங்குகின்றன. இதன் சிறப்பினை மதிப்பினை உணர்ந்து இன்று எல்லா நாடுகளிலும் இதற்கென்று தனி இயக்கங்களும் ஆராய்ச்சிகளும் தொடர்ந்து நடத்தி இத்துறைக்குத் தனி மதிப்பினை ஏற்படுத்தியவண்ணம் இருக்கின்றனர்.

## 1.1. நாட்டுப்புறப் பாடல் - பெயர் விளக்கம்

நாட்டுப்புற மக்களிடையே வாய்மொழியாகப் பாடப்பட்டு வரும் பாடல்கள் நாட்டுப்புறப் பாடல்கள். இவைகளை நாட்டுப்புறப் பாடல்கள், நாட்டுப் பாடல்கள், நாடோடிப் பாடல்கள், நாட்டார் பாடல்கள், பாமரர் பாடல்கள், பரம்பரைப் பாடல்கள், மரபுவழிப் பாடல்கள், மக்கள் பாடல்கள், கிராமியப் பாடல்கள், ஏட்டில் எழுதாக் கவிதைகள், காற்றில் மிதந்த கவிதைகள், காற்றில் வந்த கவிதைகள், வாய்மொழி இலக்கியம் என்று பலவாறு அழைக்கின்றனர். இவ்வாறு பலவாறாக வழங்கப்படினும், நாட்டுப்புறப் பாடல்கள் என்ற பெயர் சாலப் பொருந்துவதாக உள்ளது. ஆங்கிலத்தில் நாட்டுப்புறப் பாடல்களைக் குறிக்க **'Folk lore'** என்ற சொல் கையாளப்படுகிறது. இச்சொல்லை 1846-ல் வில்லியம் தாம்ஸ் **(William Thomps)** என்பார் முதன்முதலில் படைத்துப் பயன்படுத்தினார்.[1] ஐரோப்பிய மொழிகள் அனைத்தும் இச்சொல் ஆக்கத்தை அப்படியே ஏற்றுக் கொண்டன. தமிழில் பலவகைப் பெயர்கள் படைத்து அவரவர் கருத்துக்கு ஏற்ப வழங்குகின்றனர்.

## 1.1.1. நாட்டுப்புறப் பாடலின் தன்மைகள்

1. நாட்டுப்புற மக்களின் உயரிய உள்ளத்து உணர்ச்சி சிறப்பாக எடுத்துக் காட்டப்படுகிறது.
2. பாடல்கள் இசையமைப்புக்கேற்ற ஓசை நயத்தைப் பெற்றுள்ளன.
3. அன்றாட வாழ்வில் வழங்கும் எளிமையான சொற்களையும், வட்டாரத்திற்கு ஏற்ற சொற்களையும் கொண்டுள்ளன.
4. வாழ்க்கை நிகழ்ச்சிகளைத் தெற்றெனக் காட்டும் கண்ணாடியாக விளங்குகின்றன.
5. பாடிய அடிகளையே மீண்டும் மீண்டும் கூறும் தன்மை பெற்றுள்ளன.
6. இலக்கியத் தாக்கத்தையும் கொண்டுள்ளன. அது போன்று இலக்கியங்களிலும் நாட்டுப்புறப் பாடலின் தாக்கம் உண்டு.
7. பேச்சு வழக்கு இதன் சிறப்பான கூறாக உள்ளது.
8. சிறந்த கவிதைகளில் பெறக்கூடிய இலக்கியச் சுவையையும், ஒளிநயத்தையும் காண முடிகிறது.
9. பழமொழிகள், விடுகதைகள் ஆகியவை மிகுதியாக இடம் பெற்றுள்ளன்.
10. கற்பனை, கருத்து - இவை உண்மைத் தன்மை கொண்டவையாக அமைந்துள்ளன.
11. வரலாற்று நிகழ்ச்சிகளும் புராண நிகழ்ச்சிகளும் இடம் பெற்றுள்ளன.

    உளவியல், மொழியியல் முதலான புதிய துறைகளுக்கு (கல்விக்கு) துணைக்கருவியாக விளங்கும்.

### 1.1.2. நாட்டுப்புறப் பாடல் வகைகள்

நாட்டுப்புறப் பாடல்கள் நாட்டுப்புற மக்களின் வளர்ச்சிக்கு ஏற்பப் பல்வேறு வகைப்பட்டதாக விளங்குகின்றன. பொதுவாக நாட்டுப்புறப் பாடல்களை,

1. குழந்தைப்பாடல்கள்
2. காதல் பாடல்கள்
3. தொழில் பாடல்கள்
4. கொண்டாட்டப் பாடல்கள்
5. பக்திப் பாடல்கள்
6. ஒப்பாரிப் பாடல்கள்
7. கதைப் பாடல்கள்
8. இதில் அடங்காத பிற பாடல்கள்[2]

என எண்வகையாகப் பிரிப்பது பொருத்தமாக உள்ளது.

## 1.2. நாட்டுப்புறப் பாடல்களுள் குழந்தைப் பாடல் பெறும் இடம்

எழுத்தறிவு இல்லாத நாட்டுப்புறத்து மக்களின் வாய்மொழியாக வந்தவையே குழந்தைப் பாடல்கள். ஆனாலும் அவை குழந்தைகளின் இன இயல்பை நன்கு உணர்ந்து பாடப்பட்டவை யாகும். குழந்தையின் ஒவ்வொரு பருவத்துக்கும் ஏற்றபடி அவை அமைந்து இருக்கின்றன. குழந்தைகளுக்கு எண்ணும் எழுத்தும் கற்பிக்கின்றன. மழலை மொழியில் அவைகளைப் பேச வைக்கின்றன. இயற்கை அறிவை வளர்க்கக் காரணமாக இருக்கின்றன. அவர்களை ஆட வைக்கின்றன; பாட வைக்கின்றன; சிரிக்கவும் சிந்திக்கவும் வைக்கின்றன. எதிர்காலச் சிந்தனைச் சிற்பிகளை உருவாக்க ஒரு காரணமாக இருக்கும் குழந்தைப் பாடல்கள் குழந்தைகளுக்கும் பெற்றோருக்கும் மற்றோருக்கும் மகிழ்வளிப்பதுடன் குழந்தைகளுக்குப் பயன்பாடுடையதாகவும் இலங்குவதால் மற்ற நாட்டுப்புறப் பாடல்களுள் இப்பாடல் வகை சிறப்பிடம் பெறுகிறது.

## 1.2.1. குழந்தைப் பாடல் வகைகள்

குழந்தைப் பாடல்களை ஆறு. அழகப்பன் மூன்று வகையாகப் பிரிக்கிறார். அவை வருமாறு:

1. குழந்தைக்குப் புரியும்படியாகக் குழந்தைப் பாடல்களைப் பாடுவது; அல்லது அப்பாடல்களை விடச் சிறிது தரம் உயர்ந்த பாடல்களைப் பெற்றோர்கள் அல்லது மற்றவர்கள் பாடுவது.

2. குழந்தைப் பாடல்களை குழந்தைகள் இயல்பாக இருக்கும் பொழுதும் அல்லது விளையாடும்பொழுதும் குழந்தைகளே பாடுவது.

3. குழந்தைக்காகத் தாய் தாலாட்டு இசைப்பது.[3]

பொதுவாகக் குழந்தைப் பாடல்களை,

1. குழந்தைகளே பாடுவது

2. பெற்றோரும் மற்றோரும் படைத்துக் குழந்தைக்குப் பழக்கப்படுத்திப் பின் அவர்களைப் பாட வைப்பது

3. தாய் குழந்தைக்காகத் தாலாட்டு இசைப்பது எனும் வகையிலும் பிரிக்கலாம்.

### 1.2.1.1. குழந்தைப் பாடல் வகைகளுள் தாலாட்டு பெறும் இடம்

'தாலாட்டு மனிதன் கேட்கும் முதல் பாட்டு. தொட்டில்தான் மனிதனின் ஆரம்பப் பள்ளி. அவன் தாய்தான் அவனுக்கு ஆசிரியர்' [4] என்கிறார் சண்முகசுந்தரம். இதை நோக்கக் குழந்தைப் பாடல் வகையுள்ளும் தாலாட்டு முதலிடம் பெறுகிறது.

*இருவர் கொள்ளும் காதலை விட உடன்பிறந்தவர் கொள்ளும்*
*வாஞ்சையை விட, நாடு, இனம், மொழியில் படியும்*
*பற்றுதலை விட உற்றார் உறவினர் காட்டும் அன்பினையும்விட*

*பிள்ளைப் பாசமே ஆழமானது; வலிமை மிக்கது; உணர்ச்சி மயமானது; இத்தகைய தாயும் சேயும் என்ற உறவுப் பிணைப்பிலே பிறந்த இயற்கைக் கலைதான் தாலாட்டு'*[5]

என்கிறார் தமிழண்ணல். உயர்ந்த உறவின்கண் எழுந்த அன்புணர்ச்சியில் வெளிப்பாடே தாலாட்டு. இப்பாடல்கள் விரிந்த விளக்கங்கள் எழுதக்கூடிய இலக்கியத் தரம் பெற்றவை. வளரும் குழந்தைகளை வளர்க்கும் சத்துள்ள உணவுகள் என்று சொல்லத் தக்க வகையில் தாலாட்டுப் பாடல்கள் சிறக்கின்றன.

### 1.2.1.2. தாலாட்டு சொற்பொருள் விளக்கம்

சென்னைப் பல்கலைக்கழகத்தாரால் 1956 -ல் வெளியிடப்பட்ட தமிழ் அகராதி 'தாலு' என்ற சொல்லுக்கு 'நாக்கு' என்று பொருள் கூறுகின்றது.[6] குழந்தைகளை உறங்க வைப்பதற்குத் தாய்மார்கள் நாவினை ஆட்டி அசைத்துப்பாடும் பாடல்களுக்குத் 'தாலாட்டு' எனப் பெயர் ஏற்பட்டு இருக்கலாம். தமிழில் தாலாட்டை ராராட்டு, ரோராட்டு, ஓராட்டு, தாராட்டு என மாவட்டத்திற்கு ஏற்ப வழங்குகின்றனர். இத்தாலாட்டுப் பாடல்களைத் தலைமையாகக் கொண்டு எழுந்த இடைக்காலத் தமிழிலக்கியங்கள் 'தாராட்டு' என்றும், பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தங்கள் 'தாலேலோ' என்றும் குறிப்பிட்டுள்ளன.

ஆங்கிலத்தில் தாலாட்டை 'lullabies, cradle songs, soothing songs ' எனச் சுட்டுகின்றனர். அழும் குழந்தைகளை அமைதிப் படுத்தும் நோக்கத்துடனும் உறங்க வைக்கும் நோக்கத்துடனும் பாடப்படும் சிறு பாடல்களுக்குத் தாலாட்டு என்று ஆங்கில அகராதி பொருள் கூறுகிறது Lull என்ற சொல்லுக்கு அமைதி என்று பொருள் கூறுகின்றது ஆங்கில அகராதி.[7]

### 1.2.1.3. தாலாட்டின் தோற்றத்திற்குக் காரணம்

குழந்தைகளுக்கு முதன் முதலில் புலனாகும் உணர்வுகளில்

கூர்மையானதும், ஆழமானதும், குறிப்பானதும் செவி உணர்வே. அவரவர் குரலைக் கொண்டே குழந்தை, தாயையும் பிறரையும் வேறுபடுத்தி உணர்கின்றது. இதனால்தான் குழந்தையின் கவனத்தைத் திருப்பவும் ஒரு நிலைப்படுத்தவும், அழுகையை நிறுத்தவும் அமைதிப் படுத்தவும் விரும்புவோர் முதலில் குரலைப் பயன்படுத்தி இருக்க வேண்டும். குழந்தை உலகில் தோன்றியதுமே ஆராரோ என்ற தாலாட்டிசையும் உடன் பிறந்து விடுகிறது எனலாம். 'தாலாட்டின் தோற்றத்தை ஆராயும்போது முதன்முதலில் ஒலிக்குறிப்பாகவே அமைந்து நாளடைவில் கருத்து விளக்கமாக அமைந்து இருக்கும் எனக் கருத இடமுள்ளது,[8] என சி.எம். பௌரா என்னும் அறிஞர் தமது நூலில் இக்கருத்தை வலியுறுத்துகின்றார்.

நாவசைத்துப் பாடும் பாடலில் தாலாட்டு என்பதற்கு இந்த ஒலிக்குறிப்பு துணை செய்கின்றது. தொட்டிலின் அசைவுக்குத் தக இந்த ஒலிகளும் நீட்டி இசைக்கப்படுவதால் குழந்தையின் கவனத்தை இழுக்கும் காந்தம் போன்று இவ்வொலிகள் அமைகின்றன எனலாம். தாலாட்டில் தொடக்கத்தை ஆராயும் போது தொடக்கத்தில் பொருளற்ற ஒலிகளை எழுப்பிக் குழந்தைகளை அமைதிப்படுத்தி இருக்கிறார்கள் என்பதனை உணரலாம். ராராரோ, ராரிரரோ, ஆராரோ, ஆரிரரோ என்ற பொருளற்ற ஒலிகளை முதலிலும் இறுதியிலும் பாடுவதை இன்றும் காணலாம். 'ஆராரோ என்பதனை உள்ள ஒலி' என்று கூறுவாரும் உளர்.[9] நாளடைவில் பொருளற்ற ஒலிகளின் பின்னால் பொருளுள்ள தொடர்கள் தாலாட்டில் இடம் பெற்றுச் சிறப்பதனைக் காணலாம்.

தாலாட்டின் தோற்றத்திற்குக் காரணம் கூறுகையில் ஆறு. அழகப்பன்,

*'தாலாட்டு ஊற்றெடுத்து ஆறாகப் பெருகி ஓட*
*அடிப்படை*

*சக்தி குழந்தையின் அழுகையே ஆகும்.*
*வயதானவர்களின்*

*அழுகை பொருளோடு அமைந்து இருக்கலாம். கண்ணகி,*
*சீதை, பாஞ்சாலி இவர்களின் அழுகை மதுரை, இலங்கை,*
*அத்தினாபுரம் ஆகிய இடங்களை அழித்தது. புரிந்து கொள்ள*
*முடியாத குழந்தையின் அழுகை தமிழை வளர்த்தது.*
*தாலாட்டுப் பாடலால் தமிழும் வளர்ந்திருக்கிறது.*[10]

என்கிறார்.

### 1.2.1.4. தாலாட்டு நின்று நிலவக் காரணம்

தொட்டிலில் சிறு குழந்தையைக் கிடத்தி, தாலாட்டைப் பாடும் தாய் மூன்று வயது வரை அக்குழந்தைக்குத் தாலாட்டைப் பாடி வருகின்றாள். எனவே தாலாட்டுக்கள் நாட்டுப்புறப் பாடல்களில் மறையாமல் நின்று நிலவ முடிகின்றது. அன்றியும் தாலாட்டு இசை மிக்கது. இசைக்கு மயங்காதார் யாரும் இல்லை. எனவே ஒரு தாய் தன் குழந்தைக்காகப் பாடும்பொழுது அதை அடுத்திருப்பவர் இசையொலியின் இனிமையால் கற்றுக் கொள்கின்றனர்.
அவர்கள் அப்பாடலைத் தமக்கு மகவு பிறந்தவுடன் பாடுகின்றனர். இது போன்று தாலாட்டு, பரவும் தன்மை பெற்றதால் இப்பாடல் வகை இன்றும் நின்று நிலவுகின்றது.

### 1.2.1.5. தாலாட்டு - இன்றைய நிலை

நாம் வாழும் இக்காலம் பரபரப்பான வேகம் நிறைந்த காலம். ஆண்களுக்கு நிகராகப் பெண்களும் வெளியில் சென்று வேலை பார்க்கும் காலம். குடும்ப வேலைகள் தவிர மற்ற வேலைகள் அன்றையப் பெண்களுக்கு இல்லை. ஆகவே தாலாட்டு இசைத்தார்கள். இன்று அவர்களுக்கு நேரம் கிடைப்பது அரிதாக உள்ளது. நல்ல குரல் உள்ளவர்களே பாடத்

தகுதியுடையவர்கள் எனத் தாழ்வு மனப்பான்மையை வளர்த்துக் கொண்டு அதன் காரணமாக நாணிப் பாடுவதும் இல்லை. இது உரைநடை உலகம். இந்நூற்றாண்டில் மொழி வளர்ச்சியில் ஏற்பட்டுள்ள இம்மாற்றம் தாலாட்டுப் பாடல்கள் தோன்றும் என்பவர்களுக்கு ஏமாற்றமாக அமையும்.

> *'புலவர்களால் உருவாக்கப்பட்டுக் கற்றவர்களால்*
> *காப்பாற்றப்படுபவை இலக்கியங்கள். பாமர*
> *மக்களால் உருவாக்கப்பட்டு அவர்களாலேயே*
> *காப்பாற்றப்படுபவை நாட்டுப்புறப் பாடல்கள்'*[11]

என்கிறார் ஆறு. அழகப்பன். மூதாதையர்களின் வாழ்வு உள்ளவரைதான் அவர்களால் நாட்டுப்புறப் பாடல்கள் காப்பாற்றப்படும். அவர்கள் வாழ்வு முடியும்போது அவர்களது வாய்மொழி இலக்கியமான நாட்டுப்புறப் பாடல்களும் மடிகின்றன. அவற்றைக் கற்றவர்கள்தான் இனிப் பாதுகாக்க வேண்டும்.

### 1.2.1.6. தாலாட்டின் இசை

தாலாட்டின் பண் நீலாம்பரி என்பர். ஆனால் தாலாட்டு இசைப்போர் இதே பண்ணில் பாடுகிறார்கள் எனக் கூறுதல் இயலாது. சொல்லோட்டத்தோடு அமையும் ஒலி முறையே தாலாட்டின் உயிராகும். வட்டாரத்துக்கு வட்டாரம் பேச்சும் ஒலியும் மாறுபாடு உடையனவாதலால் இசையும் மாறுபடும்.

### 1.2.1.7. தாலாட்டின் பொருளை வகை செய்தல்

தாலாட்டின் பாடற்பொருளை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. குழந்தையைப் பற்றியது
2. குழந்தைக்குரிமையான கருவிகள் பற்றியது[12]
3. குழந்தைகளின் உறவினரைப் பற்றியது.

இம்மூன்று பிரிவுகளன்றி மற்றொரு தனிப்பிரிவாகக் கடவுள் பற்றிய கதைத் தாலாட்டு அமைகிறது. இதில் சிறப்பாகக் கடவுள் பற்றிய கதை நிகழ்ச்சிகளைக் கோவையாகக் கூறிக் குழந்தையின் மனத்தில் தொடக்கத்திலேயே பக்திப் பண்பினை வளர்க்கிறார்கள். இதில் குழந்தைகள் பற்றிய செய்திகள் மிகுதியாக வருவது இல்லை.

குழந்தை பற்றிய பாடல்களில் பொதுவாக,

1. குழந்தை இல்லாதபோது தாய் பட்ட துன்பங்கள்
2. குழந்தைப் பேற்றை வேண்டிச் செய்த அறங்கள்
3. குழந்தை பெற்றபோது தாய் பெற்ற மகிழ்வு
4. குழந்தையின் அழுகைக்குக் காரணம் வினவல்
5. குழந்தை பிறந்ததன் காரணங்களை அடுக்கிச் சொல்லல்
6. குழந்தையை வருணித்தல்
7. குழந்தையின் ஒளிமிக்க எதிர்காலத்தை எண்ணுதல்
8. குழந்தை பேசுதலில் பெருவிருப்பம் கொண்ட தாய் குழந்தையிடம் பேசுதலும் கற்பனையாகக் குழந்தை அதற்குப் பதில் சொல்வதாக அமைத்தல் என்னும் பண்புகள் அமைந்துள்ளன.

குழந்தைக்குரிமையான பொருள்களைப் பற்றிய பாடல்களில்,

1. குழந்தைப் பொருள்களின் அழகும் உயர்வும் தேவையும் பேசப்படுகின்றன.
2. பரிசாக அளித்தவரோ அல்லது உயர்வாகச் செய்தவரோ பாராட்டப்படுகின்றனர்.[13]

உறவினர்களின் பெருமை பேசப்படுகின்ற பாடல்களில்,

1. வீரம்
2. பெருமை
3. அறம்[14]

முதலியவை சிறப்பிக்கப்படுகின்றன.

### 1.2.1.8. தாலாட்டின் அளவு

வாய்மொழியாக வழங்கும் தாலாட்டுப் பாடல்களில் கதைப் பாடல்கள் தவிர மற்ற பாடல்கள் குறுகிய அளவு உடையன. நினைவில் வைத்துக் கொள்ளத்தக்க நிகழ்ச்சி களாகவும் பொருள்களாகவும் அப்பாடல்கள் அமைந்து உள்ளன. குழந்தை இமை பொருந்தித் துயிலும்வரை தாயினால் தொடர்ந்து தாலாட்டு இசைக்கப்படும். ஆகவே தாயின் மன இயல்புக்கு ஏற்பவும் குழந்தையின் துயில் நிலைக்கு ஏற்பவும் பாடல்கள் குறுகியும் நீண்டும் அமைகின்றன.

### 1.2.1.9. தாலாட்டுப் பாடலின் தன்மைகள்

1. தாய்மை உணர்ச்சி பொங்கி வழியும் நீரூற்றாக இவை விளங்குகின்றன.

2. இசையோடு தாய்மார்களால் இசைக்கப்படுகின்றன.

3. பெண்களைச் சுற்றியுள்ள சமுதாயச் சிந்தனைகள் தெளிவாகின்றன.

4. அவர்களின் குடும்பப் பொருளாதார நிலை, கல்வி நிலை, வாழ்க்கை நிலை ஆகியவற்றையும் உணர்த்துகின்றன.

5. அவர்களின் பண்பாடு, பழக்க வழக்கங்கள், மரபுநிலை ஆகியவையும் எதிரொலிக்கின்றன.

6. தாய்மார்களின் சாதிக்கு ஏற்பவும், அவர்கள் வாழும் வட்டாரத்திற்கு ஏற்பவும் சொல்வழக்குகள் இடம் பெற்றுள்ளன.

7. கற்பனையும் கருத்தும் உண்மைத்தன்மையினின்று சற்று மேம்பட்டதாகத் தோன்றும்.

8. பழமொழியும் விடுகதையும் சில பாடல்களில் விரவியுள்ளன.

9. மணமுள்ள அழகிய மலர்கள் போன்று தாலாட்டுப் பாடல்கள் இலக்கியச்சுவையும் இலக்கியப்பயனும் ஒருங்கே பெற்றுச் சிறக்கின்றன.

10. அளவால் சிறியது; வந்த அடிகளே திரும்ப வருவது.

கதைத் தாலாட்டில் குழந்தையின் பெருமை, அக்குழந்தையின் உரிமைப் பொருள்கள் பிற உறவு முறைகள் வருவது இல்லை. கதை மெதுவாகச் செல்லாமல் வேகமாகச் செல்வதும், நாடகம் போல் பாட்டு வடிவில் உரையாடல்கள் வருவதும் இக்கதைத் தாலாட்டுக்களின் இயல்பாகும்.[15]

### 1.2.1.10. தாலாட்டு - ஒரு சிறந்த இலக்கியம்

வாய்மொழி இலக்கியங்கள் செயற்கையாக அமையாது பேச்சு வழக்கிலும் சிறிது அழகுடன் ஒரு கட்டுக்கோப்புடன் திகழுவதை நாம் காணலாம். உச்சரிப்புப் பாடல்கள், (tongue twisters) பழமொழி, நாடோடிக் கதைகள் போன்றவை உரைநடை வகையைச் சார்ந்தவை. தாலாட்டு, ஒப்பாரி, கும்மி, கதைப் பாடல்கள் (Ballad) போன்றவை கவிதைகளாக அமைபவை.[16] எப்படி இருப்பினும் இலக்கிய வகையுள் முதலாவதான கவிதை வகையைச் சார்ந்த தாலாட்டும் ஒப்பாரியும் நாட்டுப்புறப் பாடல்களுள் நல்ல மணமுள்ள இயற்கை மலர்களாக மலர்ந்து மணம் வீசுகின்றன. இவ்விரண்டினுள்ளும் தாலாட்டு, கவிதைக்குரிய உயரிய உணர்ச்சியையும் குழந்தைகளின் மனவளர்ச்சிக்கு ஏற்ற கருத்துக்களையும் அளவான கற்பனையும் வந்து இலக்கியப் பாக்களுக்குரிய தகுதியோடு வடிவ அமைதியும் பெற்றுச் சிறக்கிறது.



## அடிக்குறிப்புகள்

1. Mac Edward Leach, 'the men who made Folklore a scholarly Disciplin', American Folklore. (Washington, United States Information Agency), P.20.

2. ஆறு. இராமநாதன், 'தென்னார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள்', நாட்டுப்புற இயல் கருத்தரங்கு, (அடையாறு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 26-27 மார்ச் 1977) ப. 57.

3. ஆறு. அழகப்பன், நாட்டுப்புறப் பாடல்கள் - திறனாய்வு, (சென்னை, கழகம், 1973), ப. 14.

4. சு. சண்முகசுந்தரம், நாட்டுப்புற இயல் ஓர் அறிமுகம், (சென்னை, இலக்கிய மாணவர் மன்ற வெளியீடு, 1976) ப.32.

5. தமிழண்ணல், 'தாய்மை இலக்கியம்' தாலாட்டு மூன்றாம் பதிப்பு, (காரைக்குடி, பாவை நிலையம், 1963), ப. 11-12.

6. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி, தொகுதி - 3, ப. 1849.

7. Owen Watson (Editor), Longman Modern English Dictionary, Second Edition, London, Longman Group Ltd.,1976) p.657.

8. C.M. Bowra, Primitive Song, (London, Weiden Feld Nicolson, 1962), p.61.

9. கி.வா. ஜகந்நாதன், குழந்தை உலகம், (சென்னை, அமுத நிலையம், 1952), ப.5.

10. ஆறு. அழகப்பன், நாட்டுப்புறப் பாடல்கள் - திறனாய்வு, ப.17.

11. " " " ப.10.

12. பா.ரா. சுப்பிரமணியம், தமிழக நாட்டுப் பாடல்கள், சென்னை,

13. வானதி பதிப்பகம், 1978) ப. 182.

14 " " ப. 183.

15. ஆறு. அழகப்பன், நாட்டுப்புறப் பாடல்கள் திறனாய்வு ப.17.

16. தே. லூர்து, 'வாய்மொழி இலக்கியத்தின் இயல்பகளும் சில சிக்கல்களும்' நாட்டுப்புற இலக்கியப் பார்வைகள், (Madras, The Academy of Tamil Culture, 1974) pp.87-88



இயல் - 2

# செட்டிநாட்டுத் தாலாட்டு

இனிக்கும் தமிழில்
நினைத்து மகிழும்
தாலாட்டுப் பாடி
வருகிற தாய்க்குலம்
நிறைந்த நாடு.

-கண. சிற்சபேசன்.
நகரத்தார் வரலாறு
பக். 275.

# செட்டிநாட்டுத் தாலாட்டு

## முன்னுரை

தாலாட்டு, ஒப்பாரி போன்ற பாடல்கள் எல்லா இடங்களுக்கும் பொதுவாக இருந்தாலும் அவரவர் பண்பாட்டிற்கு ஏற்ப மாறுபட்ட இசையும், பொருளமைப்பும் உடையதாக இருக்கும். அவை பாடப்படும் நிலத்தின் தன்மைகளையும் அங்கு வாழும் மக்களையும் எதிரொலிப்பதாகவே இருப்பதைக் காணலாம். எனவே, நிலவியல் அறிவு பாடல்களைத் திரட்டுவதற்கும் வகைப்படுத்தி ஆய்வதற்கும் பெருந்துணை புரியும் என்பதில் ஐயமில்லை.

## 2.1. செட்டிநாட்டின் நில அமைப்பு

'வங்காளக் குடாக்கடலுக்கு மேற்கும் வைகை ஆற்றிற்கு வடக்கும் பிரான்மலைக்குக் கிழக்கும் வெள்ளாற்றுக்குத் தெற்குமாகிய இந்நான்கெல்லைக்கு உட்பட்ட பகுதியே 'செட்டிநாடு' என்று குறிக்கப்பெறுவது ஆகும். இருபுறம் ஆறுகள், ஒருபுறம் மலை, பிறிதொருபுறம் கடல் என இயற்கையான எல்லைகளைப் பெற்றுள்ளது செட்டிநாடு'.[1]

'தொண்ணூற்று ஆறு ஊர்கள் கொண்டு விளங்கிய செட்டிநாட்டில் இப்போது எழுபத்திரண்டு ஊர்களே உள்ளன. மற்றவை மறைந்து விட்டன. இவற்றுள் ஐம்பத்தெட்டு ஊர்கள் இராமநாதபுர மாவட்டத்திலும் எஞ்சிய இருபது ஊர்கள் திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலும் இருக்கின்றன.[2] இவற்றில் தேவகோட்டை, காரைக்குடி ஆகிய இரண்டு ஊர்களும் பெருநகரங்கள் ஆகும்.

### 2.1.1. செட்டிநாட்டு வளம்

'மலையாளம் பேய்ந்து விளைகிற சீமை', 'தஞ்சாவூர்

பாய்ந்து விளைகிற சீமை', 'இராமநாதபுரம் காய்ந்து விளைகிற சீமை' என்பது நாட்டுப்புற மக்களிடையே வழங்கிவரும் பழமொழியாகும். இராமநாதபுர மாவட்டத்தின் எஞ்சிய பகுதிகளில் உள்ள நீர்நிலைகள் கூடச் செட்டிநாட்டில் இல்லை. போதிய மழைவளமும் நீர்வளமும் இங்குக் கிடையாது. இவர்களைப் பற்றி கு.ப. ராஜகோபாலன்.

*'நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் கள்ளர் நாட்டைக் காட்டிலும் காடாரம்பம். அதனால்தான் அந்த வகுப்பினர் திரைகடலோடியும் திரவியம் தேட முற்பட்டார்கள்'*[3]

என்கிறார்.

செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்களிலும் இவர்கள் காட்டுப் பகுதியை நாட்டுப் பகுதியாக்கப் பாடுபட்டவர்கள் என்று பரக்கப் பேசப்படுவதைக் காணலாம். மலேயா நாட்டினரான எம்.என். மாலிக் என்பார்.

*'செட்டியார்கள் ஒரு சட்டையுடனும் வேஷ்டித் துண்டுடனும் இருக்கிறார்கள். நம்மைப் போல் உகோட்டும் சூட்டும் அணியவில்லை என்று கருத வேண்டாம். அவர்கள் செல்வத்தில் சிறந்தவர்கள். அவர்களால்தான் இம்மாலாயாவிலுள்ள காடுகள் எல்லாம் நாடாகியது. நாடெல்லாம் நகரமாகியது. அவர்கள் இந்நாட்டிற்கு வராதிருந்தால்; தங்கள் செல்வத்தைக் கண்டவர்களுக்கு எல்லாம் கொடுத்து உதவாது இருந்தால் இம்மலேயாவை நாம் இந்த நிலையில் காண முடியாது'*[4]

எனக் கூறுவதிலிருந்து இவர்கள் வாணிபம் செய்யச் சென்ற இடங்களில் கூடக் காட்டுப் பகுதியை நாட்டுப் பகுதியாக்கும் பணியில் ஈடுபட்டமை தெரிகிறது.

ஒரு நாட்டின் சிறப்பு அந்நாட்டின் நீர்வளம், நிலவளம் ஆகியவற்றைப் பொறுத்து இல்லை என்பதை,

*எவ்வழி நல்லவர் ஆடவர்*
*அவ்வழி நல்லை வாழிய நிலனே*

என்னும் ஔவையாரின் பாடலைக் கொண்டு தெரிந்து கொள்ள முடிகிறது. வறண்ட நில அமைப்பைக் கொண்ட இப் பகுதியிலும் தமிழ் விதை கருகிப் போகவில்லை என்பது இவர்களுடைய வாய்மொழிப் பாடல்களைக் காணும் பொழுது தெற்றெனத் தெரிகிறது. அவ்வப்போது தோன்றும் புலவர்களையும் புரவலர்களையும் நோக்கும்போது தமிழ் விதை நன்கு வேரூன்றிப் பச்சைப் பசுந்தளிராக வளர்ந்து தமிழுலகுக்குப் பயன் நல்குவதைக் காணலாம்.

## 2.1.2. செட்டிநாடு - பெயர்க் காரணம்

இந்நிலப் பகுதியில் பல்வேறுபட்ட இனத்தவர் வாழினும் நாட்டுக் கோட்டைச் செட்டியார் இனத்தவரே மிகுதியாக வாழ்கின்றனர். இவர்கள் மிகுதியாக வாழ்வதன் சிறப்பு நோக்கியே 'செட்டிநாடு' என்ற பெயர் ஏற்பட்டது எனலாம். 'செட்டி' என்ற சொல்லுக்கு வணிகம் என்ற ஒரு பொருளும் உண்டு. இதை நோக்க இவர்கள் வணிகம் செய்வதில் மிகப் பழம்பட்டவர்கள் என்ற குறிப்பும் தெரிகிறது. வேறு இனத்தவர் வாழும் எந்தப் பகுதிக்கும் அவர்கள் சாதிப்பெயரே நாட்டின் பெயராக வழங்குவதாகத் தெரியவில்லை.

நடுவிக்கோட்ட்டை, நாட்டரசன் கோட்டை, அலவாக் கோட்டை, பட்டுக்கோட்டை, புதுக்கோட்டை, என்பனபோல நாட்டுக்கோட்டை என முற்பெயர் படைத்த நிலமொன்றில் இவ்வினத்தவர் வாழ்ந்து இருக்கலாம். அதன் வழித் தோன்றலான செட்டியார்கள் தங்களை நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் என்று கூறிக்கொண்டு இருப்பார்கள். அப்பெயரே இன்று நிலைத்து விட்டது எனலாம். இவர்களை நகரத்தார் என்றும் கூறுவர். பூம்புகார் நகரம் பழங்காலத்தில் நகரம் என்றும் பட்டினம் என்றும் வழங்கப்பட்டது. காவிரிப்பூம்பட்டினம் கடல் கொள்ளப் பட்டபோது இவர்கள் அங்கிருந்து சிதறி மறவர் நாட்டில் குடியேறி

நகரங்களை உண்டாக்கியதாலும், பூம்புகார் நகரததிலிருநது வந்ததாலும் நகரத்தார் எனப் பெயர் பெற்றனர்.[6]

## 2.2. செட்டிநாட்டாரின் வாய்மொழிப் பாடலகள்

இப்பகுதியில் வழங்கும் நாட்டுப் பாடல்கள் அனைத்தையும் முழுமையாகத் தொகுத்து நூலாக வெளியிடவில்லை. தமிழண்ணல், சோமலெ, ஆறு. அழகப்பன் ஆகிய ஒரு சிலர் இப்பணியில் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் மற்ற நாட்டுப் பாடல்களுடன் இணைத்து வெளியிட்டுள்ளர். 'செட்டிநாட்டுத் தாலாட்டு' என்னும் பதினாறு பக்கம் கொண்ட சிறுநூலில் முப்பது பாடல்களை சோமலெ வெளியிட்டுள்ளார்.

செட்டிநாட்டாரின் வாய்மொழிப் பாடல்களுள் மிகவும் சிறப்பாக இலங்குவன தாலாட்டு, ஒப்பாரி, திருமணப் பாடல்கள் ஆகிய மூன்றுமே ஆகும். பக்திப் பாடல்கள், கொண்டாட்டப் பாடல்கள் போன்ற நாட்டுப் பாடல் வகைகளும் இவ்வினத்தாரால் பாடப் பெறுகின்றன. இவ்வினத்தாரிடம் காதல் பாடல்கள், தொழில் பாடல்கள் போன்ற பாடல்கள் இல்லை. இதற்குக் காரணம் இவர்கள் வயல் வரப்புக்களில், காடு மேடுகளில் மண்ணில் வேர்வை சிந்த வேலை செய்யும் தொழிலாளர்கள் அல்லர்.

பெண்கள் தம் கணவருடன் வாழும் வாழ்க்கை நாட்கள் மிகக் குறைவு. பொருள் ஈட்டும் நோக்குடன் ஆண்கள் வெளிநாடு சென்று விடுவார்கள். அக்காலத்தில் பெண்களை ஆடவர் வெளிநாடுகளுக்கு அழைத்துச் செல்வது இல்லை.

*'முந்நீர் வழக்கம் மகடுவோடில்லை'*[7]

என்ற தொல்காப்பிய மரபினைப் பெரிதும் ஏற்று அதன்வழி நடந்தவர்கள் என்பது தெரிகிறது. மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை தாயகம் வந்து தம் மனைவி மக்களுடன் ஓராண்டு தங்கிப் பின் மீண்டும் வெளிநாடு சென்று விடுவர். ஆகவே பெரும்பகுதி நேரம் தம் குழந்தைகளைக் கொஞ்சிக் காலம் கழிப்பதில்தான் மகிழ்வு எய்துகிறார்கள். எனவேதான் தாலாட்டு அவர்கள்

உள்ளத்தில் நீருற்றுப் போல அன்புடன் சுரப்பதைக் காண முடிகிறது. பிரிந்தவர்களை நினைக்கும் போதும் எண்ணிக் கலங்கும்போதும் இவர்கள் பெருந்துன்பத்திற்கு ஆளாகிறார்கள். அதன் வெளிப்பாடே ஒப்பாரி.

## 2.2.1. செட்டிநாட்டுத் தாலாட்டு

*'இனிக்கும் தமிழில் நினைத்து மகிழும் தாலாட்டுப் பாடிவருகிற தாய்க்குலம் நிறைந்த நாடு'*[8]

என இந்நாட்டுப் பெண்களின் சிறப்பு நிலையினைப் பாராட்டுகிறார் கணசிற்சபேசன். இப்பெண்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டு இறுதிவரை கல்வி கற்கச் சென்றது இல்லை. அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு என இவர்கள் பள்ளிக்குச் செல்லவில்லை. இருப்பினும் கவிநயம் நிறைந்த பாடல்களைக் கல்வி அறிவு இல்லாமலேயே பாடினார்கள்.

.......... .......... ..........

*எழுதப் படிக்க*
*எனக்குத் தெரியாது*
*நானா எடுத்து என்கண்ணே*
*ராராட்டாத்தான் படித்தேன்*
*ஐயனார் தன் கிருபை*
*அழகஞ் செட்டியார் தயவாலே*
*காளியாத்தாள் சம்மதத்தால்*
*கடவுள் அனுக்கிரகம்*
*கவியாய் அமைந்தது*[9]

என்ற கண்ணம்மை ஆச்சியின் பாடல் அடிகளை நோக்கும்போது இவ்வுண்மை புலப்படுகிறது. சோமலெ, செட்டிநாட்டுப் பெண்களைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

*'செட்டிநாட்டில் பெண் குழந்தைகளைப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பும் வழக்கம் 1930-இலேயே ஏற்பட்டது. அதற்கு முற்பட்ட காலத்தில்*

*பெண்கள் தொடக்கப் பள்ளிக்கூடப் படிப்புகூட இல்லாதிருந்தனர். அவ்வாறிருந்தும் கேள்வி அறிவாலும், உலகியல் அனுபவத்தாலும் பரம்பரை புலமையாலும், இலக்கிய மணம் கமழும் சொற்றொடர்களை அமைத்துப் பாடும்திறம்*
இவர்களிடம்
*இயல்பாக அமைந்திருக்கிறது. தங்கள்செல்வச் சிறுவர்கள் கண்ணயரப் பாடுகின்ற தாலாட்டுகளும், தம் உற்றார் உறவினைரைப் பறிகொடுத்து மனம் குமுறும் வேளையில் புலம்பும் ஒப்பாரிகளும் இவர்களது ஆற்றலுக்குச் சான்று பகர்கின்றன'*[10]
எனக் கூறுகின்றார்.

ஊர் பேர் தெரியாத செட்டிநாட்டு மூதாட்டியார் பாடிய தாலாட்டுக்கள் பல தலைமுறையாக வாய்மொழி மூலம் இன்றுவரை பரவி வாழுவதைக் காணலாம்.

### 2.2.2. செட்டிநாட்டுத் தாலாட்டு வகைகள்

1. தாய்மார்கள் வழிவழியாகப் பாடி வருவது ஒரு வகை.
2. தாலாட்டுப் பாட்டில் ஈடுபாடு கொண்ட தாய்மார்கள் இயற்றியவை மற்றொரு வகை.

மரபுக் கவிதைகள் என்று போற்றத்தக்க வகையில் இலக்கணப்பிழை இல்லாது பெண்கள் இயற்றிய தாலாட்டுகள் அமைந்துள்ளன. அழகஞ்செட்டியார் தாலாட்டு இவ்வாறு அமைந்துள்ளது. வாய்மொழித் தால்ாட்டுப் பாடல்களும் மரபுப் பாடல்களும் இங்கு ஆய்வுக்கு மேற்கொள்ளப்படுகிறன.

### 2.2.3. செட்டிநாட்டுத் தாலாட்டு - பொதுக்கூறு

மற்ற இடங்களில் பாடப்படும் தாலாட்டுகளைப் போலவே இப்பாடல்களிலும் அதில் பாடப்படும் பொருள் கூறுகள்

ஒத்துள்ளன. குழந்தையை வருணித்தல், குழந்தை வேண்டித் தாய் செய்த தவம், குழந்தையின் உறவினரைப் பேசுதல் ஆகிய இவை மூன்றும் செட்டிநாட்டுத் தாய்மாரின் வாய்மொழித் தாலாட்டுகளில் இயல்பாகக் காணப்படும் பொதுக்கூறுகள் ஆகும். அழகஞ் செட்டியார் தாலாட்டில் அழகஞ்செட்டியார் பெருமை, பள்ளத்தூர் படப்பு, இவை பொதுவாகப் பேசப்படுகின்றன. மொத்தத்தில் இவர்களது தாலாட்டுப் பாடல்கள் இவர்கள் பண்பாட்டிற்கு ஏற்பப் பாடல்கள் அமைந்து தனித்தன்மை பெறுவதனைக் காணலாம்.

### 2.2.4. செட்டிநாட்டுத் தாலாட்டின் சிறப்புக் கூறு

1. தாலாட்டின் இசை இவர்கள் பேச்சொலிக்கு ஏற்ப அமைந்துள்ளது.

2. தாலாட்டு 'ராராட்டு' என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

3. இவர்களது செல்வ நிலையை மிகுதிப்படுத்திக் காட்டும் வகையில் கற்பனைகள் அமைந்துள்ளன

4. இவர்களின் பேச்சு வழக்கு, பாடல்களில் சிறப்பாக இடம் பெற்றுள்ளது.

5. இவ்வினத்தவரின் உறவுமுறைப் பெயர்கள் சில பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

6. இப்பாடல்களில் இலக்கியத் தாக்குரவு மிகுதி. இப்பாடல்கள் சில இன்றைய திரைப்படப் பாடல்களில் சிறிது மாற்றத்துடன் இடம்பெற்றுச் சிறக்கிறது.

7. இவர்களது சமுதாய அமைப்பு எளிதில் புலப்படும் வண்ணம் தாலாட்டுப் பாடல்கள் அமைந்துள்ளன.

8. இவர்களின் சமய ஈடுபாடு பளிச்செனப் பாடல்களில் புலப்படுகிறது.

9. இவர்கள் அறநெறியில் நம்பிக்கையும், அறப்பணியில் ஈடுபாடும் கொண்டவர்கள் என்பது இப்பாடல்களில் தெளிவாகப் புலப்படும்.

10. செட்டிநாட்டுப் பெண்களின் உள்ளத்தைக் கவர்ந்த கதைகள் மகாபாரதம், இராமாயணம், திருவிளையாடற்புராணம், கந்த புராணம் எனச் சமயஞ் சார்ந்தவை. இக்கதைகளை இவர்தம் இனிய தாலாட்டுகளில் அமைத்துக் குழந்தைக்குப் பக்தி உணர்வினை ஊட்டுவர்.

## அடிக்குறிப்புகள்

1. சோமலெ, செட்டிநாடும் செந்தமிழும், இரண்டாம் பதிப்பு, (சென்னை, வானதி பதிப்பகம், 1960), ப.12.

*'வெள்ளாறது வடக்காமேற் குப்பிரான் மலையாந்*
*தெள்ளார் புனல்வைகை தெற்காகும்-*
*ரெட்டிக் கடற்கிழக்கா மிஃதன்றோ நாட்டரசன்சேர்*
*செட்டிநாட் டெல்லையெனச் செப்பு'*

இந்த எல்லைகள் பூங்குன்றை வேலங்குடிக் கல்வெட்டில் உள்ளன.

2. **Somalay, 'Chettinad the land and its people',** நகரத்தார் மாநில மாநாட்டு மலர், (சென்னை,1965) ப.297.

3. கு.ப. ராஜகோபாலன், 'திரைகடலோடியும் திரவியம் தேடும் வகுப்பினர்', சக்தி இதழ் செப்டம்பர் 1949, ப. 137-138

4. பெ. நா.மு. முத்து பழனியப்பச் செட்டியார், மலேயாவின் தோற்றம், (பினாங்கு, மெர்கெண்டைல் பிரஸ், 1938) ப.152.

5. ஔவையார், புறநானூறு, ஐந்தாம் பதிப்பு, (சென்னை, ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு, 1956) பாட்டு எண். 187.

6. சோமலெ, செட்டிநாடும் செந்தமிழும், ப.16.

7. இளம்பூரணர் (உ.ஆ.) 'பொருளதிகாரம்', <u>தொல்காப்பியம்</u>, (சென்னை, கழக வெளியீடு, 1974) ப.35.

8. சேஷாத்ரி சர்மா (ப.ஆ.) <u>நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு</u>, (சென்னை, வானதி பதிப்பகம், 1970) ப. 275.

9. இணைப்பு - 2, நூ. எ.பா. 6.

10. சோமலெ, செட்டிநாடும் செந்தமிழும், ப. 197.

இயல் - 3

# செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்கள் - இலக்கிய நயம்

தாலாட்டுப் பாடல்கள் நடையழகில் ஜெயங்கொண்டானையும், இனிமையில் இளங்கோவையும், கற்பனையில் கம்பனையும், சொல்லாட்சியில் மணிவாசகரையும், நாகரிக விளக்கத்தில் சங்க காலப் புலவர்களையும் ஒப்புமையாகப் பெற்றுப் பெருமையுடன் விளங்குகின்றன.

-தமிழண்ணல், (தொ.ஆ.) தாலாட்டு,
பக். 21.

# செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்கள் - இலக்கிய நயம்

**3.** இலக்கியத்தின் குழந்தை பருவம் எனக் கூறப்படுவது நாட்டுப்புறப் பாடல்கள். அவற்றுள் ஒரு சிறுவகை தாலாட்டு. இவை கவிநயம் மிக்கவை.

*"தாலாட்டுப்பாடல்கள் நடைஅழகில்*
*ஜெயங்கொண்டானையும்,*
*இனிமையில் இளங்கோவையும், கற்பனையில்*
*கம்பனையும்,*
*சொல்லாட்சியில் மணிவாசகரையும், நாகரிக விளக்கத்தில்*
*சங்க காலப் புலவர்களையும் ஒப்புமையாகப் பெற்றுப்*
*பெருமையுடன் விளங்குகின்றன".*[1]

செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்களில் உணர்ச்சி, கற்பனை, ஒலிநயம், எதுகை, மோனை முதலிய தொடை அமைப்பு, சொல்லாட்சி, உவமை, உருவகம், அடைவளம், நடை, எண்வகைச் சுவைகள், கருத்து நலன், உத்தி நலன் ஆகிய இலக்கிய நயங்கள் பெற்றுச் சிறக்கின்றன.

## 3.1 உணர்ச்சி

உணர்வுதான் கவிதை பிறக்கத் தூண்டுவது என்பது மறுக்கவியலாத உண்மை. கல்வி அறிவில்லாத செட்டிநாட்டுப் பெண்களிடையே கவிதை அருவி பாய்கிறது என்றால் கண்ணுக்குத் தெரியாத அவர்களது தாய்மை உணர்ச்சிதான் அடிப்படைக் காரணமாக விளங்குகிறது.

பின்வரும் ஐந்து வகையாக அமைந்த உணர்ச்சிகளுடைய இலக்கியம் நெடிது வாழும் என வின்செஸ்டர் கருதுகிறார்.

1. நியாயமான, தக்க உணர்ச்சி, நல்ல காரணத்திற்காக நல்ல முறையில் அமைவது.

2. ஆற்றலுள்ள உணர்ச்சி, ஆசிரியரின் உள்ளதது உண்மையை ஒட்டியது; ஆழம் உடையது.

3. தொடர்ந்து ஒரு நிலையாக அமையும் உணர்ச்சி பொருந்தாததும் வேண்டாததும் இடையில் புகாதவாறு அமைவது. வலிந்து கொண்டு வரப்படாமல் இயல்பாக அமைவது.

4. வாழ்க்கையில் பல கோணங்களை விளக்குமாறு பலவகை உணர்ச்சிகள் கூடி அமைதல்

5. மிக விழுமிய உணர்ச்சியாய் அமைதல்; பொருள்கள் காரணமாக அமையும் உணர்ச்சிகளை விட உயர்வு உடையதாய் நீதியின் காரணமாகவோ, அறத்தின் காரணமாகவோ அமைதல்.[2]

செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்களில் உணர்ச்சிப் பெருக்கினைக் காணும் போது அதற்கு மூல ஊற்று தாய்மை ஊற்று என்பது புலப்படுகிறது. இவ்வைந்து வகையுள் தாலாட்டுப் பாடல்கள் நியாயமான உணர்ச்சியாகவும், ஆற்றலுள்ள உணர்ச்சியாகவும் எழுவதைக் காணலாம்.

இப்பாடல்களில் உணர்ச்சி வெளிப்பாடுகளை நோக்கும்போது இவர்கள் சாதிக்கு ஏற்பவும், இவர்களைச் சுற்றியுள்ள சமுதாயச் சிந்தனைக்கு ஏற்பவும், இவர்களுடைய அனுபவத்திற்கு ஏற்பவும் உள்ளதைக் காணலாம்.

செட்டிநாட்டுத் தாலாட்டில் காணப்படும் உணர்ச்சிகளைத் தாய்மை உணர்ச்சி, உறவினர்களிடம் கொண்ட அன்புணர்ச்சி, பக்தி உணர்ச்சி என மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

### 3.1.1. தாய்மை உணர்ச்சி

தாய்மை உணர்ச்சியைப பிறப்பிடமாகக் கொண்டு தோன்றும் உணர்ச்சிகள் குழந்தைப் பேற்றினை அடைந்தபோது உண்டான உவகை உணர்ச்சி, குழந்தைப் பேற்றினை அடையாதபோது ஏற்பட்ட அவல உணர்சசி என இரண்டு வகையாகக் காணப்படுகிறது.

### 3.1.1.1. குழந்தைப் பேற்றினை அடைந்தபோது உண்டான உவகை உணர்ச்சி

தவம் செய்து கிடைத்த குழந்தையாதலால் அதனைத் தெய்வம் கொடுத்த பரிசாக எண்ணி மகிழ்கிறாள்.

*மலைமேல் தவமிருந்த எனக்கு*
*மயிலேறி வந்தவனோ*[3]

என்று பாடுமிடத்து இவ்வகை உணர்ச்சியினைக் காணலாம். அரசாளப் பிறந்தவன் என்றும், முப்பாட்டன் ஆண்ட முகப்பும், தலைக்கடையும், தப்பாமல் ஆள வந்தவன் என்றும், உவகைப் பெருக்கோடு பாடுகின்றாள். தாய்மை உணர்ச்சிப் பெருக்கினால் குழந்தையை முத்தாகவும், மணியாகவும், சந்தனமாகவும், நவரத்தினமாகவும் உருவகப்படுத்தித் தன் உணர்ச்சியை வெளியிடுகின்றாள்.

உவகை உணர்ச்சியோடு குழந்தைக்கு இறைவன்தான் காவல் என்று பாடும்போது அவளுடைய காப்புணர்ச்சியும் வெளிப்படுவதைக் காணலாம்.[4]

### 3.1.1.2. குழந்தைப் பேற்றை அடையாத போது தாய் பெற்ற அவல உணர்ச்சி

கூட்டுக் குடும்பத்தில் வாழக்கூடிய சூழ்நிலையைப் பெற்றவர்கள் செட்டிநாட்டுப் பெண்கள். இம்மாதிரி கூட்டுக் குடும்பத்தில் வாழ்பவர்கள் குழந்தைப் பேறு அடையாவிட்டால் உறவினர்களும், மற்றவர்களும் அவளை இழிவாகப் பேசித் துன்பம் அடைய வைக்கின்றனர். எனவே தான் மலடி என்ற சொல்லை மாற்றப் பிறந்தவன் என்றும், தவமிருந்து வந்தவன் என்றும் வேண்டுதலின் பேரில் பிறந்தவன் என்றும் பாடும்போது குழந்தைப் பேற்றை அடையாதபோது அவள் உள்ளத்திருந்த அவல உணர்ச்சியை எடுத்துக் காட்டுவனவாக உள்ளன.[5]

### 3.1.2 உறவினரிடம் கொண்ட அன்புணர்ச்சி

குழந்தை மேல் மாமன், பாட்டன்மார் ஆகிய இருவரும் மிகுதியாக அன்பு வைத்திருந்தமையும்; தாய்க்குத் தன் உறவினர் மேல் கொண்ட அன்புணர்ச்சியையும் தாலாட்டுப் பாடல்களில் காண முடிகிறது.

<u>**பாட்டன்மார்:-**</u> பாட்டன்மார் குழந்தை மேல் கொண்ட பாச உணர்ச்சியை அழகிய கற்பனையாக வடித்துப் பாடுகிறார்.

*காய்ந்த நீராடினால் கறுக்கும் திருமேனி என்று*
*குளிர்ந்த நீராடினால் கூதல் அடிக்கும் என்று*
*பாதாளம் வெட்டி படிகொண்டார் பாட்டன்மார்.*[6]

<u>**மாமன்:-**</u> தாய் தன் உடன்பிறப்பாளனைப் பற்றிப் பெருமை பேசும் இடங்களில் அவளுடைய அன்புணர்ச்சியை வெளியிடுகின்றாள்.

*ஏலக்காய் காய்க்கும்*
*எழுநூறு பிஞ்சுவிடும்*
*சாதிக்காய் காய்க்கும்*
*தாய்மாமன் எல்லையிலே*[7]

எனப் பாடும்போது உடன் பிறந்தவனின் நல்ல உள்ளத்தினால் அவன் தொட்டது எல்லாம் துலங்கும் எனப் பாடுகிறாள். மாமன் குழந்தை மேல் கொண்ட பாச உணர்ச்சியினை அவன் குழந்தைக்காகக் கொண்டு வரும் பொருள்களைக் கொண்டே தெரிந்து கொள்ள முடிகிறது.

<u>**கணவன்:-**</u>

"வெள்ளித்தேர் பூட்டி
மேகம் போல் மாடுகட்டி
*அள்ளிப் படியளக்கும்*
*அதிட்டமுள்ளார் புத்திரனோ*[8]

என்று பாடும்போது கணவனின் வள்ளல் தன்மையினைப் புகழ்ந்து பேசித் தன் உணர்ச்சியை வெளியிடுகின்றாள். வெள்ளித் தேர் பூட்டி மேகம் போல் மாடு கட்டி எனக் கற்பனைச் சுவைபடப் பாடி உணர்ச்சியை மிகுவிக்கும் போக்கினை இப்பாடலில் காணலாம்.

### 3.1.3. பக்தி உணர்ச்சி

குழந்தைக்குப் பக்தி உணர்ச்சியை வளர்ப்பதற்காகவும், தான் கொண்ட உணர்ச்சியின் மேம்பாட்டினாலும் இவ்வித உணர்ச்சி செட்டிநாட்டுத் தாலாட்டில் மிகுதியாகக் காணப்படுகிறது.

குழந்தையை இறைவனின் திருவுருவமாகவும், இறைவனின் குழந்தையாகவும் உருவகம் செய்து தன் உணர்ச்சியை வெளியிடுகின்றாள்.

*பூவெடுத்துப் பூசை செய்யப்*
*புண்ணியனாய் வந்தவனோ*[9]

என்று பாடுமிடத்துக் குழந்தையை இறை உணர்வோடு வளர்க்க முதலிலே அவனுடைய எதிர்காலச் செயலினைத் தாலாட்டில் வடித்துப் பாடுவதனைக் காணலாம்.

## 3.2 கற்பனை

புறக்கண் கண்ட காட்சிக்கு நுட்பமான உணர்ச்சி ஊட்டி அகக்கண் காணுமாறு செய்யும் ஆற்றலே கற்பனை ஆகும்.[10]

செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்களில் கற்பனை உண்மைத் தன்மையினின்று சிறிது மேம்பட்டதாக உயர்வு நவிற்சி தோன்றும் வண்ணம் அமைந்துள்ளதைக் காணலாம்.

### 3.2.1 படைப்புக் கற்பனை

உள்ளத்தில் உணர்வுடன் எழுந்த ஊற்றைப் புலவன் தன் கவிதை ஆற்றலால் படைத்துக் காட்டுவது இவ்வகைக் கற்பனையாகும். இல்லன படைத்தல் போக்கில்,

*ஆத்துக்குள்ளே அம்பூனி*
*அந்தரங்கமாய் தொட்டிகட்டி*
*காத்து வந்து வீசவே*
*கருணமவ கண்ணசர*[11]

என இப்பாடல் அமைந்துள்ளது. தன் குழந்தை யார் கண்ணிலும் படாமல் ஆத்துக்குள் தொட்டி கட்டி, உள்ளேயும் காற்று வந்து வீசக் குழந்தையும் தூங்க வேண்டும் என விரும்புகின்றாள். இதனைக் கற்பனைக் கண்ணோடு படைத்து வெளியிடுகின்றாள்.

### 3.2.2. கருத்து விளக்கக் கற்பனை

புலவன் தான் கொண்ட கருத்தினை விளக்கக் கற்பனையைப் பயன்படுத்திக் காட்டுதல் ஒருவகைக் கற்பனையாகும்.

*நாலாறு புன்னைமரம்*
*அதிலே அடைகாக்கும்*
*ஐந்துதலைப் பூநாகம்*
*சீறிச்சாம் பூநாகம்*
*சிவந்துதாம் கண்களிரண்டும்*
*ஆறிச்சாம் கோபம்*
*ஐயா மடிதனிலே*[12]

என்ற பாடலில் ஐயாவின் மடியில் அமரும்போது ஐந்துதலைப் பூநாகத்தின் சீற்றம் கூட அடங்கி விடும் எனப் பாட்டன்மாரின் பேரன்பினையும், அடக்கி ஆளும் திறனையும் கருத்தாக விளக்க இக்கற்பனையைக் கையாள்கிறாள்.

### 3.2.3. இயைபுக் கற்பனை

இரண்டு பொருள்களைக் கொண்டு இரண்டிற்குமுள்ள இயைபினைக் கூறி விளக்குதல் இயைபுப் கற்பனை எனப்படும்.

*திருநீறு தந்தால் என் கண்ணே*
*செலவழிந்து போகுமென்று*
*திருக்காதுக் குண்டலத்தை*
*சிறப்பாகத் தந்தாரோ*[13]

எனப் பாடும்போது குழந்தையைத் திருநீறு எனவும் இறைவனின் திருக்காதுக் குண்டலம் எனவும் உருவகப்படுத்திப் பேசுகிறாள். இரண்டிற்கும் உள்ள வேற்றுமையை விளக்கிக் குழந்தையைத் திருக்காதுக் குண்டலம் எனச் சிறப்பு உருவகப்படுத்தி அதன் பெருமையினையும் சிறப்பினையும் அறியச் செய்கிறார்.

### 3.2.4. குழந்தை பற்றி எழுந்த கற்பனை

தாலாட்டுப் பாடல்களில் குழந்தையை வருணிக்கும் இடத்தும், உருவகப்படுத்தும் இடத்தும், குழந்தையிடத்துத் தாய் பேச வேண்டும் என்று விரும்பிய இடத்தும் சிறந்த கற்பனைகள் உருவாவதைக் காண முடிகிறது.

குழந்தையின் முகத்தை அன்றலர்ந்த போதாய் நினைக்கிறாள் தாய். உடனே,

*ஆச்சி மடியிருக்க அருக ணைந்த வண்ணாத்திப்*
*பூச்சியும் உன் முகத்தைப் போதாய் நினைந்ததுவோ*[14]

எனக் கற்பனை நயம் சிறக்கப் பாடுகிறாள்.

*அழுதால் அரும்புதிரும்*
*அண்ணாந்தால் பொன்சிதறும்*[15]

எனப்பாடும்போது கற்பனையில் உயர்வு நவிற்சியினைக் காணுவதோடு குழந்தையின் மேல் தாய் கொண்ட பேரன்பினையும் ஒருங்கே இப்பாடல் புலப்படுத்துகிறது.

குழந்தையிடத்துத் தாய் பேசுவதாகவும், குழந்தை அதற்குப் பதில் கூறுவதாகவும் தாய் கற்பித்துப் பாடும் பாடல்கள் கற்பனைச் சுவை நிறைந்தவை.[16]

## 3.3. வடிவம்

பொதுவாகவே நாட்டுப் பாடல்களில் நாம் செய்யுள் இலக்கணம் பார்த்தல் ஆகாது. ஆனாலும் நாட்டுப் பாடல்களுள் தாலாட்டு, ஒப்பாரி, கதைப் பாடல்கள், கும்மி முதலானவை இலக்கிய நயம் மிகுந்து கவிதைச் சுவையை நல்குகின்றன.

தாலாட்டுப் பாடல்கள் இரண்டினைத் தாழிசை ஆகும் என்றும் குறளடி முதல் எல்லா அடிகளாலும் ஒரெதுகையுடைய அளவடி இரண்டாய்ப் பலவகை ஓசை வேறுபாட்டுடன் வரும் ஒவ்வொன்றும் கண்ணி ஆகும்[17] என்றும் அ.கி. பரந்தாமனார் தாலாட்டுப் பாடலுக்கு இலக்கணம் கூறுகிறார். இக்கூற்றுக்கேற்பச்

செட்டிநாட்டுத் தாலாட்டில் காணப்படும் ஐம்பத்தி மூன்று கண்ணிகள் கொண்ட தாலாட்டுப் பாடல் மரபுப் பாடல் இலக்கணம் கொண்டு சிறப்புடன் விளங்குகிறது.[18] பள்ளத்தூர் அழகஞ் செட்டியார் தாலாட்டு மரபுப் பாடலில் விருத்த வகை போன்று அமைந்துள்ளது.[19]

வள்ளி கதைத் தாலாட்டு தாழிசை வடிவங் கொண்டு தொடர்ந்து கதைப் பாடலாக அமைந்து சிறக்கிறது.[20]

மற்றப் பாடல்கள் அ.கி. பரந்தாமனார் கூறுவது போன்ற பண்பினைப் பெற்றுச் சிறக்கின்றன.

### 3.3.1. எதுகை, மோனை முதலிய தொடை அமைப்பு

செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்களில் எதுகை, மோனை போன்ற தொடை அமைப்புக்கள் இயல்பாக அமைந்து பாடலின் ஒலிநயத்தை மிகுவிப்பதைக் காணலாம்.

<u>அடிமோனை:-</u> அடிதோறும் முதல் எழுத்து ஒன்றிவரத் தொடுப்பது அடிமோனை எனப்படும்.[21]

*தங்க முத்தாம் தாவடமாம்*
*தனுஷ்கோடி இராமருக்கு*[22]

என்ற பாடலின் அடிமோனை அமைந்து ஒலிநயம் சிறப்பதைக் காணலாம்.

<u>அடிஎதுகை:-</u> அடிதோறும் முதற்கண் இரண்டாம் எழுத் ஒன்றிவரத் தொடுப்பது அடி எதுகை எனப்படும்.[23]

*பஞ்சு மெத்தை மேலிருந்து - இராமர்*
*பஞ்சாங்கம் பார்க்கையிலே*[24]

என அமைந்த பாடலின் அடிஎதுகை அமைந்து சிறப்பதைக் காணலாம்.

<u>அடி இயைபு:</u> அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தானும், அடியானும், சீரானும் தம்முள் ஒன்றி வரத் தொடுப்பது அடி இயைபு எனப்படும்.[25]

முத்தில் ஒரு முத்தோ
முதிர விளைந்த முத்தோ
தேற விளைந்த முத்தோ
தில்லைக் குகந்த முத்தோ[26]

என இப்பாடல் அடி இயைபுத் தொடை இயல்பாய் அமைந்து ஓசை சிறப்பதனைக் காணலாம்.

<u>அடிமுரண்:-</u> அடிதோறும் முதற்கண் சொல்லாலும், பொருளாலும் மறுதலைப்படத் தொடுப்பது அடிமுரண் தொடை ஆகும்.[27]

ஏறுடா இராவணா
இறங்குடா மேடை விட்டு[28]

எனப்பாடும் இடங்களில் இவ்விதத் தொடை அமைந்து பொருள் சுவையினை நல்குகிறது.

<u>அந்தாதித் தொடை:-</u> அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தாலும், அசையாலும், சீராலும் அடியாலும் மற்றைய அடிக்கு ஆதியாகத் தொடுப்பது அந்தாதித் தொடை எனப்படும்.[29]

தூங்காத கண்ணுக்கு - என் கண்ணே
துரும்பு கொண்டு மையெழுதி
மையெழுதிப் பொட்டுமிட்டு[30]

என அமைந்த பாடல் அடிகளில் இவ்வகைத் தொடை அமைப்பு அமைந்திருப்பதனைக் காணலாம்.

செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்களில் தொடை அமைப்பில் எதுகை, மோனை, அடிஇயைபு ஆகிய மூன்றும் நிறைந்த பாடல்களில் இயல்பாக அமைந்து பாடலுக்கு உணர்ச்சியும் ஒலியும் உண்டாக்குவதைக் காண முடிகிறது.

## 3.4. ஒலிநயம்

தாயின் தாலாட்டைக் கேட்டவுடன் அல்லது தொட்டிலின் கண் ஒழுங்கான அசைவை அறிந்தவுடன் அல்லது தாயின் கை தன் முதுகை மெல்லத் தட்டும் ஒழுங்கை உணர்ந்தவுடன் குழந்தையின் மனம் உறக்கத்தில் ஈடுபடத் தொடங்குகிறது. படிப்பவரின் மனம்

அறிவையும், ஆராய்ச்சியையும் கைவிட்டு உணர்ச்சியையும், கற்பனையையும் நாடத் தொடங்கல் வேண்டும். கனவு உலகத்தை விட்டு வேறொரு கற்பனை உலகில் நடக்கத் தொடங்குகிறோம் என்பதை ஒலிநயம் நினைவூட்டுவதாக அமைகிறது.[31] முதலில் தாலாட்டு, பொருளுக்குச் சிறப்புத்தன்மை கொடுக்காமல் ஒலியின் அடிப்படையிலே எழுந்தது என்பர். எனவே தாலாட்டுக்குப் பொருளை விட ஒலிநயம் இன்றியமையாதது. பின்னர் ஒலி நயத்தோடு பொருளுக்குச் சிறப்புக் கொடுத்துப் பாடல் எழுந்தபோது தாலாட்டின் சிறப்புப் பன்மடங்காகத் தெரிவதைக் காணலாம்.

*கால் மிஞ்சி மின்ன*
*கடுக்கஞ் சவடி மின்ன*
*மார்பதைக்க மின்ன*
*வருகிறவன் யாரு மகன்*
*இன்னார் மகனோ*
*இந்திரன் பேரனோ*
*மன்னர் மகனோ*
*மகராசப் பேரனோ*[32]

என்று படிக்கின்ற போது அணிகலன்களை அணிந்து குழந்தை தளர்நடை போட்டு வருவது போன்ற ஓர் ஒலிநயத்தைப் பெற முடிகிறது.

*பம்பரமோ எம்பரமோ*
*பரமசிவர் தந்த கண்ணோ*
*எம்பரமோ பம்பரமோ*
*ஈசுவரனார் தந்த கண்ணோ*[33]

என்ற பாடலைப் படிக்கின்ற போது பம்பரம் சுழல்வது போன்ற ஓர் ஒலிநயம் பிறப்பதைக் காணலாம்.

*உழக்கு தினை விதைத்து - வள்ளி*
*உத்தமியைக் காவல் வைக்க - வள்ளி*
*ஓடிக் கிளி விரட்டி*
*பதக்கு தினை விதைத்து - வள்ளி*

*பத்தினியைக் காவல் வைக்க - வள்ளி*
*பறந்து கிளி விரட்டி*
*நாழித் தினை விதைத்து - வள்ளி*
*நாயகியைக் காவல் வைக்க - வள்ளி*
*நடந்து கிளி விரட்டி*
*குறுணித் தினை விதைத்து - வள்ளி*
*கொம்பனையைக் காவல் வைக்க*[34]

என்ற பாடல் அடிகளில் உழக்கு, பதக்கு, நாழி, குறுணி முதலிய அளவைப் பெயர்களை அடுக்கிப் பாட்டை அழகுப்படுத்தி உள்ளதுடன் ஒரு பொருள்டக்கி வரும் தாழிசை முதலிய பாவினங்களைப் போல, அமைந்து ஓசைநயத்தை மிகுவிக்கச் செய்கிறது: இவ்வாறு ஒரே பொருளைத் திரும்பத் திரும்பப் பாடுவதால் இசை இனிமை பெறுவதோடு அலை மடிந்து மடிந்து வீசுவதைப் போலவும், ஊஞ்சல் சென்று சென்று மீளுவதைப் போலவும் பாடல் அடிகள் அமைந்து குழந்தைக்கு உறக்க உணர்ச்சியை ஊட்டுகின்றன.

## 3.5. உவமை நலம்

சிறந்த கவிஞன் தான் கண்டவற்றையும் கேட்ட வற்றையும் அறிந்தவற்றையும் அனுபவித்தவற்றையும் கொண்டு அவற்றினிடையே உள்ள ஒப்புமையை விளக்கிக் காட்டிக் கவிதையைச் சுவைபடச் செய்கிறான்.

குழந்தையின் விளையாட்டை விளக்குதற்கு,

*பூத்த புளியருகே பொன்னு பதிச்ச பம்பரம் போல்*
*ஆக்க விளையாண்டு வேக்குதுண்ணு வந்தானோ*[35]

எனப் பாடுமிடத்துப் பொன்னு பதிச்ச பம்பரம் போல் என்ற உவமை கையாளப்பட்டுள்ளது. பொன்னு பதிச்ச பம்பரம் தோற்றப் பொலிவில் சிறப்பதுடன் செல்வ நிலையையும் ஒருங்கே காட்டுகிறது. குழந்தை தோற்றப் பொலிவிலும், செல்வ நிலையிலும் சிறந்துள்ள தன்மையை விளக்க அழகிய உவமையைக்காட்டிக் கவியைச் சிறக்க செய்கிறாள் செட்டிநாட்டுத் தாய்.

### 3.5.1. ஆண்கள் பற்றிய உவமைகள்

செட்டிநாட்டு ஆண்களின் பெருமையினை விளக்கும் வகையில் 'மந்திரி போல் ஆடவரும்'[36] என்ற உவமை பேசப்படுகிறது.

வரலாற்றுச் சிறப்புப் பெற்ற கட்டபொம்மனைத் தம் குழந்தையோடு ஒப்பிட்டுப் பேசத் தாயின் மனம் விரும்புகிறது. எனவே வீரமிக்க,

*கட்டபொம்மு போல என்கண்ணே*
*கட்டழகா வாழ்ந்திருப்பாய்*[37]

என்கிறாள்.

### 3.5.2. பெண்கள் பற்றிய உவமைகள்

செட்டிநாட்டுப் பெண்களின் குரலினிமையைக் கூற வேண்டி, 'குயில்மொழி போல் பெண்டுகளும்'[38] எனப் பாடுகிறாள். பெண்களின் மொழியைக் குயிலுக்கு ஒப்பிடுதல் சங்க காலத்திற்கு முன்பிருந்தே காணப்படுகிறது. அதன் தாக்கம் இவர்களையும் இவ்வாறு கூற வைக்கிறது.

அதே போல் பெண்களின் விழியினை வேலுக்கு ஒப்பிடுதல் மரபு ஆகும். இதனையும் 'வேல் போல் விழியுடைய கோரக்கச் சரமக்களும்'[39] எனப் பாடுவதிலிருந்து தெய்வானையின் கண்ணழகு இங்குத் தெரிகிறது.

### 3.5.3. பக்தி உணர்ச்சியைக் காட்ட வரும் உவமைகள்

செட்டிநாட்டுப் பெண்களுக்கு இறைப்பற்று மிகுதி. எனவே இதற்கேற்ப உவமையும் பக்தி உணர்வு அடிப்படையில் எழுகிறது.

*கும்பாபிஷேகம் போல் கூட்டம் ரொம்ப வந்திருக்கும்*[40]
*கோபுரம் போல் போர் ஏறும்*[41]

என்பன பக்தி அடிப்படையில் எழும் நிகழ்ச்சிகளை உவமைகளாகக் கொண்டு பொருளைச் சிறக்கச் செய்வதனைக் காணலாம்.

### 3.5.4. இயற்கை உவமைகள்

இயற்கையைப் பாடுவதில் பெருவிருப்பம் கொள்வர் கவிஞர் இலையின் மென்மைத் தன்மையை உணர்ந்த செட்டிநாட்டுத் தாய்,

*இலைபோல் அவலிடித்து*[42]

என்ற உவமையைக் கூறிப் பொருளை விளக்குகிறாள்.

குழந்தையை வனக்குருவியாக உவமிக்கிறாள்.

*வனக்குருவி போல வந்து என்*
*மனக்கவலை தீர்த்தாயோ*[43]

எனப் பாடுமிடத்துக் காட்டிலிருக்கும் குருவி கைக்கு வந்த மகிழ்ச்சியில் பாடும் தாயின் உள்ளம் தெரிகிறது.

## 3.6. உருவகச் சிறப்பு

ஒரு பொருளின் சிறப்பினைக் கண்டு மற்றொரு பொருளின் அழகை நினைந்து அதனை இதனோடு ஒப்பிடுதல் உவமை எனப்படும். இதே மனநிலை மேலும் சிறிது வளர்ந்து இரண்டு பொருளையும் வேறுவேறாகக் காணாமல் ஒன்றிலேயே மற்றொன்றைக் கண்டால் அது உருவகம் எனப்படும்.[44]

செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்களில் தாயின் மனநிலைக்கு ஏற்பப் பொருள் உருவகம், நுண்பொருள் உருவகம், இயற்கை உருவகம், தன்னுணர்ச்சியை வெளிப்படுத்தும் உருவகம் எனப் பல்வேறு வகைகளில் வெளிப்படுவதைக் காணலாம்.

### 3.6.1. பொருள் உருவகம்

பொருள் உருவகம் என்பது உயிரில் பொருள், உயிருள்ள பொருள் உருவங்களாக நின்று கவிதைச் சுவையை மிகுவிக்கின்றன.

தாலாட்டுப் பாடல்களில் இவ்வுருவகங்கள் இடம் பெற்றுள்ளன

### 3.6.1.1. உயிரில் பொருள் உருவகங்கள்

முத்துக்கள், மணிகள், அமுதம் போன்ற பொருள்கள் உயிரில்லாத பொருள்கள். இவற்றின் சிறப்பினை உணர்ந்த பெண்கள் தங்கள் குழந்தைகளை முத்துக்களாகவும், நவமணிகளாகவும் உருவகித்து அன்புணர்ச்சியை வெளியிடுகிறார்கள். 'பொன்னே மணியே'[45] என்றும், 'அல்லிமகன் சீதை மகன்'[46], 'இந்திரனார் மகன்'[47] என்றும் குழந்தையை உருவகப்படுத்திப் பேசும்போது இவ்வகை உருவகங்களைக் காணலாம். புராண மாந்தர்களை உருவகப்படுத்திப் பேசும் போக்கு காணப்படுகிறது.

### 3.6.1.2. உயிருள்ள பொருள்களை உருவகப்படுத்துதல்

மனிதன், பறவைகள், விலங்குகள், செடிகொடிகள் முதலான உயிர் உள்ள பொருள்களை உருவகப்படுத்திப் பேசும் நிலையினையும் இத்தாலாட்டுப் பாடல்களில் காணலாம்.

*மாணிக்கத் தொட்டிலிலே - நீ*
*வளர்ந்த மதக்களிறோ*[48]

என்று பாடும் பாடலில் குழந்தையை மதக்களிறாக உருவகப்படுத்திப் பேசுகிறாள்.

குழந்தைகளை நறுமணமுள்ள மலர்களாகக் காணுதல் தாலாட்டில் மிகுதியாகக் காணப்படுகிறது.

*செங்கழனி மாலை*
*சிவன் தந்த பூமாலை*[49]

என்று பேசும் இடங்களில் மலர் மாலைகளாகவே குழந்தைகளைக் கண்டமை புலனாகிறது.

## 3.6.2. இயற்கை உருவகங்கள்

மனிதனின் உணர்ச்சியைச் சொற்களில் வெளிப்படுத்துவது மிக அரிதானது. தேர்ந்தெடுத்த சொற்களைக் கொண்டு கவிஞன் உணர்ச்சி வெளிப்பாட்டைக் காட்டுகிறான். அந்நிலையில்

அவனுக்கு உதவக் கூடிய கருவியாய் அமைவது இயற்கையே. எனவே இயற்கையை உருவகப்படுத்திப் பேசும் போக்கும் தாலாட்டுப் பாடல்களில் மிகுதியாகக் காணப்படுகிறது. குழந்தையை,

*கோடைக் குளிர் தருவே*
*கோதில்லா நீரூற்றே*
*மேடையிளந் தென்றல்*
*தருமென் சுகமே*[50]

என்ற உருவகிக்கும் போது கவிதையின் சுவையினையும் பயனையும் ஒருங்கே பெற முடிகிறது.

### 3.6.3. நுண்பொருள் உருவகம்

கண்ணுக்குப் புலனாகாத சில நுண்பொருள்களில் எல்லாம் குழந்தைகளைக் கண்டு, அதனால் அந்த நுண்பொருள்களையே குழந்தையாக உருவகித்து மகிழ்வு எய்துகின்றனர் தாய்மார்கள். 'பூவிலூறும் வாசனையோ' [51]என்று உருவகப்படுத்திக் காணும் போது கண்ணுக்குப் புலனாகாத வாசனையைக் குழந்தையாக உருவகிக்கிறார்.

### 3.6.4. இல்பொருள் உருவகம்

குழந்தையையும் இறைவனையும் ஒன்றாகவே காணுவர். எனவே தான் இறைவனை அப்பரும் மாணிக்கவாசகரும் 'அமுதே' என்கின்றனர். அதுபோன்றே இவர்களும் குழந்தையை 'அமுதே'[52] 'வாடாத கற்பகமே'[53] 'அருள் நிதியே'[54] என்றெல்லாம் உருவகப்படுத்திப் பார்க்கின்றனர். அருள் போன்ற இப்பொருள்கள் உலகில் இல்லாதவை. இவற்றைக் கற்பனைக் கண்ணில் கண்டு உருவகப்படுத்திக் குழந்தைச் செல்வத்தின் இன்பத்தினைப் புலப்படுத்துகின்றனர்.

### 3.6.5. தன்னுணர்ச்சியை வெளிப்படுத்தும் உருவகம்

குழந்தை மேல் தான் கொண்ட அன்பினை விளக்கத் தாலாட்டினைப் பாடும் தாய் பல்வேறு பொருள்களாகக் குழந்தையை உருவகப்படுத்தித் தன் அன்பை வெளியிடுகின்றாள். 'நல்லறத்தின் வித்தே நாடும் சுகக் கொழுந்தே'[55] என்றும், 'தங்கரதக் கிளி'[56] என்றும், 'காமனுக்குத் தோழன்'[57] என்றும் பல்வேறு பொருள்களில் குழந்தையைக் கண்டு உருவகித்துப் பேசும்போது தாய் குழந்தையிடத்துக் கொண்ட பேரன்பினைப் புரிந்து கொள்ள முடிகிறது.

உருவகங்கள் மிகுதியாகத் தாலாட்டில் அமையும் போது கவிதை நயம் மேலும் சிறக்கிறது.

## 3.7. சொல்லாட்சி

இழும் என்ற சொல்லால் விழுமியது பயத்தல் சொல்லின் இலக்கணமாகும். 'சில சொற்கள் ஒன்றோடொன்று சேர்ந்து அமையும் வகையாலே முன்பு அச்சொற்களில் இல்லாத புதிய ஒலியின்பமும் பொருளுணர்ச்சியும் தருமாறு கவிஞன் தனது கவிதைகளில் ஆகும் சொற்களின் சிறப்பினைச் சொல்லாட்சி என்கிறோம்.[58]

### 3.7.1. தேர்ந்த சொற்களைத் தேர்ந்த இடத்தில் போடுதல்

*இச்சையுள்ள இராவணனும்*
*பிச்சையின்னு கேட்டானாம்*[59]

என்று பாடும்போது இச்சை என்ற சொல்லுக்கு ஏற்பப் பிச்சை என்ற சொல் அடுத்த அடியில் கையாளப்படுகிறது. இராவணனின் பண்பினையே முழுமையாகக் காட்டுவதுடன் ஒலிநயமும் சிறப்புற்று அமைவதைக் காண முடிகிறது.

### 3.7.2. பொருள் நயம் தோன்றச் சொல்லை ஆளும் பாங்கு

செட்டிநாட்டுத் தாலாட்டில் சொல்லாட்சி சிறக்கும் இடங்கள் மிகுதி. 'வண்டு ஆடப் பூ மலர' [60] என்ற அடியில் வண்டு தேன் அருந்தும்போது அதன் சிறகுகள் ஆடுவதால் மலரப்போகும் நிலையில் உள்ள மொட்டு மலர்ந்து விடுகிறதாம்.

*என்னறியான் புன்னைமரம்*
*இலையுதிரப் பிஞ்சுவிடும்*[61]

என்ற அடிகள் இலைகட்கு இடமில்லாமல் பிஞ்சுகள் பெருகி இருக்கும் புன்னை மரத்தினைக் காட்டுகின்றன.

### 3.7.3. ஒலிநயத்திற்கு ஏற்பச் சொற்களை ஆளும் பாங்கு

ஓசை நயத்திற்கு ஏற்பச் சொற்களை ஆளும் பாங்கினைச் செட்டி நாட்டுத் தாலாட்டில் காண முடிகிறது.

*பொட்டிடுங்க மையிடுங்க*
*புண்ணியவார் பேத்திக்கு*
*மையிடுங்க பொட்டிடுங்க*
*மகராசர் பேத்திக்கு*[62]

என அமையும் பாடல் அடிகளில் ஓசைநயம் சிறப்பதற்குக் கையாளப்படும் சொற்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது.

### 3.7.4 கற்பனை சிறப்புறக் கவிஞன் சொற்களை ஆளும் பாங்கு

தாலாட்டுப் பாடல்கள் கற்பனை வளம் மிகுதியாகக் கொண்டு இலக்கியச் சுவையை மிகுத்தியும் தருவதாக உள்ளன.

*'மாணிக்கத் தூணோ*
*மரகதப் பூமுடியோ*
*வானத்தின் மீனோ*
*மேகத்தின் மின்னொளியோ'*[63]

என்ற பாடலில் கற்பனை சிறப்பாக உள்ளது.

### 3.7.5. இலக்கியச் சொல்லாட்சி

சங்க இலக்கியச் சொற்களும் செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. 'புனக்கிளியோ'[64] என்று உருவகப்படுத்தும் இச்சொல் தினைபுனத்துக் கிளியினைக் குறிக்கும் சங்க இலக்கியச் சொல் ஆகும்.

ஊரார் உண்ணுதற்கேற்றவண்ணம் அமைந்த நீர் நிலையைத் திருவள்ளுவர் ஊருணி எனக் குறிப்பர். அதேபோல் இவர்களும், 'இரும்பாலே ஊருணியாம்'[65] என்று பாடுகிறார்கள். பேச்சு வழக்கிலும் இச்சொல்லையே கையாள்கின்றனர்.

'கொத்து விடா நெத்தும்'[66] என்ற தொடரில் உள்ள நெத்து என்ற சொல் நெற்று எனச் சங்க இலக்கியத்தில்[66அ] வருவதாகும்.

## 3.8. எண்வகைச் சுவைகள்

மெய்ப்பாடு என்பது மெய்யின்கண் தோன்றும் பல்வேறு உணர்வுகள் ஆகும். தொல்காப்பியனார் இதனை மெய்ப்பாடு என்பர். வடமொழியாளர் இதனை 'நவரசம்' என்று கூறுவர். தொல்காப்பியனார்,

*நகையே அழுகை இளிவரல் மருட்கை*
*அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று*
*அப்பால் எட்டாம் மெய்ப்பாடென்ப*[67]

என்று எண்வகை மெய்ப்பாடுகளைக் கூறுகிறார். இவ்வெண்வகைச் சுவைகளும் செட்டிநாட்டுத் தாலாட்டில் இடம் பெற்றுள்ள தன்மையினைக் காணலாம்.

### 3.8.1. நகை

நகை என்பது சிரிப்பினைக் குறிக்கும். எள்ளல், இளமை, பேதைமை, மடன் என்ற நான்கின் காரணமாகத் தோன்றும்.[68] செட்டி நாட்டுத் தாலாட்டுப் பாடல்களில் தம் உறவினரைப் பற்றிப் பேசும் சில இடங்களில் நகைச்சுவையுடன் கேலி செய்வதுண்டு.[69]

### 3.8.2. அழுகை

அழுகை என்பது அவலத்தைக் குறிக்கும். இதுதானே அவலித்தல், பிறருடைய அவலத்தைக் கண்டு பிறத்தல் என இரண்டு வகைப்படும்.[70] தாலாட்டுப் பாடல்களில், குழந்தையின் அழுகையினைப் பொறுக்காத தாய், 'யாரடித்த கண்ணீர் ஆறாய்ப் பெருகுகிறது'[71] எனப் பிறர் அவலம் கண்டு பிறப்பதாக அமைந்து உள்ளது. தானே அவலித்தல் என்ற நிலையைத் தாய் குழந்தை அடையப்பெற்ற தவத்தை விவரிக்கும் இடங்களில் முழுமையாக உணர முடிகிறது.

### 3.8.3. இளிவரல்

இளிவரல் என்பது இழிவினைக் குறிக்கும். துன்பம் மிகும்போது ஒருவருக்கு இழிவு ஏற்படுகிறது.[72] தாய் தனக்குக் குழந்தை இல்லாதபோது பெற்ற இழிவினை,

வாடிய நாளெல்லாம் வருந்தித் தவமிருந்து
தேடிய நாள்தன்னில் செல்வமாய் வந்த கண்ணோ
மலடி மலடியென்று வையகத்தார் ஏசாமல்
மலடி என்ற சொல்லை மாற்றப் பிறந்தாயோ[73]

எனப் பாடுகிறாள். இதில் மலடி என்ற இழிவினைச் சமுதாயத்தில் பெற்றமையையும், குழந்தை அடைந்ததும் அச்சொல் மறைந்தது எனக் கூறும்போது குழந்தைக்காக அவள் கொண்ட துன்ப நிலையையும் காண முடிகிறது.

### 3.8.4. மருட்கை

மருட்கை என்பது வியப்பு ஆகும். இது புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம் முதலியவற்றின்கண் தோன்றும்.[74] உறவினரின் ஆக்கம், பெருமை பற்றிப் பேசுமிடங்களில் இச்சுவை தோன்றுகிறது. ஆகாசகங்கையைக் குழந்தையின் வாசலுக்குக் கொண்டு வந்தவர்கள் என்று பேசுமிடத்தும், உறவினர்களின்

செல்வ நிலையைப் பற்றிப் பேசு மிடங்களிலும்[75] இச்சுவை ஏற்படுகிறது.

### 3.8.5. அச்சம்

அச்சம் என்பது பயம் ஆகும். தெய்வம், விலங்கு, கள்வர், இறை ஆகிய நால்வரால் அச்சம் ஏற்படும் என்பர்.[76]

*வள்ளிக்கதைத் தாலாட்டில், வள்ளிக்கு,*
*கரடிபுலி சிங்கமென்றால்*
*கடுகளவும் பயமறியாள்*
*யானை என்று சொன்னாக்கால்*
*அதிக பயமுண்டு*[77]

என்பதை உணர்ந்த வேல்முருகர் யானையைக் காட்டிப் பயமுறுத்தி வள்ளியை மணம் செய்து கொண்டமை இச்சுவை தோன்றும் வண்ணம் பாடப்பட்டுள்ளது.

கடவுளுக்கு மிகவும் பயந்தவர்கள் இவ்வினத்தவர் என்பது இவர்கள் பாடும் பக்திப் பரப்புக் கொண்டு தாலாட்டிலிருந்து தெரிய வருகிறது. கடவுட் குற்றம் ஏற்படின் செயல்கள் இனிதாக நிறைவேறாது எனக் கடவுளுக்குப் பயந்து வாழுகிறவர்களாக உள்ளமை தெரிகிறது.[78]

### 3.8.6. பெருமிதம்

பெருமிதம் என்பது வீரத்தைக் குறிக்கும். கல்வி, தறுகண், புகழ், கொடை ஆகிய நான்கின் காரணமாக ஒருவருக்குப் பெருமிதம் பிறக்கும். தாலாட்டில் தாய் தம் உறவினரின் கல்வி, தறுகண், கொடை, புகழ் ஆகிய நான்கின் காரணமாக ஒருவருக்குப் பெருமிதம் பிறக்கும். தாலாட்டில் தாய் தம் உறவினரின் கல்வி, தறுகண், கொடை, புகழ் இவற்றைப் பேசும் இடங்களிலும் குழந்தையை வருணிக்கும் இடங்களிலும் இச்சுவையை முழுமையாகச் சுவைக்க முடிகிறது. தாலாட்டில் இந்நான்கு விதப் பண்புகளில் காரணமாகப் பெருமிதம் பிறப்பதைக் காணலாம்.

*வங்காளக் கங்கையிலே*
*மகரமீன் துள்ளு துன்னு*
*சிங்கார அம்பெடுத்துத்*
*தெறிப்பார்கள் உங்களம்மான்*[80]

எனப் பேசும் இடங்களில் இச்சுவை சிறப்பதனைக் காணலாம்.

### 3.8.7. வெகுளி

வெகுளி என்றால் சினத்தைக் குறிக்கும். தன் குழந்தையை அடித்தவர் மேல் தாய் கொண்ட சீற்றத்தின் விளைவாக,

*அடித்தாரைச் சொல்லியழு*
*ஆக்கினைகள் செய்திடுவேன்*[81]

எனக்கூறும் இடங்களிலும் சீற்றம் கொண்ட பூநாகம் கூட ஐயாவின மடிதனில் இருந்தால் சீற்றம் அடங்கி விடும்[82]எனப் பேசும் இடங்களிலும் இச்சுவை பிறக்கிறது.

### 3.8.8. உவகை

உவகை என்பது மகிழ்ச்சி. செல்வம், புலன், புணர்வு, விளையாட்டு போன்றவற்றின் காரணமாக ஒருவருக்கு மகிழ்ச்சி பிறக்கும். குழந்தைச் செல்வம் அடைந்தமை கருதிச் செட்டிநாட்டுத் தாய்மாரின் மகிழ்ச்சி அவர்களின் தாலாட்டின் வழி தெரிகிறது.

அத்தாயின் உறவினர்களின் பெருமை, வீரம் முதலியவை பற்றிப் பேசும் இடங்களிலும் உவகைச் சுவை பிறக்கிறது

*பட்டெடுங்கள் தொட்டிகட்ட*
*பவுன் உரையுங்கள் பொட்டுமிட*[84]

என்று பாடும் அடிகளில் குழந்தை பெற்ற தாயின் உளநிறைவு தெற்றெனத் தெரிகிறது.

## 3.9. அடைவளம்

கவிஞர்களுக்கு எதனையும் கூர்ந்து நோக்கி உணரும்

தன்மை இருத்தல் வேண்டும். இதனைக் கூர்மை நோக்கு என்பர். தாலாட்டிசைக்கும் செட்டிநாட்டுத் தாயமார்களுக்கு இந்நோக்கு மிகுந்த அளவில் இருந்தமையை அவர்கள் பயன்படுத்தும் அடைச் சொற்களிலிருந்து தெரிந்த கொள்ள முடிகிறது

### 3.9.1. ஒரு சொல்லடை

'பரட்டைப் புளிய மரம்' [85]என்று கூறும்பொழுது புளிய மரம் என்பதற்கு அடையாகப் பரட்டை என்ற சொல் கையாளப்பட்டுள்ளது. பரந்து கிளைத்து விரிந்த தன்மையைக் குறிக்கப் பரட்டை என்ற சொல் கையாளப்பட்டுப் புளிய மரத்தின் அடர்த்தியான தன்மையை அழகாக எடுத்துக்காட்டுவதனைக் காணலாம்.

'கூசாத இராவணன்'[86] என்கின்றபோது இராவணனின் பண்பு நலத்தைக் கூசாத என்ற அடை எடுத்துக் காட்டுகிறது.

அவ்வூரில் உள்ள இறைவனுடைய பெயர் சிறப்பாகத் தெரியும் வகையில் 'குற்றாலநாதர், குழலாமணி அம்மன், தில்லைச் சிதம்பரர்'[87] என்ற இறைப் பெயர்களில் அடைச் சொற்கள் கையாளப் பெற்றுப் பொருள் விளக்கத்தைத் தருகின்றன.

### 3.9.2. இரு சொல்லடை

மாலை என்ற சொல் தாலாட்டில் மிகுதியாக வருகிறது. இதன் தனித்தன்மையினைக் குறிக்க ஒவ்வொரு மாலைக்கும் அடைச்சொற்கள் வந்து பொருளை விளங்க வைக்கின்றன. 'நற்பகழ மாலை' [88] என்கின்ற போது மாலைக்கு நல்ல பகழ (பவள) என்ற இரு சொற்கள் அடையாக வந்து மாலையின் சிறப்பினைக் காட்டுகின்றன. 'பாண்டி பெருமுத்து'[89], 'செங்கமல வாய்'[90], 'மணிவயிரத் தோளான்'[91] என்ற சொற்களில் இரு அடைகள் அமைந்து பொருளைச் சிறக்கச் செய்வதனைக் காணலாம்.

### 3.9.3. மூன்று சொல்லடை

செட்டிநாட்டுத் தாலாட்டில் மூன்று சொல்லடைகளும் பயன்படுத்தப்பட்டுள்ள தன்மையினைக் காணலாம். வெற்றிலை பற்றிக் குறிப்பிடுகையில் 'இளங் கொடிக்கால் வெற்றிலை'[92] எனக் கூறுகின்றனர். இதிலிருந்து ஒரு சாதாரணப் பொருளை நோக்குமிடத்து இவர்களுடைய கூர்மைப் போக்குப் புலப்படுகிறது. நாகத்தைப் பற்றிக் கூறுகையில் 'ஐந்துதலைப் பூ நாகம்'[93] என்கின்றனர். 'அதிமதுரத் தென்னை வட்டு'[94], 'வைத்து விளையாட வண்ணக் கிலுகிலுப்பை'[95] என்ற தொடர்கள் அடைவளத்தின் சிறப்பினை எடுத்துக் காட்டுவனவாய் அமைந்து சிறக்கின்றன.

### 3.9.4. நான்கு சொல்லடை

தாலாட்டில் மூன்று சொல்லடை கொண்ட தொடர்கள் வரைதான் மிகுதியாகக் காணப்படுகின்றன. 'ஓட்டி விளையாட ஒயிலா ரயில் வண்டி'[96] என்பதில் வண்டிக்கு அடையாக ஓட்டி, விளையாட, ஒயிலா, ரயில் என்ற நான்கு சொல்லடைகள் பயன்படுத்தி வண்டியின் சிறப்பினையும், பயனையும் ஒருங்கே உணர்த்துகின்றனர்.

## 3.10. நடை

ஒவ்வொருவருக்கும் நடை வேறுபாடு உண்டு. மற்றத் தாலாட்டுப் பாடல்களினின்றும் செட்டிநாட்டுத் தாலாட்டு தனித்த நடையினைக் கொண்டு இலங்குவதைக் காணலாம். இவர்களின் உள்ளப் பண்புகளுக்கு ஏற்ப அமைந்த சொற்கள், பொருளுணர்ச்சி, ஒலிநயம் ஆகியவற்றைப் பெற்று நடையமைப்பில் மற்றத் தாலாட்டுகளினின்று வேறுபடுகிறது.

### 3.10.1. இலக்கியச் சுவை மிக்க சொற்களைக் கையாண்டு நடையினைச் சிறக்கச் செய்யும் பாங்கு

*கண்ணில் உறுமணியோ - எங்கள்*
*கலிதீர்த்த பெட்டகமோ*
*பொன்னில் உறுமொளியோ*
*பூவிலூ றும் வாசனையோ*[97]

என்று தாலாட்டினைப் படிக்கும்போது அப்பர், சம்பந்தர் போன்றோர் இறைவனை உருவகப்படுத்திப் பேசும் இடங்களைப் போன்றுள்ளதோடு இலக்கியச் சுவை தரக்கூடிய உருவகச் சொற்களைக் கையாண்டு நடை சிறக்கக் காரணமாய் இருக்கிறது.

*பால் ஊத்தி தயிர் உறையும்*
*பாதிச்சாம வேளையிலே*
*பலகாரம் தானிருக்கும்* [98]

என்றுள்ள அடிகளில் விழா நாட்களில் இரவு மூன்று மணி, நான்குமணி, அளவிலேயே காலை உணவு, தயாராக இருக்கும் என்பதைக் கூறப் பால் ஊற்றித் தயிர் உறையும் பாதிச்சாம வேளையிலே எனக் குறிப்பிட்டு எடுத்துக் காட்டி இருப்பது இவர்களது கவிதை ஆற்றலைப் புலப்படுத்துகிறது.

### 3.10.2. செட்டிநாட்டில் வழங்கும் வழக்குச் சொற்களைக் கையாண்டு நடையினைச் சிறக்கச் செய்யும் பாங்கு

வட்டாரத்திற்கு வட்டாரம் பேச்சு வழக்கு வேறுபடுவது போலச் சாதிக்குச் சாதி பேச்சு வழக்கு வேறுபடுகிறது. செட்டிநாட்டாரின் பேச்சு வழக்கினை இவர்களது தாலாட்டுப் பாடல்களில் அமைந்துள்ள சொற்களைக் கொண்டு மற்றத் தாலாட்டுகளிலிருந்து பிரித்து அறிய முடிகிறது.

உறவினர்களை - குறிப்பாக மாமனை 'அம்மான்' என்ற சொல்லாலும், பாட்டனை 'ஐயா' என்ற சொல்லாலும் குறிக்கின்றனர்.

*பாருங்குடி தாதிங்களா*
*படுத்துறங்கும் பாவினையை*[99]

என்ற அடிகளில் இவர்கள் அன்றாடம் பேசும் பாவினை என்ற சொல் வந்து பாடலின் பொருளை எளிமைப்படுத்திக் காட்டுகின்றது.

### 3.10.3. இலக்கியச் சொற்களுக்கு அழியாமல் வாழ்வளித்தல்

இலக்கியச் சொற்கள் என மரபுச் சொற்களாக வழங்கும் சில சொற்களை இவர்கள் தாலாட்டில் காணலாம். புனக்கிளி,[100] வேல்விழி,[101] குயில் மொழி,[102] ஊருணி,[103] சங்கு வளையல்,[104] கண் வளர்ந்து,[105] ஆரணங்கு,[106] பெண் மயில்,[107] அவிர் மதி,[108] இன்னிசை[109] ஆகிய இலக்கியச் சொற்களால் நடை வளம் பெறுகிறது.

### 3.10.4. கருத்து நலனில் நடை வேறுபடுதல்

தாலாட்டிசைக்கும் பெண்ணின் சுற்றுப்புறச் சூழ்நிலைக்கு ஏற்ப அவளுடைய சமுதாயக் கருத்துக்கள் இருக்கும். எனவே அவர்கள் பாடும் தாலாட்டில் அவன் சமூகத்தைப் பற்றிய கருத்துக்களைப் பாட்டாகப் பாடி ஆட்டுகின்றாள். வழிவழியாக வணிக மரபை ஒட்டியவர்கள் செட்டிநாட்டார் என்ற கருத்தும்,[110] செல்வ நிலையில் மிகுந்த சிறப்புப் பெற்றவர்கள்[111] என்பதும், காலத்திற்கு ஏற்பக் கல்வி கற்ற சிறந்த அறிவாளர்கள்[112] என்பதும் இவர்தம் பாடலால் புலனாகும்.

இலக்கியத்தில் உள்ள சிறந்த கருத்துக்களைப் பாடல்களில் அமைத்துப் பாடும் திறமும் இவர்களுக்குள்ளது என்பதனை,

*குழலினிது யாழினிது என்பர் தம்மக்கள்*
*மழலைச் சொல் கேளாதவர்*[113]

என்ற திருக்குறள் கருத்தினை,

*விற்பூட்டும் யாழிசையின் மேலதாம் தம்மக்கள்*
*சொற்கேட்ட லின்பமென மறைமொழியும் பொய்யாமோ*[114]

என்று பாடித் தாலாட்டுகின்றனர். இறைவனை அடியார்கள் வாநணிக்கும் நிலை போன்று சில பாடல்கள் அமைந்துள்ளன.

## 3.11. கருத் து நலன்

ஒரு சிறந்த கவிதைக்கு எவ்விதம் உணர்ச்சி, கற்பனை, வடிவம் இன்றியமையாதனவோ அவ்விதமே கூறப்படும் கருத்தும் இன்றியமையாதது. கலை கலைக்காகவும், கலை வாழ்க்கைக் காகவும் என இரண்டு தன்மைகளிலும் சிறப்புப் பெறும் கவிதைகள் என்றும் நிலைத்த இடம் பெறும் என்பதில் ஐயமில்லை. குழந்தை இல்லாத வாழ்க்கை ஒரு வாழ்க்கை ஆகாது என்னும் கருத்து நேரியதாக உள்ளது. மேலும் இவர்களின் சமூகத்தையே படம் பிடிக்கும் கண்ணாடியாக இத் தாலாட்டுப் பாடல்கள் விளங்குகின்றன.

## 3.12. உத்தி நலன்

செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்களில் புலன் மாற்றம், வினா விடை, அடுக்குரை, திரும்புரை, பொருள் மாற்றம், பாடற்பொருளை மரபுத் தொடராக்கும் உத்தி ஆகியன இடம் பெற்றுள்ளன.

### 3.12.1. புலன் மாற்றம்

ஒரு புலனுக்குரிய பொருளை வேற்றுப் புலனுக்குப் பொருத்தும் இயைபினையே புலன் மாற்றம் என்கிறோம். இவ்வுத்தி தாலாட்டில் ஒரே ஓர் இடத்தில் பயன்பட்டுள்ளது. 'தாகத்தைத் தீர்க்க வந்த தங்கரதக் கிளியோ, என்ற அடியில் தாகத்தைத் தீர்க்க தங்கரதக் கிளி பயன்பட்டது என்பது பொருள். கட்புலனுக்குரிய குழந்தை சுவைப்புலனுக்குரியதாகக் காட்டப் பெறுவதைக் காணலாம்.

### 3.12.2. வினா விடை

வினா விடை அமைப்பில் பாடும் மரபு மற்றத் தாலாட்டுக்களிலும் காணப்படும் ஒன்றே.

தாய் : எங்கிருந்தாய் இந்நேரம் இளங்கிளியே சொல்லிடுவாய்.

குழந்தை : பரமசிவன் முன்பாகப் பாதத்தின் கீழிருந்தேன்[117]
என வினா விடை அமைப்பில் பாடப் பெறுகிறது. இந்த உத்தி, கவனம் சிதறாமல் ஒருமுகப்படுத்துவதற்கும், இதயத்தை ஈர்ப்பதற்கும் பயன்படுகிறது.

### 3.12.3. அடுக்குரை

ஒரு பொருளைத் திரும்ப திரும்ப அடுக்கிக் கூறும் அமைப்பு ஒரு சிறந்த உத்தியாகும்.

*கந்தனுக்கு வள்ளியை - நான்*
*கலியாணம் செய்யா விட்டால்*
*வேலவர்க்கு வள்ளியை - நான்*
*விவாகம் முடிக்கா விட்டால்*[118]

என அமையும் வள்ளி கதைத் தாலாட்டில் இவ்வுத்தி மிகச் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

மற்றத் தாலாட்டுப் பாடல்களிலும் இவ்வுத்தி மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. குழந்தையை முத்தாக உருவகித்துப் பேசும் பாடலில் ஒரே பொருளையே அடுக்கிக் கூறும் அமைப்பைச் சிறப்பாகக் காண முடிகிறது.

### 3.12.4. திரும்புரை

பாடலின் சொல்லோ, அடியோ மீண்டும் வருவதனைத் திரும்புரை என்பர்.

*கரும்பசையக் கண் தூங்க*
*கல்லாற்றுத் தண்ணிவர*
*கல்லாற்றுத் தண்ணியிலே*
*நின்றாடும் பம்பரமோ*
*பம்பரமோ எம்பரமோ*[119]

இவ்வுத்தி இப்பாடலில் கையாளப்படுவதனைக் காணலாம்.

திரும்புரை செட்டிநாட்டுத் தாலாட்டில் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

### 3.12.5. தற்குறிப்பேற்றம்

அஃறிணையின் செயல்களுக்கும் புலவன் காரணம் கற்பித்துக் கூறுதலைத் தற்குறிப்பேற்றம் என்பர். அணியியலாரின் இவ்வுத்தியும் தாலாட்டில் இடம் பெற்றுள்ளது.

*உன் உறக்கம் நீ கொள்ள*
*உத்தமியாள் தாலாட்ட*
*சாலைவழி உறங்க*
*சமுத்திரத்து மீனுறங்க*
*நாடெல்லாம் தூங்க*
*நடுக்கழனி நெல்தூங்க*
*பாலில் பழம் தூங்க*
*பாதிநிலாத் தான்தூங்க*
*பொற்கொடியாள் தாலாட்ட*
*புத்திரனே நித்திரைசெய்*[120]

என்னும் பாடலில், தாயின் தாலாட்டுப் பாடலைக் கேட்டுச் சாலைவழி உறங்குகிறது. நாடெல்லாம் உறங்குகிறது. நடுக்கழனி நெல் உறங்குகிறது என்று கற்பித்துப் பாடும் இடத்தில் தற்குறிப்பேற்றம் சிறப்பதனைக் காணலாம்.

### 3.12.6. பாடற்பொருளை மரபுத் தொடராக்குதல்

ஒரே பாடற்பொருளைத் தேவையான இடத்திற்கேற்ப மீண்டும் பயன்படுத்திக் கொள்வதனைப் பாடற்பொருளை மரபுத் தொடராக்குதல் என்கிறோம். சிறப்பான பொருள்களை அடுக்கிக் கூறும் இடங்களில் இவ்வுத்தி கையாளப்படுகிறது.

ஏலங்களிப்பாக்கு இளங்கொடிக்கால் வெற்றிலை
சாதிக்களிப்பாக்கு சங்கு சுட்ட சுண்ணாம்பு[121]

என்பதனை ஐயா விரும்பிச் சாப்பிடக் கூடியவர் என்று

பேசும்போது வருவதையும், பின் சிறப்பான பொருள்களைத் தாய்மாமன் கொண்டு வருமிடத்து இதே போன்ற அடிகள் இடம் பெறுவதையும் காணலாம்.[122]

மற்றுமொரு வகையில் இவ்வுத்தி கையாளப்படுகிறது. ஒரே பொருளைக் கொண்ட பாடலை ஆண் குழந்தைக்கும், பெண் குழந்தைக்கும் பொதுவாகப் பாடுகின்றனர். பெண் குழந்தைக் கெனத் தனியான பொருள் அமைப்புக் கொண்ட பாடல் இல்லை வள்ளி கதைத் தாலாட்டு, பெண் குழந்தைகளுக்கெனத் தாலாட்டப் படுகிறது. 'ஆண் குழந்தை' என்றால் அதனைத் தெரிந்து கொள்ளப் பாடலின் இறுதியில் ஆண்பால் விகுதியினைப் பயன்படுத்து கின்றனர். 'பெண் குழந்தை' என்றால் பாடலின் இறுதியில் பெண்பால் விகுதியினைப் பயன்படுத்துகின்றனர். மற்ற இனத்தவர் தாலாட்டிலும் இவ்வுத்தி பயன்படுத்தப்பட்டுள்ளது.[123]

## அடிக்குறிப்புகள்

1. தமிழண்ணல் (தொ. ஆ.), தாலாட்டு, ப. 21.
2. மு. வரதராசன், 'அடிக்குறிப்பு', இலக்கியத்திறன், (சென்னை, பாரி நிலையம், 1965) , ப. 70 - 71.
3. இணைப்பு - 1, க.தி.பா. 32.
4. இணைப்பு - 1, க.தி.பா. 31.
5. இணைப்பு - 2, நா. எ.பா. 64.
6. இணைப்பு - 2, நா. எ. பா. 40
7. இணைப்பு - 2, நா. எ.பா. 10.
8. இணைப்பு - 2, நா. எ. பா. 62.
9. இணைப்பு - 2, நா. எ. பா. 24.
10. மு. வரதராசன், இலக்கியத்திறன், ப. 123.
11. இணைப்பு - 1, க. தி. பா. 37.
12. இணைப்பு - 1, க.தி.பா. 47
13. இணைப்பு - 2, நா.எ.பா. 29.
14. இணைப்பு - 2, நா. எ. பா. 1, 10
15. இணைப்பு - 2, நா. எ. பா. 28
16. இணைப்பு - 1, க.தி.பா. 12
17. அ.கி. பரந்தாமனார், கவிஞராக, (சென்னை, பாரி நிலையம், 1964), ப. 250-251.
18. இணைப்பு - 2, நா. எ. பா., 1.
19. இணைப்பு - 2, நா. ப. பா. 6
20. இணைப்பு - 1, க. தி. பா. 45
21. குணசாகரர் (உ.ஆ.) யாப்பருங்கலக்காரிகை (சென்னை, கழகம், 1940) நூற்பா - 16.
22. இணைப்பு - 1, க.தி.பா. 1.
23. குணசாகரர் (உ.ஆ.), யாப்பருங்கலக்காரிகை, நூற்பா - 16.

24. இணைப்பு -1, க.தி.பா. 30
25. குணசாகரர் (உ. ஆ.), யாப்பருங்கலக்காரிகை, நூற்பா - 16.
26. இணைப்பு - 1, க.தி.பா. 9.
27. குணசாகரர் (உ.ஆ) யாப்பருங்கலக்காரிகை, நூற்பா - 16.
28. இணைப்பு -1, க.தி.பா. 4,
29. குணசாகரர் (உ.ஆ.), யாப்பருங்கலக்காரிகை, நூற்பா - 17.
30. இணைப்பு - 2, நூ. எ. பா. 19.
31. மு. வரதராசன், இலக்கியத்திறன், ப. 224.
32. இணைப்பு - 1, க. தி. பா. 17.
33. இணைப்பு -2, நூ. எ. பா. 32.
34. இணைப்பு - 1, க.தி.பா. 45
35. இணைப்பு - 1, க.தி.பா. 16.
36. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.
37. இணைப்பு - 2, நூ. எ. பா. 19.
38. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.
39. இணைப்பு - 2, நூ. எ. பா. 1.
40. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.
41. இணைப்பு - 2, நூ. எ. பா. 58.
42. இணைப்பு - 2, நூ. எ. பா. 9.
43. இணைப்பு - 2, நூ. எ. பா. 19.
44. மு. வரதராசன், இலக்கியத்திறன், ப. 229.
45. இணைப்பு - 2, நூ. எ. பா. 36.
46. இணைப்பு - 2, நூ. எ. பா. 47.
47. இணைப்பு - 1, க.தி.பா. 17.
48. இணைப்பு - 1 க. தி. பா. 50.
49. இணைப்பு - 1, க.தி.பா. 5.

50. இணைப்பு - 2, நூ. எ. பா. 37.

51. இணைப்பு - 2, நூ. எ. பா. 11.

52. இணைப்பு - 2, நூ. எ. பா. 11, 39.

53. இணைப்பு - 2, நூ. எ. பா். 6, 1

54. இணைப்பு - 2, நூ. எ. பா. 39.

55. இணைப்பு - 2, நூ. எ. பா. 42.

56. இணைப்பு - 1, க.தி. பா. 40.

57. இணைப்பு - 1, க. தி. பா. 7.

58. மு. வரதராசன், <u>இலக்கியத்திறன்</u> ப. 224.

59. இணைப்பு - 1, க. தி. பா். 3.

60. இணைப்ப - 1, க. தி. பா. 45.

61. இணைப்பு - 2, நூ. எ. பா. 7.

62. இணைப்பு -2, நூ. எ. பா. 39.

63. இணைப்பு - 2, நூ. எ. பா. 13.

64. இணைப்பு - 2, நூ. எ. பா. 49.

65. இணைப்பு - 2, நூ. எ. பா. 59.

66. தமிழண்ணல் (தொ. ஆ.) தாலாட்டு, ப. 43.

66. அ. பெரும்பதுமனார், குறுந்தொகை, சென்னை கழகம், 1972 ம.ப) பாடல் எண்.7, 'வார்கை வெண்ணெற் றொலிக்கும்'

67. ச. பவனந்தம் பிள்ளை (ப. ஆ) 'மெய்ப்பாட்டியல்' <u>தொல்காப்பியம்</u> (சென்னை, லாங்மென்ஸ் க்ரீன் அண்ட் கம்பெனி, 1917) நூற்பா - 3.

68. ச. பவானந்தம் பிள்ளை (ப. ஆ.) 'மெய்ப்பாட்டியல்' <u>தொல்காப்பியம்</u> நூற்பா-4.

69. இணைப்பு - 2, நூ. எ. பா. 23.

70. ச. பவானந்தம் பிள்ளை (ப.ஆ) 'மெய்ப்பாட்டியல் <u>தொல்காப்பியம்</u> நூற்பா- 5.

71. இணைப்பு - 1, க. தி. பா. 44.

72. ச. பவானந்தம் பிள்ளை (ப.ஆ), 'மெய்ப்பாட்டியல்' தொல்காப்பியம் நூற்பா - 6.

73. இணைப்பு - 2, நூ. எ. பா. 64.

74. ச. பவானந்தம் பிள்ளை (ப. ஆ) 'மெய்ப்பாட்டியல்' தொல்காப்பியம் நூற்பா - 7.

75. இணைப்பு - 2, நூ. எ. பா. 63.

76. ச. பவானந்தம் பிள்ளை (ப.ஆ) 'மெய்ப்பாட்டியல்' தொல்காப்பியம், நூற்பா - 8.

77. இணைப்பு - 1, க. தி. பா. 45.

78. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.

79. ச. பவானந்தம் பிள்ளை (ப. ஆ), 'மெய்ப்பாட்டியல்' தொல்காப்பியம், நூற்பா - 9.

80. இணைப்பு - 1, க. தி. பா. 50.

81. இணைப்பு - 1, க. தி. பா. 44.

82. இணைப்பு -1, க. தி. பா. 47.

83. ச. பவானந்தம் பிள்ளை (ப.ஆ) 'மெய்ப்பாட்டியல்' தொல்காப்பியம், நூற்பா - 10.

84. இணைப்பு - 1, க. தி. பா. 47.

85. இணைப்பு - 2, நூ. எ. பா. 56.

86. இணைப்பு -1, க. தி. பா. 3.

87. இணைப்பு - 1, க. தி. பா. 1.

88. இணைப்பு - 1, க. தி. பா. 5.

89. இணைப்பு - 1, க. தி. பா. 9.

90. இணைப்பு - 2, நூ. எ. பா. 7.

91. இணைப்பு - 2, நூ. எ. பா. 13.

92. இணைப்பு - 2, நூ. எ. பா. 23.

93. இணைப்பு - 1, க. தி. பா. 47.
94. இணைப்பு - 2, நூ. எ. பா. 53.
95. இணைப்பு - 2, நூ. எ. பா. 53.
96. இணைப்பு - 2, நூ. எ. பா. 53.
97. இணைப்பு - 2, நூ. எ. பா. 11.
98. இணைப்பு - 2, நூ. எ. பா. 41.
99. இணைப்பு - 2, நூ. எ. பா. 41.
100. இணைப்பு - 2, நூ. எ. பா. 49.
101. இணைப்பு - 2, நூ. எ. பா. 1.
102. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.
103. இணைப்பு - 2, நூ. எ. பா. 59.
104. இணைப்பு - 2, நூ. எ. பா. 45.
105. இணைப்பு - 2, நூ. எ. பா. 1.
106. இணைப்பு - 2, க. தி. பா. 6.
107. இணைப்பு - 2, க. தி. பா. 45.
108. இணைப்பு - 2, நூ. எ. பா. 1.
109. இணைப்பு - 2, நூ. எ. பா. 1.
110. இணைப்பு - 2, நூ. எ. பா. 1.
111. இணைப்பு - 2, நூ. எ. பா. 2.
112. இணைப்பு - 2, க . தி . பா. 49.
113. திருவள்ளுவர், திருக்குறள், பத்தாம் பதிப்பு, (சென்னை, கழகம், 1976) குறட்பா எண். 66.
114. இணைப்பு - 2100, நூ. எ். பா. 1.
115. பா.ரா. சுப்பிரமணியம், <u>தமிழக நாட்டுப் பாடல்கள்</u>, ப. 206.
116. இணைப்பு -1, க. தி. பா. 40
117. இணைப்பு - 2, நூ. எ. பா. 16.

118. இணைப்பு -1, க. தி. பா. 45.
119. இணைப்பு - 2, நா. எ. பா. 32.
120. இணைப்பு - 2, நா. எ. பா. 17.
121. இணைப்பு - 2, நா. எ. பா. 23.
122. இணைப்பு - 2, நா. எ. பா. 53.
123. இணைப்பு - 1, க. தி . பா. 16.

எடுத்துக்காட்டு : 'மாதாவுக்கு மல்லியப்பூ
மடிதனிலே பூத்தானோ' || ஆண்பால் விகுதி

'மாதாவுக்கு மல்லியப்பூ
மடிதனிலே பூத்தாளோ' || பெண்பால் விகுதி.

இயல் - 4

# செட்டிநாட்டுத் தாலாட்டில் சமுதாயம்

தாலாட்டு, குழந்தைப் பாசத்தை முதன்மைப்
படுத்துவதாக இருப்பினும் சமூகச் சரித்திரம்
என்னும் பின்னணியில்தான் பல்வேறு வகைப்பட்ட
பின்னல்களாக எழுகின்றன.

- கா. சரோஜினி அம்மாள்

'தாலாட்டுப் பாடல் தோற்றமும் வளர்ச்சியும்.'
கேரளப் பல்கலைக்கழக ஆய்வு மலர் -
தொகுதி 1. ப. 270.

# செட்டிநாட்டுத் தாலாட்டில் சமுதாயம்

**4.** சமுதாயம் என்பது நெறிமுறைகளையும் மரபுகளையும் பழக்கங்களையும் உள்ளடக்கிக் கொண்ட ஓர் அமைப்பு எனலாம். அது மக்கள் இனத்தில் பல்வேறு பிரிவுகளையும் குழுக்களையும் கொண்டு விளங்குவது ஆகும்.

உலகின் எந்தப் பகுதியில் வாழ்ந்தாலும் மனிதனின் குறிக்கோளும் எண்ணங்களும் பெரும்பாலும் ஒரே மாதிரி இருப்பதாகக் கூறலாம். இருப்பினும் ஓரிடத்தில் வாழும் மனிதனுக்கும் மற்றோர் இடத்தில் வாழும் மனிதனுக்கும் இடையில் மாறுபாடு இல்லையெனினும் வேறுபாடு பெருமளவில் காணப்படுகிறது. இவ்வேறுபாட்டிற்கு, ''1. தட்பவெப்ப நிலை 2. இட அமைதி 3. சாதி ஆகிய மூன்றும் அடிப்படைக் காரணமாக விளங்குகின்றன''.[1] இவை மூன்றிலும் சாதி அடிப்படையில் காணப்படும் சமுதாய நிலை, சமுதாயச் சிந்தனைகள், பிரச்சினைகள், அவ்வச் சாதி அமைப்பிற்கு ஏற்ப அவர்களுக் கென்று சில தனி இயல்புகளை உருவாக்கி விடுகின்றன. இதனால் சமுதாய நிலை சாதிக்கேற்பவும் வேறுபடுகிறது.

## 4.1. தாலாட்டில் சமுதாயம்

நாட்டுப்புறப் பாடல் வரிசையில் திருமணப் பாடலுக்கு அடுத்துத் தாலாட்டுப் பாடல்கள் இடம் பெறுகின்றன. ஆனால் சமுதாய நிலையில் அமையும் பாடல்களில் முதலில் அமைபவை தாலாட்டுப் பாடல்கள் எனலாம். ''தாலாட்டு குழந்தைப் பாசத்தை முதன்மைப் படுத்துவதாக இருப்பினும் சமூகச் சரித்திரம் என்னும் பின்னணியில்தான் பல்வேறு வகைப்பட்ட பின்னல்களாக எழுகின்றன.''[2] ஒரு பிரிவினரின் சமுதாய அமைப்பு முழுவதும் அப்பிரிவினரின் தாலாட்டுப் பாடல்களை மட்டும் கொண்டு கண்டறிதல் இயலாது. என்றாலும் தாலாட்டில் சமுதாயத் தாக்கம் மிகுதி என்பதை எடுத்துக்காட்டுதல் வேண்டும்.

## 4.2. குடும்பங்களும் உறவுகளும்

''குடும்பம் என்பது திருமணத்தால் கட்டப்பட்ட மாந்தர் குழுவாகும். இது இரத்தத் தொடர்புடையதாக அல்லது தத்து எடுத்ததாக அமைந்திருக்கும். அவர்கள் ஒரே வீட்டில் வாழ்பவர்களாக இருப்பர். சமுதாயத்தில் கணவன், மனைவி, தாய், தந்தை, மகன், மகள், உடன் பிறந்தவர்கள் என்ற உறவுடனும் பொதுவான பண்பாட்டுடனும் வாழ்வர்''[3] இவ்வாறு கூடி வாழும் தன்மையில் குடும்பம் என்ற பெயர் ஏற்பட்டது எனலாம்.

### 4.2.1. செட்டிநாட்டுக் குடும்பம்

இவர்கள் குடும்பத்தில் தந்தையே குடும்பத் தலைவராக இருப்பர். அவரே குடும்பத்தில் சொத்துக்கும், குடும்பத் தொடர்பான அனைத்துச் செயல்களுக்கும் உரிமையுடையவராக இருப்பர். தாலாட்டுப் பாடல்களில் தந்தையைச் சிறப்பித்துப் பேசும் பாடல்களும் இடம் பெற்றுள்ளன. தந்தையை, 'பாண்டியனார், அதிட்டமுள்ளார், செல்வமுள்ளார், மகிமையுள்ளார் இனியரர்'[4] எனப் புகழ்ந்து பாடியுள்ளதால் குடும்பத்தில் தந்தைக்குள்ள மதிப்பு புலனாகிறது. தாய் தலைமை ஏற்றுக் குடும்பம் நடத்தும் பழக்கம் இவர்களிடத்தில் இல்லை.

கணவன், மனைவி, குழந்தை இவர்கள் மட்டுமல்லாமல் கணவனின் பெற்றோர்கள், உடன் பிறந்தவர்கள் ஆகியவர்களும் கூடி வாழ்வதைக் கூட்டுக் குடும்பம் என்பர். இவ்வகைக் குடும்பம் இவர்களிடையே மிகுதியும் உள்ளது. தாய் பாடும் தாலாட்டில் 'ஐயா பெருமை'[5] பேசுவதிலிருந்து இது புலனாகும். இவ்வகைக் குடும்ப அமைப்பு இன்று இவர்களிடையே அருகி வருகிறது. கல்வி, வாணிகம் காரணமாக வேற்றூர் செல்ல நேரிடுகிறது. அவ்வமயம் மனைவி மக்கள் மட்டும் உடன் வாழ்கின்ற கட்டாய நிலை ஏற்படுகிறது.

### 4.2.2. உறவுமுறைகள்

''சமுதாய குடும்ப நடைமுறை அடிப்படையில் இருந்து

எழுவதுதான் உறவுமுறைப் பெயர்கள் ஆகும்''.[6] சமுதாயத்தில் ஓரின மக்களின் பண்பாட்டு வரலாற்றை எடுத்தியம்புவதற்கு உறவுமுறைப் பெயர்கள் பெரிதும் பயன்படுகின்றன. ''இரத்தக் கலப்பாலும், பெற்றோர் கால்வழியாலும் மன உறவினாலும் ஒரே இடத்தில் வாழும் தன்மையாலும் உறவு முறை அமைகிறது.''[7]

### 4.2.2.1. தாய்

செட்டிநாட்டில் தாயாரை 'ஆத்தா' என வழங்குவதை,

*''அவனா அழுகின்றான்*
*ஆத்தா மடிதேடி''*[8]

என்ற அடியால் உணரலாம். அருணகிரிநாதர் பாடல்களில் 'ஆத்தா' என்ற சொல் இடம் பெறுவது அறியத்தகும்.

தாய்க்கும் குழந்தைக்கும் இடையே உள்ள பாசப் பிணைப்பை நெருக்கமான உறவினை அவள் பாடும் தாலாட்டுப் பாடல்கள் நன்கு உணர்த்துகின்றன. தன் சேய் நூறாண்டுகள் வாழ வேண்டும் எனத் தாய் மனம் எண்ணிக் கொண்டே இருக்கிறது. அந்த எண்ணத்தின் தோற்றம் இப்பாடல்.

*பஞ்சு மெத்தை மேலிருந்து - இராமர்*
*பஞ்சாங்கம் பார்க்கையிலே*
*வயசு நூறென்று சொல்லி*
*வாசிச்சார் பஞ்சாங்கம்.*[9]

தாலாட்டுப் பாடல்கள் முழுவதையும் காணும் போது தாய் சேயின் மேல் கொண்டுள்ள எல்லையில்லா அன்பு புலப்படுவதோடு அத்தாயின் சுற்றுப்புறச் சமூக சூழலுக்கு ஏற்ப அவளது சமுதாயச் சிந்தனைகளும் அமைந்துள்ளதைக் காணலாம். தன் மகன் தன் தந்தையைப் போல் பொருள்வளம் உள்ளவனாகவும், கடவுளை நினைப்பவனாகவும் இருக்க வேண்டும் என விரும்புகிறாள். செல்வ நிலையை உணர்த்தும் பாடல்கள் செட்டிநாட்டுத் தாலாட்டில் மிகுதியாக உள்ளன.

### 4.2.2.2. தந்தை

தந்தையாரை 'அப்பச்சி' என்ற சொல்லால் செட்டிநாட்டவர் அழைப்பர். இச்சொல் தாலாட்டில் இடம் பெறவில்லை. தந்தையின் பண்பினை, அன்பினைத் தாய் பாடும் தாலாட்டின் வழித் தெரிந்து கொள்ள முடிகிறது. செல்வமிக்க தந்தை என்றும், அன்புயர்ந்த தந்தை, ஆற்றல் மிக்க தந்தையின் பரிசு இக்குழந்தை என்றும் இப்பரிசினைத் தேடித் தந்த தந்தைக்குத் திருக்காலில் பொன் சலங்கை என்றும் தாயால் சிறப்பிக்கப்படுவதைக் காணலாம்.

### 4.2.2.3. பாட்டன்

பாட்டனை 'ஐயா' என்ற சொல்லால் அழைக்கின்றனர். ஐயாவின் அன்பு, அவருடைய பெருமை அனைத்தும் தாலாட்டுப் பாடல்களில் பாடப்பட்டுள்ளன. தந்தை தன் மகன் பெரியவன் ஆனதும் அவனிடம் தன் தொழிலைச் செய்ய விட்டுத் தான் வீட்டில் ஓய்வு பெறுவார். அப்பொழுது அவருடைய பொழுதுபோக்கு பேரக் குழந்தைகளுடன் விளையாடுவது. ஆகவே ஐயாவுக்கும், பேரக்குழந்தைகளுக்கும் இடையே உள்ள அன்பு மிகுதியும் பெருக வாய்ப்பு ஏற்படுகிறது. ஐயா பெருமை பேசும் தாலாட்டுப் பாடல்கள் மிகுதி.

கூடிய வயதும் நீடிய அனுபவமும் மிக்காரை 'மூத்தவுக' என்று வழங்குவதும், அவர்கள் சொற்கேட்டு நடப்பதும் செட்டிநாட்டாரின் பண்பாடு ஆகும். கூட்டுக் குடும்பத்தில் கணவனின் தந்தையை மனைவி 'மூத்தவுக' என்று அழைக்கிறாள். 'மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்' என்ற ஔவையாரின் கொன்றைவேந்தன் அடியும்,

*முல்லைப்பூக் கட்டடமாம்*
*முகப்பு எல்லாம் உத்தரமாம்*
*முகப்பைத் திறந்து விட்டால்*
*முல்லைப்பூ வாசனையாம் - உங்கய்யா*
*மூத்தவுக யோசனையாம்*[12]

என்ற பாட்டும் ஒப்புநோக்கத் தக்கன. இதன்வழி மருமகளுக்கு மாமனார் மேல் இருந்த மதிப்பும் மரியாதையும் நன்கு புலனாகும்.

### 4.2.2.4. பாட்டி

தாய்வழிப் பாட்டியை 'ஆயா' என்றும், தந்தைவழிப் பாட்டியை 'அப்பத்தா' என்றும் அழைக்கின்றனர். இருவரும் பேரக் குழந்தைகளிடம் பேரன்பு கொண்டவர்கள். தாய் பாடும் தாலாட்டுகளுக்குப் பிறப்பிடம் இவர்கள்தாம் எனலாம். பாட்டி பெருமை குறித்த பாடல்கள் தாலாட்டில் இல்லை. பாடுபவர்கள் தம்மைத் தாமே புகழ்ந்து கொள்வதில்லை. தாய் தாலாட்டுப் பாடுவது போலப் பேரக் குழந்தைகள் துயில்வதற்காகப் பாட்டியும் பாடுவதுண்டு.

### 4.2.2.5. தாய்மாமன்

தாய்மாமனை இவர்கள் 'அம்மான்' என்ற சொல்லால் அழைக்கின்றனர். குழந்தைகளிடம் தாய்மாமன் கொள்ளும் அன்பும், அக்கறையும் அளவிடற்கரியன. தனது இன்றியமையாத கடமையாகக் கொண்டு தங்கை அல்லது தமக்கையின் குழந்தைகளுக்கு உதவிட ஓடிவரும் இயல்பினை இவர்களிடத்து இயற்கையாகக் காணலாம். தாலாட்டில் தாய்மாமன் பெருமை பேசும் பாடல்கள் நிறைய உண்டு. ''தமக்கையின் இல்லத்திற்குப் பழம், சர்க்கரை, பால், செந்தேன், ஏலம், கிராம்பு, வெற்றிலை, சாதிக் களிப்பாக்கு, சங்கு, வெள்ளைச் சுண்ணாம்பு, விளையாட்டுச் சாமான்கள் ஆகிய இத்தனையும் கொண்டு வந்து குழந்தைகளைக் காண்பார்கள் என்றும், தாய்மாமனின் பெருமை சிறப்பாகப் பேசப்படுகிறது.''[13]

### 4.2.2.6. அத்தை

அத்தை என்பதனை 'அய்த்தை' என வழங்குவர். குழந்தைகள் மேல் அன்புள்ளவர்களாகத் தாயால் பேசப்படுகின்றனர். குழந்தைக்கு நோகக் கூடாது என்று அரளிப் பூ, மல்லிகைப்பூ இவற்றால் அடிப்பர் என்றும்,[14]

*அத்தை மடிமேலும்*
*அம்மான்மார் தோள் மேலும்*[15] *- வளர்ந்த பிள்ளை*

எனப் பாடுவதிலிருந்து குழந்தைக்கு அத்தைமடி மெத்தையாக இருந்தமையும் தெரிகின்றன.

தாலாட்டின் வழி அன்புறவுகளே பெரிதும் பேசப்படுகின்றன. இதில் கேலிக்குரிய உறவுகளோ போராட்ட உறவுகளோ பேசப்படவில்லை.

## 4.3. சாதியும் தொழிலும்

மக்கள் சமுதாயத்தில் சாதி அமைப்பால் பிரிவுகள் பலவாக ஏற்பட்டுவிட்டன. ஒவ்வொரு சாதிக்கும் ஒவ்வொரு தொழில் என விதிக்கப்பட்டது. எனவே சாதியும் தொழிலும் தாலாட்டில் இடம் பெற்றுள்ளன.

### 4.3.1.செட்டிநாட்டில் சாதி அமைப்பு

செட்டிநாட்டில் பல்வேறு வகைப்பட்ட சாதியினரும் வாழ்கின்றனர். ஆயினும் நகரத்தார் என்னும் நாட்டுக்கோட்டைச் செட்டியார், நாட்டார், கள்ளர், மறவர் ஆகிய இனத்தவர் மிகுதி. இந்நால்வரிலும் நகரத்தார் எனப்படும் நாட்டுக்கோட்டைச் செட்டியார் தலைச்சாதியினராகக் (Forward) கருதப்படுகின்றனர்.

இவர்களது சிறப்புக்களை விளக்கும் வகையில் தாலாட்டுப் பாடல்கள் அமைந்துள்ளன.

#### 4.3.1.1. செட்டியார்

இவர்களைச் சாதிப்பற்று மிகுந்தவர் எனலாம். இவர்களுக்குச் சமுதாயத்தில் நல்ல மதிப்பு உண்டு. இவ்வினத்தவரின் சாதிப் பெயர் 'நாட்டுக் கோட்டை செட்டியார்' என்பதாகும். சுருக்கமாகச் 'செட்டியார் சாதி' என்றும் அழைப்பர். தமது சாதியை உயர்த்திப் பாடுவதிலிருந்து இவர்களின் சாதிப்பற்றும், மதிப்பும் புலனாகும்.

வெள்ளிக் கடுதாசியில் வெண்கல மைக்கூட்டில்

மையெடுத்துப் பேனா பிடித் தெழுதும் பெரிய குல வமிசம் என்றும், அக்குலம் மங்காமல் இருக்க மகன் பிறந்தான் [16] என்றும்,

*வாசலிலே வன்னிமரம்*
*வமிசமாம் செட்டிகுலம்*
*செட்டிகுலம் பெத்தெடுத்த*
*சீரான நீ தூ ங்கு*[17]

என்றும் பாடுவதிலிருந்து இவர்களது சாதிப்பற்று விளக்கமாகிறது.

### 4.3.1.2. தாலாட்டில் இடம் பெற்ற பிற சாதிகள்

தங்கள் குலத்தை உயர்வாக நினைப்பது போலவே பார்ப்பவர்களை உயர்ந்த குலத்தினராக எண்ணிப் போற்றினர். ‘பார்ப்பான் மகனோ நீ’[18] எனத் தம் குழந்தையைப் பாராட்டுவதில் பெருமை கொண்டனர். பார்ப்பனர்களைக் கணக்கெழுதவும் பயன்படுத்தியுள்ளார்.[19]

செட்டிநாட்டவர் ஆண்டு முழுமைக்கும் உரிய உணவுப் பொருள்களை வாங்கி அவற்றை ஆட்கள் மூலம் பதப்படுத்தி வைத்துக் கொள்வது வழக்கம். பள்ளர், இடையர், குலப் பெண்டிர்களைக் கொண்டு அவல் இடித்த செய்தியைத் தாலாட்டுப் பாடல் தெரிவிக்கிறது.[20]

### 4.3.1.3. சாதிகளின் நிலைகள்

பொருள்வளம் காரணமாகச் சமுதாயத்தில் இவர்கள் மேல்சாதிக்காரர்களாக மதிக்கப் பெற்றனர். உயர்ந்தவராகத் தம்மைக் கருதிக் கொண்ட பார்ப்பனர் கூட இவர்களிடம் கணக்கராகப் பணிபுரிந்தனர். பள்ளர், இடையர் போன்றோர் இவர்களிடம் அடிமை வேலை செய்பவர்களாக இருந்தனர். செட்டியார்கள் பெருவிழாக்கள் கொண்டாடுமிடத்து எச்சாதியின்ரையும் அழைத்து விருந்திடுவர். ''விருந்தோம்பும் பண்பு மிகுதியாக இருந்தாலும், நம்மவர், பிற இனத்தவர் எனப் பிரித்து விருந்து படைக்கும் நிலையை இவர்களிடையே காண்கிறோம்.''[21]

## 4.3.2. தொழில்

'வினையே ஆடவர்க்கு உயிரே'[22] எனக் குறுந்தொகை கூறுகிறது. இவ்வினத்தவர் தொழில் செய்து பணம் சேர்ப்பதைத் தம் உயிராக நினைத்தனர். இம்மக்களின் தொழில் அமைப்பினைத் தாலாட்டுப் பாடல்கள் வழியாக அறிந்து கொள்ள முடிகிறது.

### 4.3.2.1. முத்துக் குளித்தல்

தாலாட்டுப் பாடல்களில் பல இடங்களில் முத்து பற்றிப் பேசப்படுகிறது. முத்துக் குளிப்போரை வேலையாட்களாக வைத்து, முத்தெடுத்து, உள்ளூர், வெளியூர்களில் வாணிகம் செய்திருப்பர் எனலாம். ஆனால்,

*முக்குளிச்சு முத்தெடுக்கும்*
*முத்துமகன் நித்திரையோ*[23]

என்ற அடி முன்னாளில் முத்தெடுக்கும் தொழிலே இவர்களே செய்திருப்பரோ என்ற ஐயுறவைத் தோற்றுவிக்கின்றது.

### 4.3.2.2. வணிகம்

'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்பது பழமொழி. இதனை நன்குணர்ந்தவர்கள் இவர்கள். செட்டி என்ற சொல்லுக்கே வணிகன் என்றொரு பொருளுண்டு. இவர்கள் செய்யும் தொழிலின் சிறப்பால் இப்பெயர் பெற்றனர். இவர்கள் உள்நாட்டு வாணிகம், வெளிநாட்டு வாணிகம் இரண்டிலும் சிறப்புற்று விளங்கினர்.

*ஏறுவதும் கப்பல்*
*இறங்குவதும் துறைமுகம்*[24]

என்றும்,

*துறைமுகத்து வியாபாரி*
*துரைமார்கள் உங்களய்யா*
*திரவியர்கள் எண்கோடி*
*சேர்த்து வைப்போர் எங்களய்யா*[25]

என்றும் பாடுவதிலிருந்து வெளிநாட்டு வாணிகம் செய்பவரையே மிகுதியும் மதித்தமை புலனாகிறது. மிளகு, கடுகு, முத்து, பவளம், பட்டு, குதிரை, முதலிய வாணிகப் பொருள்களைக் கொழும்பு, மலேயா, பர்மா முதலான இடங்களுக்குச் சென்று வணிகம் செய்தனர்.

### 4.3.2.3. பிற தொழில்கள்

இவர்கள் கால மாற்றத்திற்கு ஏற்பக் கல்வித் தகுதியால் அரசுப் பணிகளிலும் ஈடுபட்டனர். கல்வியால் கிடைத்த வேலைகளைப் பெரிதும் மதித்தனர். கணக்கெழுதுவதிலும், வட்டிக்குப் பணம் கொடுப்பதிலும் இவர்கள் சிறந்து விளங்கினர். சமுதாயத்தின் மதிப்பைக் கெடுக்கும் தூய்மை அற்ற, உயர்வற்ற பணிகளை இவர்கள் செய்வதில்லை என்பது இவர்கள் மேற்கொண்ட தொழில்களை ஆராய்வதால் விளங்குகிறது.

வணிகம் குலத் தொழிலாக இவர்களுக்கு வாய்த்தது. இதனைச் சாதித் தொழில் எனலாம். அரசுத் தொழில்களை எச்சாதியினரும் செய்யலாம். இவ்வகைத் தொழில்களையும் இவர்கள் மேற்கொண்டனர்.

## 4.4. சமயமும் சடங்கும்

மனிதனால் சமைக்கப்பட்டது சமயம் ஆனது. அச்சமயம் மனிதன் தன் வாழ்வில் வளம் பெறவும் விலங்கின் தன்மையிலிருந்து விடுதலை பெற்று மக்கள் தன்மையைப் பெறவும் ஏற்படுத்தப்பட்டது என்பர். இது மனிதனுக்கும் மனித நிலைக்கும் மேற்பட்டதாக உள்ள ஆற்றல் அல்லது ஆற்றல்களுக்கும் உள்ள தொடர்பு பற்றியது. இதில் மனிதனுடைய ஆழ்ந்த நம்பிக்கைகளும் சடங்குகளும் உணர்வுகளும் நிறைந்துள்ளன. இதனால் தனக்கு வலிமையும், பாதுகாப்பும், அமைதியும், ஆக்கமும் கிடைக்கும் என நம்புகிறான் மனிதன்.[26]

## 4.4.1.செட்டிநாட்டாரின் சமயம்

'கோயில் விளங்க குடி விளங்கும்' என்ற பழமொழி இவர்களிடையே வழங்குகிற அளவிற்குப் பிற இடங்களில் வழங்குவதாகத் தெரியவில்லை. களப்பணியில் செட்டிநாட்டு ஆச்சியிடம் இக்கட்டுரையாளர் பாடல் கேட்டபோது அவர் முதலில் கடவுள் தாலாட்டுப் பாடுகிறேன் எனக் கூறி, " தங்க முத்தாம் தாவடமாம் தனுஷ்கோடி இராமருக்கு" என்ற பாடலைப் பாடினார். இதை நோக்கத் தெய்வத்தை முன்னிறுத்தியன்றி எதனையும் செய்யாச் சிறப்புடைய மரபினைச் சேர்ந்தவர்கள் இம்மக்கள் எனத் தெரிகிறது. தாலாட்டுப் பாடல்களைக் காணும் போது இவர்கள் சமயம் பற்றிய எண்ணங்கள், நம்பிக்கைகள் வேண்டுதல்கள் இவற்றை எதிரொலிப்பனவாக உள்ளன.

இவர்களது சமயம் சைவச் சமயம் ஆகும். இருப்பினும் இவர்கள் சைவத்தோடு நெருங்கிய தொடர்புடையதாகக் கருதப்படும் வைணவ தெய்வங்களையும் வணங்குகிறார்கள். பிற சமயத் தெய்வங்களை இவர்கள் வணங்குவதில்லை. மதம் மாறுவோரையும், மதம் மாறித் திருமணம் செய்து கொள்வோரையும் சாதியிலிருந்து விலக்கி விடுகிறார்கள்.

தந்தை தெய்வ வழிபாடு, தாய்த் தெய்வ வழிபாடு, இயற்கை வழிபாடு, குலக்குறி வழிபாடு, துளசி வழிபாடு, கல்வித் தெய்வ வழிபாடு, ஆவி வழிபாடு, புனிதப் பொருள் வழிபாடு, விளக்கு வழிபாடு, கண்கட்டு வழிபாடு என வழிபாடு பலவகையாக விளங்குகின்றது.[27]

இவர்கள் தாலாட்டுப் பாடல்களில் தந்தை தெய்வ வழிபாடும் (ஆண் தெய்வம்) தாய்த் தெய்வ வழிபாடும் (பெண் தெய்வம்) சிறப்பாகக் காணப்படுகின்றன. தந்தை தெய்வ வழிபாடாகச் சிவன், பிள்ளையார், முருகன், ஐயனார் ஆகியோரையும், திருமாலின் அவதாரத் திருநாமங்களையும் வழிபடுகிறார்கள். தாய்த் தெய்வ வழிபாடாக மீனாட்சி அம்மையையும், சீதாதேவி, வள்ளி, தெய்வயானை, சரசுவதி, இலட்சுமி ஆகிய பெண் தெய்வங்களையும் வழிபடுகிறார்கள்

இறைவனின் அடியவர்கள் வழிபாடாக, சாத்தய்யா, வீரய்யா, கறுப்பய்யா என்னும் காவல் தெய்வங்களையும் வழிபடு கின்றமை தெரிகிறது.[28] இறைவன் திருப்பெயர்களில் சொக்கர், சுப்பையா, மீனா, விசாலாட்சி, வள்ளியம்மை, தெய்வானை முதலான பெயர்களை இவ்வினத்தவர்களில் பெரும்பாலோர் தங்கள் பெயர்களாகக் கொண்டுள்ளனர். இதனால் இக்கடவுளரிடம் இவர்களுக்குள்ள ஆழ்ந்த ஈடுபாடு புலப்படுகிறது.

இறைவனை உள்ளன்போடு வணங்கியதால் மலடி என்ற சொல் நீக்கப்பட்டது[29] என்றும், குழந்தைக்கு இறைவனே காவல்[30] என்றும், அக்குழந்தை எதிர்காலத்தில் கடவுள் நம்பிக்கையோடு விளங்க வேண்டும்[31] என்றும் தாய்மார்கள் பாடுவதிலிருந்து பக்திப் பண்பாடு சீரியதாக உள்ளமை தெரிகிறது. பெண்களன்றி ஆண்களும் கடவுளை வணங்கு வதிலும் அக்கடவுளுக்கு மலரெடுத்துப் பூசை செய்தலைப் பெருவிருப்போடு செய்வதிலும் சிறந்து விளங்கினார்கள் எனத் தெரிகிறது.[32]

### 4.4.2. விழா

பக்தியை அடிப்படையாகக் கொண்டு நாட்டுப்புறங்களில் விழாக்கள் நடைபெறும். செட்டிநாட்டுப் பெண்கள் இவ்விழாக்களில் பெரிதும் ஈடுபாடு கொண்டு காணச் செல்வர். விழாக்களில் தெய்வத் தொடர்பான கதைகள், ஆடல்கள், பாடல்கள் கூத்தாக நடைபெறும். இவற்றை இப்பெண்கள் கேட்டதன் விளைவே அந்த அந்த ஊர்த் தெய்வத் திருப்பெயர்களையும், அக்கடவுளரின் புராண நிகழ்ச்சிகளையும் தாலாட்டின் வழி இவர்களால் எடுத்தியம்ப முடிகிறது.

சப்பரம் எடுத்தல், தேர் ஓட்டம், தெப்ப விழா, ஆகியவற்றைச் சமய விழாக்களாகக் கொண்டாடினர்.

### 4.4.3. சமயச் சடங்குகள்

திட்டமிடப்பட்ட வினைகளே சடங்குள் எனப்படும். பூசை

செய்தல், நிவர்த்திக் கடனாகக் காணிக்கை செலுத்தல், மாவிளக்கு வைத்தல், பொங்கலிடுதல், சன்னதிக்கு வரல், தொட்டி கட்டுதல், இசைச் சடங்குகள் என்பன தாலாட்டில் சமயச் சடங்குகளாக இடம் பெற்றுள்ளன. மலரெடுத்து மாலை தொடுத்து இறைவனுக்கு மாலை அணிவிப்பதை ஒரு புனிதச் சடங்காகக் கருதுகின்றனர்.

*எடைக்கு எடைக்குப் பொன் கொடுத்த*
*எடுத்து வைத்த சித்தடியோ*[33]

என்பதிலிருந்து குழந்தை பிறந்தவுடன் கடவுளுக்குக் குழந்தையின் எடைக்கேற்பப் பொன் கொடுக்கும் வழக்கம் இருந்தமை புலனாகிறது.

### 4.4.4. சமய நம்பிக்கை

நம்பிக்கை மனிதனின் மூன்றாவது கை என்பர். இவர்களிடம் இறை நம்பிக்கை மிக ஆழமாக வேரோடியுள்ளது. தீர்த்தமாடினால் குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கை, நிவர்த்திக் கடன் செய்வதாக வேண்டிக் கொண்டால் கேட்டது கிடைக்கும் என்ற நம்பிக்கை, குழந்தை நீடிய ஆயுளோடு இருக்க இறைவன் துணை இருப்பான் என்ற நம்பிக்கை, நோன்பு இருப்பதால் வேண்டியது கிடைக்கும் என்ற நம்பிக்கை, இறைவன் பிரசாதங்களை அணிந்தால் குழந்தைக்குப் பட்ட கண்ணேறு, நோய் முதலானவை போய்விடும் என்ற நம்பிக்கை இறைவனை முதலில் நினைத்துப் பின் எந்தச் செயலையும் தொடங்கினால் வெற்றி கிட்டும் என்ற நம்பிக்கை, இறைவனுக்குப் படைக்கப்பட்ட பொருள்களில் மீதமானதை ஏலத்தில் மிகுந்த விலை கொடுத்து வாங்குவோருக்குப் பாலன் பிறக்கும், செல்வம் செழிக்கும் என்ற நம்பிக்கை எனப் பல்வேறு சமய நம்பிக்கைகள் இவர்களிடம் உண்டு.

## 4.5. பொருளாதாரம்

சமுதாயத்தின் அடித்தளமாக அமைவது பொருளாதாரம். அந்தப் பொருளாதாரத்திற்கு ஏற்பப் பண்பாடு மேல்தளமாக

அமைகிறது. பொருளாதாரத்தில் தன்மைக்கு ஏற்பப் பொருள் உள்ளவர்கள் சமுதாயத்தில் மதிக்கப்படுகின்றனர். 'செய்க பொருளை'[35] என்றார் வள்ளுவர். இதனை நன்கு தெரிந்ததால்தான் செட்டிநாடு மக்கள் பொருள் தேடுவதில் பெரும் ஆர்வம் கொண்டு பொருள் சேர்க்கின்றனர்.

''செல்வநிலை உள்ள பாடல்கள் நகரத்தார் எனப்பெறும் நாட்டுக்கோட்டைச் செட்டியார் தாலாட்டுக்களில் காணப்படும். சிலப்பதிகாரத்தில் அரசனது செல்வ நிலைக்குச் சமமாக வணிகர்களும் செல்வநிலையில் உயர்ந்திருந்தனர் என்று அறிகிறோம். நகரத்தார் என்னும் செட்டியார்கள் தொழில் வட்டித் தொழில். அவர்களது புழக்கம் தங்கம், வெள்ளி, வைரம், முத்து முதலான நவரத்தினங்களில் இருந்தன, இன்றும் இருக்கின்றன. முதலாளிகள் பெரும் வாணிபக் குழுக்களில் பங்குதாரர்களாகவும் இருக்கிறார்கள். எவ்வாறாயினும் அவர்களில் பெரும்பாலோர் இன்றும் செல்வ நிலையில் உள்ளனர்.''[36]

*தங்கத்தால் இட்டு வட்டி*
*சாதமிட வெள்ளி வட்டி*
*வெள்ளியினால் இட்டு வட்டி*
*விதத்தில் ஒரு தொட்டிகட்ட*
*பாட்டெடுங்கள் தொட்டிகட்ட*
*பவுன் உரையுங்கள் பொட்டுமிட*[37]

என்னும் பாடலில் தங்கம், வெள்ளி, பட்டு மிக எளிய பொருள்களாவதை அறியலாம்.

*கோக்காத முத்தோ*
*கோதை கையில் குஞ்சரமோ*
*பாண்டிப் பரிமுத்தோ*
*பாட்டன்மார் ஆண்ட முத்தோ*
*பதக்கத்தின் கல்லொளியோ*
*ஆரஞ்சு முத்தோ*
*ஆயிரத்தின் கல்லொளியோ*
*முத்திரையின் முத்தோ*

*முதிர விளைந்த முத்தோ*
*தேவர்கள் ஆண்ட முத்தோ.*[38]

இவ்வாறான பாடல்கள் செல்வம் மேலும் வளர்ச்சி பெற வேண்டும் என்னும் கொள்கை இவர்களுக்கு இருந்ததை உணர்த்துகிறது.

காசியிலே முத்து வாணிகம் செய்கிறான் ஒரு செட்டி மகன். வாணிகன் முத்துக்களைப் படியிலே அளக்கிறான். அவன் வணிக நுணுக்கங்கள் தெரிந்தவன். ஆதலால் அதை நன்றாக அளக்கச் சொல்லிக் குழந்தையின் தாய்மாமன் கூறுகிறான். அந்தக் குலப்பெண்ணின் சிந்தனையிலிருந்து தன் மகனைத் தன் உடன் பிறந்தவன் கவனித்துக் கொள்வான் என எண்ணுவது தெரிகிறது.[39]

*செல்வத்தில் செழிப்புக் கொண்டதால்தான்,*
*கடையிலே சோறு வைத்து*
*குடத்தோடு மோரும் வைத்து*
*கூப்பிட்டு அன்னமிடும்*
*கொற்றவனார் பேத்தியோ*[40]

என்றும்,

*குளிக்க குளங்கள் கட்டி*
*கும்பிடவும் கோயில் கட்டி*
*மதிக்க மடங்கள் கட்டி வைக்கும்*
*மகராசனார் பேரனோ*[41]

என்றும் செட்டிநாட்டுத் தாய்மார்கள் பாட முடிகிறது. கற்பனையாகக் கூட இவ்வாறு பாடியிருக்கலாம் என்று கருதலாம். ஆனால் களப்பணியில் ஓர் ஆச்சியிடம் வெளிநாடு சென்று வாணிபம் செய்து தாய்நாட்டிற்குத் திரும்புவதைப் பற்றிப் பாடுங்கள் என்று ஆய்வாளர் கேட்டார். வெளிநாடு சென்று வந்தவர்களின் வீட்டினர்தாம் அவ்வாறு பாடுவார்கள். எனக்குத் தெரியாது என்று சொல்லிவிட்டார் அந்த ஆச்சி.[42]

இவ்வாறு வணிகத்தால் வருங்காலத்தில் பெறும் செல்வச் செழிப்பையும் அதன் பயனாக அறப்பணிகள் செய்தலையும் செட்டித்தாய்மார்கள் பெருமையாகக் கூறுகின்றனர்.

## 4.6. மொழி

மொழியே மக்களின் மனத்தை எதிரொலிக்கும் கண்ணாடி என்பர் [43] மொழிவளம் பெறுவதும் வறுமையுறுவதும் அம்மொழி பேசும் மக்களின் மனவளத்தை ஒட்டியன.[44]

இம்மக்கள் பேசும் மொழி இன்றளவும் நிலைத்திலங்கும் தமிழ் மொழி. இவர்கள் பேச்சு வழக்கிலும் இலக்கிய வழக்கிலும் இலக்கிய மணம் கமழும் சொற்களைக் கையாளக் காணலாம். கல்வியில்லாத பெண்கள் பாடும் தாலாட்டில் சொற்கள், பொருள் ஆழம் மிக்கும், இலக்கிய மணம் கமழ்வனவாகவும் அமைந்துள்ளன. பேச்சு வழக்குச் சொற்கள் மிகுந்திருந்தும் அவை தனித்தமிழாகவே விளங்குகின்றன. இவற்றால் அவர்களின் தமிழ்ப் புலமை தெற்றென விளங்குகின்றது.

### 4.6.1. சொல் இலக்கணக் கூறுகள்

இப்பாடற்சொற்களின் இலக்கண வடிவங்களைக் காணும்போது தெரிநிலை வினைமுற்றுக்களன்றித் தாலாட்டுப் பாடல்கள் அமைய வல்லன என்பதை அறியலாம். குழந்தையை வருணிக்கும் பாடல்களில் இதுபோன்ற அமைப்பினைச் சிறப்பாகக் காண முடிகிறது. சில பாடல்களில் தெரிநிலை வினைமுற்றுக்கள் இல்லை. செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்களில் பெயர்ச்சொற்களும் அதற்கேற்ற அடைகளும் அமைந்து பாடற்பொருளைச் சிறக்கச் செய்யும் பாங்கினைக் காணலாம்.[45]

பெயர்ச்சொற்கள் மிகுதியாக இடம் பெற்றுள்ளதைக் காண முடிகிறது. விளையெச்சம், வினைப் பெயர்கள் குறைந்த அளவிலேயே காணப்படுகின்றன.

### 4.6.2. சொற்றொடர் அமைப்பு

இப்பாடல்களில் தொடர்கள் நீண்டு இறுதியில் முடியும் தொடரியல் அமைப்பு முறை சிறப்பாக உள்ளது. இதனால் சொற்களைத் தொடர்ந்து அடுக்கி முடிக்கும் திறன் புலப்படுகிறது.

*செங்கழனி மாலை*
*சிவன் தந்த பூமாலை*[46]

என்று குழந்தைக்கு ஏற்றவண்ணம் சிறுசிறு தொடர்களை அமைத்துப் பாடும் போக்கும் காணப்படுகிறது. இரண்டிரண்டு அடிகள் ஒரு தொடராக அமையும் போக்கும் காணப்படுகிறது. சில தொடர்கள் எளிதில் பொருள் விளங்கிக் கொள்ள முடியாத வகையில் அமைந்துள்ளன.

*ஏறுடா இராவணா*
*இறங்குடா மேடை விட்டு*[47]

என்ற அடிகளில் இராவணனை எமன் உலகத்திற்கு ஏறச் சொல்கிறார்கள் போலும் என நாமே பொருள் கொள்ள வேண்டியிருக்கிறது. அன்றியும் பாடவேறுபாடு காரணமாகவும் ஒலிநயம் கருதி அமையும் சொற்கள் காரணமாகவும் சில இடங்களில் தொடரின் பொருளை விளங்கிக் கொள்ள முடியவில்லை.[48]

### 4.6.3. சொல்லும் பொருளும்

சிறந்த சொற்களைக் கையாளுவதுடன் அல்லாமல் அவற்றுக்குரிய சிறப்பான பொருளையும் கவனித்துக் கையாளுகின்ற தன்மையினை இப்பாடல்களில் காண முடிகிறது.

ஊறுகின்ற நீர் உள்ள இடத்தைக் குறிக்க ஊருணி என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.[49]

திருநீற்றின் வெண்மை கருதி வெண்ணீறு என்கின்றனர்.[50] குங்குமத்தைத் திருச்சொர்ணம்[51] என்று அழைக்கின்றனர். சொர்ணம் என்பதற்கு வடமொழியில் தங்கம் என்பது பொருள். குங்குமத்தில் மகிமையைப் பெரிதும் உணர்ந்து இருந்தமையால் சிறந்த தங்கம் எனக் கருதித் திரு என்ற அடை கொடுத்துத் திருச்சொர்ணம் என்கின்றனர். பிராமணர்களின் தொடர்பு இவர்களிடையே மிகுதியாக இருந்ததன் காரணமாக வடமொழிச் சொற்கள் சில இவர்கள் வழக்கிலும் இடம் பெற்றுவிட்டன.

மதியத்திற்கும் மாலைக்கும் இடைப்பட்ட (3 மணியிலிருந்து 5 மணி வரை உள்ள காலப்பொழுது) நேரத்தை எடப்பகலை[52] எனக் குறிக்கின்றனர். எடப்பகலை பலகாரம் என்பது மாலைச் சிற்றுண்டி ஆகும்.

இவர்கள் தாலாட்டிலிருந்து கிடைத்த வழக்குச் சொற்களையும் அவற்றுக்குரிய பொருள்களையும் பின்னிணைப்புப் பகுதியில் காணலாம்.

### 4.6.4. தமிழாக்க முறை

சில நேரங்களில் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்தும் இன்றியமையாத நிலை ஏற்படும்போது அவற்றை அப்படியே கையாளாமல் அவரவர் மொழிக்கு ஏற்ப ஆக்கிப் பயன்படுத்துவதனை ஆக்க முறை என்கிறோம். தமிழில் மொழி முதலில் மெய்யெழுத்து வராது. எனவே ட்ரைவர் (ணீரறிகர) என்பதனை டைவர்[53] என ஆக்கிப் பயன்படுத்தலைக் காணலாம். உச்சரிப்பு எளிதாக உள்ள தன்மையை நினைத்து இவ்வாறு ஆக்கிக் கொள்கின்றனர்.

சில இடங்களில் ஆங்கிலச் சொற்களை அப்படியே கையாளும் போக்கும் உள்ளது. மைக்[54] என்ற சொல் இவ்வாறு கையாளப்பட்டுள்ளது.

### 4.6.5. தமிழ்ப் பற்று

இவர்கள் தாம் பேசும் தாய்மொழியில் பெரிதும் பற்றுக் கொண்டிருந்தமையினை, 'தமிழோ புனக்கிளியோ'[55] எனக் குழந்தையைக் கொஞ்சுமிடத்துக் காண முடிகிறது. தமிழ் இலக்கியங்களை அறிந்துள்ளமை, 'இலக்கியமே கண்வளராய்'[56] என்று கூறுவதிலிருந்து தெரிகிறது. திருவாசகம்,[57] திருக்குறள்[58] இவற்றின் பொருள் கொண்ட அடிகள் இவர்கள் தாலாட்டில் இடம்பெற்றுச் சிறந்துள்ளன. இதனால் இவர்களுக்கு இருந்த இலக்கிய அறிவு புலப்படுகிறது.

## 4.7. நாகரிகமும் பண்பாடும்

நகரத்திலிருந்து தோன்றியது நாகரிகம் என்பர். அக வளர்ச்சியைப் பண்பாடு என்றால், புற வளர்ச்சியை நாகரிகம் எனலாம். இவை இரண்டும் ஒன்றோடொன்று தொடர்புடையன. அகவளர்ச்சிக்கு ஏற்ப அம்மக்களின் நாகரிகம் காணப்படும். மக்களின் நாகரிகத்தைக் கொண்டு அவர்கள் அகப்பண்பாட்டை அறியலாம்.

நாகரிகத்தின் மேம்பாட்டினை அம்மக்களின் உணவு, உடை, உறையுள், அணிகலன்கள் பயன்படுத்தும் பொருள்கள், பொழுது முறைகள், விளையாட்டுக்கள் போன்றவற்றிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

### 4.7.1. உணவு

பலவகை உணவுகள் இருப்பினும் தமிழ்நாட்டு மக்களுக்கு அரிசி உணவே மிகுதியும் விருப்பமான உணவாக அமைகிறது. அவ்வகையில் இவ்வினத்தவரும் சோறு, கஞ்சி, குழம்பு, காய்கறிகள், பலகாரம், கனிகள் போன்றவற்றை உணவாகக் கொள்கின்றனர். குழந்தையின் உணவு பாலாக அமைகிறது.

சைவ உணவை இவர்கள் பெரிதும் விரும்புகின்றனர். விழாக்களில் இவ்வகை உணவையே விரும்பிச் சமைக்கின்றனர். கண்ணம்மை ஆச்சியின் பள்ளத்தூர் அழகஞ் செட்டியார் தாலாட்டில் செட்டிநாட்டுக்குரிய சிறப்பான உணவு வகைகள் குறிக்கப்படுகின்றன.[59]

குழந்தையிடம் 'பணியாரம் வேண்டினையோ'[60] எனச் செட்டிநாட்டுத் தாய் கேட்டதிலிருந்து பலகார வகைகளில் பணியாரம் என்ற உணவு வகைக்குச் சிறப்பான இடம் உண்டு எனத் தெரிகிறது.

குழந்தைக்கு உணவினைப் பொழுதோடு கொடுக்க வேண்டும் என்பதை விளக்கும் வகையில்,

பூப்பூத்த கோவிலிலே
பொன்னூஞ்சல் ஆடுதுன்னு
மாத்தொசந்த பூமுடியான்
முத்துமாலைக் கமுதானோ
அழுதா அழதிண்கான்
அந்திப்பட்டா கண் தூங்கான்
பொழுதோடு அழுதிடுங்க
புள்ளைப்பசி ஆறுதக்கி
பகலோடு அழுதிடுங்க
பாலன்பசி ஆறுதக்கி[61]

என்னும் பாடல் அமைந்துள்ளது. இதனைத் தாய் பாடியிருப்பாளோ என ஐயுறத் தோன்றுகிறது. தாய்க்கு அறிவுறுத்தும் வண்ணம் அவளுடைய மாமியார் பேரக் குழந்தையைக் தொட்டிலிலிட்டு இவ்வாறு யாடியிருக்க வேண்டும். ஏனென்றால் மாமியார் மாமனார் மருமகள் மகன் குழந்தை ஆகிய அனைவரும் சேர்ந்து வாழும் வழக்கம் இவர்களிடை இருந்தது. இப்பாடல் குழந்தையின் உளவியல் பாங்கினை அறிந்து பால் நினைந்தூட்டும் தாயாக விளங்க வேண்டும் என்பதைச் சிறப்பாக அறிவுறுத்துகிறது.

### 4.7.1.1. ஆடை

'ஆள் பாதி ஆடை பாதி' என்பர். ஒரு மனிதனை முழுமையாகக் காட்டுவது ஆடை ஒன்றுதான். பண்பாட்டின் சின்னமாக முதலில் தோன்றிய ஆடை இன்றைக்கு நாகரிகத்தின் நிலைக்களனாய் விளங்குகிறது.

வேட்டி, சட்டை, துண்டு ஆகியன ஆணுக்குரிய ஆடைகளாகும். இரவிக்கை, பட்டுச்சேலை, பாவாடை, சிற்றாடை முதலியன பெண்ணுக்குரிய ஆடைகளாகும். ஆண்கள் தங்கள் ஆடைகளைத் தாங்களே ஆற்றிற்குச் சென்று துவைத்து உடுத்திக் கொண்டமையை ஒரு தாலாட்டுப் பாடல் தெரிவிக்கிறது.[62] தொட்டில் கட்டுவதற்குக் கூட காசியிலே பட்டெடுத்துக்

கட்டுதலைப் பெருமையாக நினைக்கின்றனர் இவ்வினத்துப் பெண்கள்.[63]

### 4.7.1.2. உறைவிடம்

தாலாட்டுப் பாடல்களில் தாங்கள் வாழும் குடியிருப்புகளைப் பற்றியும் தெரியும் வண்ணம் பாடப்படுவதைக் காணலாம். இவ்வினத்தவர்கள் அவரவர் பணத்துக்குத் தக்கபடி வீடுகள் கட்டிக் கொள்கின்ற போக்கினைக் காணலாம். ஒரே வீட்டில் பிள்ளைகள் குடும்பமும் வசிக்கும் பழக்கத்தால் இவர்கள் கட்டும் வீடுகள் பெரிய அரண்மனை போல் விளங்குகின்றன. தாலாட்டுப் பாடல்களில் வீட்டைக் குறிக்கப் பல இடங்களில் அரண்மனை என்ற சொல்லே வருகிறது.

*'செழுநகர் முற்றத்து'*
*'பொன்துஞ்சு வியன்நகர்'*[64]

இங்கு நகர் என்ற சொல் செல்வம் நிலைபெற்ற பெரிய அரண்மனையைக் குறிக்கிறது.

*'கூடு விளங்கு வியன்நகர்'*[65]

என்ற இடத்தில் நகர் என்ற சொல் நெற்கூடுகள் மிக்கு விளங்கும் பெரிய வீட்டினைக் குறிப்பதாக அமைகிறது. நகர் என்னும் சொல் அரண்மனையையும் அரண்மனை போலுள்ள வீட்டையும் குறிக்கும். அரண்மனை போலும் வீடமைத்து இவர்கள் வாழ்ந்தமையால் இவர்களுக்கு நகரத்தார் என்ற காரணப்பெயர் ஏற்பட்டு வழங்கலாயிற்று என்று ஔவை சு. துரைசாமிப் பிள்ளை கூறுவர்.[66]

அழகஞ்செட்டியார் வீட்டில் படைப்பின் போது வந்திருந்த ஆச்சிகளின் குழந்தைகள் துயிலத் தொட்ட இடமெல்லாம் தொட்டிவளை போடப்பட்டிருந்ததாகப் பாடப்பட்டுள்ளது. ஒரே இடத்தில் இரண்டு பிள்ளைகள் குடும்பமும் வசிக்க வேண்டி வீட்டின் பெரியவர் ஒரு வீட்டை இரண்டு பெரும் பிரிவுகளாக ஒரே அமைப்புடன் கட்டச் செய்திருப்பார். இதனை 'ரெட்டை வீடு' என்று கூறுவர்.[67]

வீட்டிற்கு முன்பு முல்லைக் கொடிகள் வளர விடுவது நல்ல மனத்தின் பொருட்டும் பண்பாட்டின் பொருட்டும் ஆகும். முன்பக்கம் முல்லைப்பூ மிகுதியாக இருத்தலினால் முல்லைப்பூக் கட்டிடம் என்பர். கட்டிடத்தின் முகப்பைத் திறந்து விட்டால் முல்லைப்பூ வாசனை வரும். இவ்வாறு கட்டுவதற்கு யோசனை சொன்னவர் வீட்டின் மூத்தவராகக் கருதப்படும் மாமனார் என்று பெருமையுடன் ஒரு தாய் தாலாட்டி சைக்கிறாள்.[68]

இப்பொழுது செல்வந்தர்கள் மிகக் குறைவு. நடுத்தர வகுப்பினர்களே மிகுதி. இக்காலத்தில் தாலாட்டிசைக்கும் செட்டிநாட்டுத் தாய் 'வெத்துக் குடிசையிலே விளையாட வந்தவனே'[69] எனப் பாடுகிறாள். இவர்கள் வாழும் வீடுகள் தவிர இறைவன் கொலுவிருக்கும் கோவில்களும், வழிப்போக்கர்கள் இளைப்பாறப் பெரும் சத்திரங்களும் பிள்ளைகள் கல்வி பயிலப் பெரும் பள்ளிக் கூடங்களும் கட்டி, கட்டடக் கலையில் சிறந்து விளங்கினர்.

### 4.7.1.3. அணிகலன்கள்

நாகரிக வளர்ச்சியில் ஆடைகளன்றி அணிகலன்களும் சிறப்பிடம் பெறுகின்றன. இவர்கள் அணியும் அணிகலன் களிலிருந்து இவர்களது நாகரிக நிலை, பொருளாதாரம், சமூக வளர்ச்சி, சிற்பச் சிறப்பு, வரலாற்று உண்மை, ஆகிய பல்வேறு செய்திகள் வெளியாகின்றன. 'தாலாட்டுப் பாடல்களில் பல்வேறு செய்திகள் வெளியாகின்றன. 'தாலாட்டுப் பாடல்களில் பல்வேறு அணிகலன்களை அணிவதற்கென்றே பிறந்த குழந்தை' எனத் தாயால் பெருமையுடன் கூறப்படுகின்றது.[70] வயிரம், நல்முத்து, நவரத்தினம், பவளம், தங்கம் இவற்றால் செய்யப்படும் அணிகலன்களை விலைமதியா அணிகலன்கள் எனக் கருதுகிறார்கள்.[71] தொட்டில், மெத்தை, தலையணை போன்றனவும் பொன்னால் செய்யப்பட்டன எனக் கற்பனை கலந்தும் பாடுகிறார்கள்.[72] தாலாட்டுப் பாடல்களினின்றும் கிடைத்த அணிகலன்களில் பெயர்கள் பின்னிணைப்பில்

தரப்பட்டுள்ளன. தாலாட்டுப் பாடுகிறவர்கள் பெண்கள். இவர்களுக்கு அணிகலன் என்றால் மிகுதியும் ஈடுபாடு. எனவே தாலாட்டில் அணிகலன்களில் பெயர்களும் மிகுதியாக வருகின்றன. இதனால் இவர்களது செல்வ நிலை சிறப்பாகத் தெரிகிறது.

### 4.7.1.4. மனைப் பொருள்கள்

இம்மக்கள் பயன்படுத்தும் பொருள்களைக் கொண்டு இவர்களது ஆசைகளையும், அகவுணர்களையும் அளந்துரைக்க முடியும். மனைப்பொருள்கள் பலவகைப்பட்டன. அனைத்தும் தாலாட்டில் காண முடியாது. தாலாட்டில் இடம் பெற்ற மனைப் பொருள்கள் குரிச்சி, பஞ்சு மெத்தை, வட்டி, விளக்கு, தலையணை, கண்ணாடி, சாவி, முக்காலி, செம்பு, வெள்ளி, மணிச்சட்டி, சீனி, வெள்ளி வட்டி, தொட்டில், கடை, பானை, பெரிய அண்டா, விபூதித் தட்டு, சிவப்பு ஓலைப்பாய் எனப் பலவகையாகக் காணப்படுகிறது.

இவர்கள் உண்ணும் கலத்தை வட்டி என்ற சொல்லால் அழைக்கின்றனர். இது வட்டில் என்பதன் திரிபு. முதலைத் தின்று தீர்ந்து விடக்கூடாது என்று அம்முதலின் மூலம் கிடைக்கும் வட்டியை வைத்துத்தான் உண்ண வேண்டும் என்பதை நினைவுபடுத்த வேளைதோறும் வட்டி வைத்து உண்ணுகின்றனர், என உட்பொருள் கொள்ளும் வகையில் இச்சொல்லைக் கையாளுகின்றனர். இன்றும் வட்டி என்ற சொல்தான் பெருவழக்காய் உள்ளது.

### 4.7.1.5. கல்வி நிலை

செட்டிநாட்டுப் பெண்கள் அன்று கல்வி கற்கப் பள்ளிக்கூடம் செல்லவில்லை. எனினும் 'கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு' என்ற உண்மையைத் தெரிந்து வைத்திருந்தனர். எனவே தன் பிள்ளை கல்விக் களஞ்சியமாகத் திகழ வேண்டும் என விரும்புகிறாள்.[73]

*'பேனா புடித்தெழுதும் பெரிய குலவமிசம்'*[74]

என்றும்,

*'விரசாய்க் கணக்கெழுதும் வீமர்'*[75]

என்றும்,

*'கல்விக் களஞ்சியமே*
*கற்றோர்க்குத் தாயகமே'*[76]

என்றும்,

*'இலக்கியமே கண்வளராய்'*[77]

என்றும்,

*'படிப்பதுவும் தமிழ்*
*பார்ப்பதுவும் பணக்கணக்கு'*[78]

என்றும்

*'குறிச்சியிலே உட்கார்ந்து*
*ஜட்ஜோடே பேசும்*
*தருமவா பேரனோ'*[79]

என்றும் பாடுவதிலிருந்து கல்வியின் அகலத்தையும், ஆழத்தையும் உணர்ந்தவர்களாகப் பெண்கள் விளங்குகிறார்கள் என்பது தெரிகிறது. இக்காலத்தில் ஆண்களுக்கு நிகராகச் செட்டிநாட்டுப் பெண்களும் கல்வி கற்கிறார்கள்.

### 4.7.1.6. விளையாட்டு

குழந்தைகள் விளையாட்டைப் பெரிதும் விரும்புவர். அவர்களுக்காகப் பாடப்படும் தாலாட்டில் விளையாட்டுக்களும், விளையாட்டுச் சாமான்களும் இடம் பெறுகின்றன.

*சொக்கர் தெருவிலே*
*சூதாடும் வீதியிலே*[80]

என்ற அடிகள் சூதாடுவதற்கான வீதிகள் தனியே இருந்ததைச் சுட்டுகின்றன.

*பூப்பூத்த புளியருகே*
*பொன்னு பதிச்ச பம்பரம் போல்*
*ஆக்க விளையாண்டு*
*வேக்குதுன்னு வந்தானோ*[81]

குழந்தை ஓடி விளையாடுவதைப் பொன் பதித்த பம்பரம் போல் இருந்தது என உவமைப்படுத்துவதால் இவர்களது செல்வ நிலையும் குழந்தையின் விளையாட்டு அழகும் ஒருங்கே புலப்படுகின்றன. 'வெள்ளிப் பலகையில் விளையாட வந்தவன் தன் மகன்' எனப் பெருமையோடு ஒரு தாய் பாடுகிறாள்.[82] விளையாட்டில் கூடச் செல்வ நிலை புலப்படும் வண்ணம் பாடுகிறார்கள்.

*போட்டு விளையாடப் பொன்னாலே அம்மான்ன*
*கட்டி விளையாடக் காசிச் சிண்டுமணி*
*வைத்து விளையாட வண்ணக் கிலுகிலுப்பை*
*ஒட்டி விளையாட ஒயிலா ரயில்வண்டி*[83]

என்ற அடிகளில் விளையாட்டு முறையும் அதற்குரிய பொருள்களும் முறையே எடுத்தியம்பப்பட்டுள்ளன.

#### 4.7.1.7. பொழுது முறைகள்

இவர்கள் விடியற்காலைப் பொழுதினை மசன்டை ன்ற சொல்லால் குறிக்கின்றனர்.[84] நடுப்பகலுக்கும் மாலைக்கும் இடைப்பட்ட நேரத்தை இடப்பகலை என்ற சொல்லால் கூறுகின்றனர்.[85] நடு இரவினை நடுச்சாமம்[86] என்று அழைக்கின்றனர்.

### 4.7.2. பண்பாடு

சமுதாயத்தினின்றும் மனிதன் கற்றுக் கொள்ளும் பண்பினைப் பண்பாடு என்று அழைப்பர். இதனுள் சமூகப் பழக்கவழக்கங்கள், சட்டங்கள், நீதிகள், கலைகள் போன்றவை அடங்கும். நிலப்பகுதி, தட்பவெப்பம், சூழ்நிலை ஆகியவற்றின் காரணமாகப் பண்பாட்டில் மாற்றம் நிகழ்வதுண்டு.[87]

### 4.7.2.1. பழக்க வழக்கங்கள்

ஒவ்வொரு நாட்டவருக்கும் ஒவ்வொரு சமூகத்தினருக்கும் பழக்க வழக்கங்கள் வேறுபடுவதைக் காணலாம். அவரவர்களுக்கு அந்தந்தக் கொள்கை, பழக்க வழக்கங்கள் இன்றியமையாதனவாக இருக்கும். அவற்றையே பெரிதாக அவர்கள் கருதுவர். செட்டிநாட்டுத் தாலாட்டில் செட்டிநாட்டாரின் பழக்க வழக்கங்கள் இடம் பெறுகின்றன.

1. குழந்தைப் பேற்றை வேண்டித் தானம் செய்தல், கோவில் தல யாத்திரை போதல், நோன்பிருத்தல், தீர்த்தமாடுதல், அரசு, முல்லை, துளசி இவற்றிற்கு நீர் வார்த்தல் போன்ற வழக்கங்கள் இருந்தமை தெரிகிறது.

2. கோவில்களுக்குப் போவதும், திருவிழாக்கள் காண்பதும் பெண்களின் வழக்கங்கள்.

3. குழந்தை பிறந்ததும் இறைவனுக்கு நிவர்த்திக் கடன் செய்வதாக வேண்டிக் கொள்வர். அதன்படி,

*'எடைக்கு எடை பொன் கொடுத்தல்'*
*'தொட்டில் கட்டுதல்'*
*'வாழை இலையில் மாவிளக்கு வைத்தல்'*

என நிவர்த்திக் கடனைச் செய்கின்றனர்.

4. ஆண்கள் விடியற்காலைப் பொழுதில் நல்மலரெடுத்து மாலை தொடுத்து இறைவனுக்கு அணிவித்துப் பூசை செய்யும் வழக்கம் இருந்தது. இதனை எதிர்காலத்தில் தன் மகனும் செய்ய வேண்டும் என்பதை,

*'வடக்கே திருப்பதியாம்*
*வாசமெல்லாம் பூந்தோட்டம்*
*பூவெடுத்தல் பூசை செய்யப்*
*புண்ணியனாய் வந்தவனோ'*[88]

எனப் பாடித் தாலாட்டுகிறார்கள்.

5. தாய்மாமன், தன்மகளைத் தன் தமக்கை மகனுக்கு மணமுடிக்க எண்ணி வருவதனை,

*'ஏலங் கிராம்பும்*
*இளங்கொடிக்கால் வெற்றிலையும்*
*சாதிக் களிப்பாக்கும்*
*சங்குவெள்ளைச் சுண்ணாம்பும்*
*அத்தனையும் கொண்டுன்னை*
*அறிய வந்தார் அம்மான்மார்'*[89]

எனப் பாடுகிறாள் தாய். பார்க்க வருதலை அறிய வருதல் எனப் பகர்வர். திருமணத்திற்கு முன்பு மாப்பிள்ளை அறிய வருதல் செட்டிநாட்டுத் திருமணச் சடங்குகளில் நடைபெறும் ஒரு வழக்கமாக உள்ளது.

6. திருமணத்தின் போது பெண் வீட்டாருக்குப் பெண் வீட்டாரின் ஊர்க்கோவில் மாலையும் மேளமும் வரும் வழக்கம் உள்ளது. அதேபோல் பிள்ளை வீட்டாருக்குப் பிள்ளை வீட்டாரின் ஊர்க்கோவில் மாலையும் மேளமும் வரும் வழக்கம் உள்ளது.

*காரார் குழலாளுக்கு கலியாணம் என்று சொல்லி*
*ஏலங் குழலாளுக்கு என்னென்ன வரும்*
*அம்மன் கோயில் மேளம் வரும்*
*அடுக்கடுக்காய் மாலை வரும்*
*சிவன் கோயில் மேளம் வரும்*
*சிவந்திப்பூ மாலை வரும்*
*மாத்தூரு மேளம் வரும்*
*மல்லிகைப்பூ மாலை வரும்*
*சாத்தய்யா மேளம் வரும்*
*சம்பங்கி மாலை வரும்*[90]

என்ற தாலாட்டுப் பாடலைக் காணும்போது இவ்வழக்கம் தெரிகிறது.

7. சிவாலயத் திருப்பணி, வேத பாடசாலை, தேவாரப் பாடசாலை, குருபூசை மடம், பசு மடம், நந்தவனம், அன்னசத்திரம், கல்விச்சாலை முதலிய புண்ணியத் தலங்கள் ஏற்படுத்திப் பாதுகாத்து வருதலை ஒரு சிறந்த பழக்கமாகவும் குறிக்கோளாகவும் கொண்டார்கள். இம்முன்னோர்

இச்சிறப்பினைத் தாலாட்டில் பல இடங்களில் காண முடிகிறது. எடுத்துக் காட்டாக, பின்வரும் பாடலைக் காணலாம்.

*வித்தசு ஆலை கட்டும்*
*வீமருடை பேரனோ*
*பாடகசாலை கட்டும்*
*பாண்டியனார் பேரனோ*
*குளிக்க குளமும் வெட்டி*
*கும்பிடவும் கோயில் கட்டி*
*அசராமல் அன்னமிடும்*
*அருச்சனவா பேரனோ*[91]

என்னும் பாடலைக் காணும் போது இவ்வுண்மை புலப்படுகிறது.

8. மலர்ந்த முகத்தோடு விருந்தினரை வரவேற்றுப் பேணும் இனிய பண்பு இவர்களிடை முன்பு மிகச் சிறப்பாக இருந்தது; இதனை,

*வாழை இலை பரப்பி*
*வந்தாரைக் கையமர்த்தி*
*வருந்தி விருந்துவைக்கும்*
*மகராசனார் பேரனோ*[92]

என்ற அடிகள் விளக்குகின்றன.

9. குழந்தைக்கு ஆரத்தி எடுக்கும் வழக்கம் இருந்தமையும் பாடல்கள் வழி அறியலாம்.

### 4.7.2.2. நம்பிக்கைகள்

அறிவின் அடிப்படையில் ஆராய்ந்து காரணம் கண்டு கொள்ள முடியாததால் சில மக்களின் நம்பிக்கையை மூட நம்பிக்கை என்ற சொல்லால் குறிக்கின்றனர். இச்சொல் போதிய பொருள் திணிவு இல்லாமலும் தெளிவற்ற முறையிலுமே வழங்கப்பட்டு வருகிறது. ஆதலால் நெகிழ்ச்சியற்ற முறையில் இதனை வரையறுக்க முடியாது. தவறான நம்பிக்கை அடிப்படையற்ற பழக்கம் என்று வேண்டுமானால் ஓரளவு வரையறுத்துக் கொள்ளலாம். கனவு தெய்வத் தொடர்பானவை. குறி (சகுனம்) நிமித்தம் இவற்றைக் கொள்ளலாம்.[94]

### 4.7..2.2.1. பஞ்சாங்கம்

பஞ்சாங்கம் பார்க்கும் வழக்கமும், எழுதும் வழக்கமும் இவர்களிடம் இருந்தன. குழந்தை பிறந்தவுடன் அது நீண்ட நாள் உயிர் வாழ வேண்டும் என்பது தாயின் விருப்பம். அதனைக் காட்டும் வகையில்,

*பஞ்சு மெத்தை மேலிருந்து இராமர்*
*பஞ்சாங்கம் பார்க்கையிலே*
*எழுத்து நூ றென்று சொல்லி*
*எழுதினார் பஞ்சாங்கம்[95]*

என்னும் அடிகள் அமைகின்றன.

### 4.7.2.2.2. கண்ணேறு

பிறந்த குழந்தைக்குக் கண்ணேறு வரக்கூடாது, அவ்வாறு வந்தால்,

*என்னைய்யாவுக்கு கண்ணேறு வராமல்*
*கண்ணேறு வந்தால்*
*வெண்ணீறு இடுங்கள்*
*விளக்கெடுங்கள் திட்டி சுத்த*
*சுண்ணாம்பும் மஞ்சளுமாய்*
*என்னைய்யாவுக்குச் சுற்றுங்கள்[96]*

என்கின்றனர். திருநீறு பூசியவுடனும், விளக்கினால் திட்டி சுத்தியதும், சுண்ணாம்பு இவை இரண்டும் கலந்த நீரைச் சுற்றியதும் குழந்தைக்கு உண்டான கண்ணேறு போய்விடும் என்று நம்புகின்றனர்.

## 4.7.2.2.3 கனவு

சிறு குழந்தைக்குக் கனவு தோன்றினால் பயத்தினால் நோய் உண்டாகும் என்று நம்புகின்றனர். எனவே குழந்தைக்குக் கனவு வரக் கூடாது, அவ்வாறு வராமல் இருக்க இறைவன் துணைபுரிய வேண்டும் என வேண்டிக் கொள்கின்றனர்.

#### 4.7.2.2.4. பாவபுண்ணியச் செயல்கள்

நல்லது செய்தவர்கள் நற்பேறும், தீயது செய்தவர்கள் தீமையும் அடைவர் என்ற நம்பிக்கை இவர்களிடை மிகுதியாக உள்ளமையால் தானதருமங்கள் அகமகிழ்வோடு செய்கின்றனர்.

### 4.7.3. இலக்கியக்கலை

செட்டிநாட்டுப் பெண்களின் உள்ளம் கவர்ந்தவை மகாபாரதம், இராமாயணம், கந்தபுராணம், திருவிளையாடற் புராணம், அல்லியரசாணிமாலை ஆகியன. கதையில் இவர்களுக்கு ஈடுபாடு மிகுதி. அருச்சுனனின் மனைவி பற்றிய அம்மானைக் கதைகளை விருப்போடு கேட்பர். இக்கதைகளை இனிய தாலாட்டுகளில் அமைத்துப் பேச்சறியாப் பாலகர்க்கு ஊட்டுவர். இவ்வாறு அரிய செய்திகளைத் தரும் தாலாட்டுக்கள் இலக்கிய இன்பம் தருவனவாகவும் உள்ளன. வீட்டிலிருந்தபடியே கல்வி கற்ற தம் தந்தையிடம் திருக்குறள், திருவாசகம், சிலப்பதிகாரம் ஆகியவற்றைப் பெண்கள் தெரிந்து கொள்கின்றமையால் இவர்கள் பாடும் தாலாட்டில் இவற்றின் கருத்துக்களும் இடம் பெற்றுள்ளன.

இறுதியாக இவர்கள் சமுதாயத்தில் வலிமை பெற்றிருப்பின் இன்றியமையாத காரணம் இவர்களது சமூகக் கட்டுப்பாடும், செல்வ நிலையும் ஆகும். இயற்கையாகவே அவற்றைப் பாதிக்கக் கூடிய எந்த மாறுதல்களையும் கடைப்பிடிப்பதில் இவர்கள் முன்னெச்சரிக்கையுடன் செயல்படுகின்றன என்றாலும் மாற்றங்கள் ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன.

## அடிக்குறிப்புகள்

1. இரா. தண்டாயுதம், நாவல் வளம் (சென்னை, தமிழ் புத்தகாலயம், 1975) ப. 202.
2. கா. சரோஜினி அம்மாள், 'தாலாட்டுப் பாடலின் தோற்றமும் வளர்ச்சியும், கேரளப் பல்கலைக்கழக ஆய்வு மலர், தொகுதி இரண்டு, (கேரளப் பல்கலைக்கழகம், 1972) ப. 271.
3. சு. சண்முகசுந்தரம், 'அடிக்குறிப்பு', திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு, பி.எச்.டி. ஆய்வுரை, (சென்னை, சென்னைப் பல்கலைக்கழகம், 1977)
4. இணைப்பு - 2, நா. எ. பா. 62.
5. இணைப்பு - 1, க. தி. பா., 14, 17, 27
6. ஆர். பெரியாழ்வார், 'இருளர் கால்வழி உறவுமுறைச் சொற்கள்' ஆராய்ச்சித் தொகுதி - 19. 1970, ப. 173.
7. ஆர். பெரியாழ்வார், 'இருளர் கால்வழி உறவுமுறைச் சொற்கள்', ஆராய்ச்சித் தொகுதி - 19, ப. 174.
8. இணைப்பு - 2, நா. எ. பா. 7.
9. இணைப்பு - 1, க. தி. பா. 30.
10. இணைப்பு - 2, நா. எ. பா. 24, 25.
11. இணைப்பு - 1, க. தி. பா. 33.
12. இணைப்பு - 2, நா. எ. பா. 52.
13. இணைப்பு - 2, நா. எ. பா. 53.
14. இணைப்பு - 1, க. தி. பா. 13.
15. இணைப்பு - 2, நா. எ. பா. 63.
16. இணைப்பு - 1, க. தி. பா. 25.

17. இணைப்பு - 2, நூ. எ. பா. 20.
18. இணைப்பு - 2, நூ. எ. பா. 19.
19. இணைப்பு - 2, நூ. எ. பா. 8.
20. இணைப்பு - 2, நூ. எ. பா. 9.
21. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.
22. புலியூர் கேசிகன், (உ.ஆ.) குறுந்தொகை, இரண்டாம் பதிப்பு, (சென்னை, பாரி நிலையம், 1970) பாடல் எண்.135
23. இணைப்பு - 1, க.தி. பா. 9.
24. இணைப்பு - 2, நூ. எ. பா. 38.
25. இணைப்பு - 1, க.தி. பா. 42.
26. ஆசிரியர் இல்லை, 'சமயம்' கலைக்களஞ்சியம், தொகுதி 4, சென்னை, 1956, ப. 452
27. இரா. சீனிவாசன், சக்தி வழிபாடு, (நாகர்கோவில், ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், 1975) ப. 5-9
28. இணைப்பு - 1, க. தி. பா. 49.
29. இணைப்பு - 2, நூ. எ. பா. 64.
30. இணைப்பு - 1, க. தி. பா. 23.
31. இணைப்பு - 2, நூ. எ. பா. 19.
32. இணைப்பு - 2, நூ. எ. பா. 56.
33. இணைப்பு - 2, நூ. எ. பா. 31.
34. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.
35. திருவள்ளுவர், திருக்குறள், குறட்பா எண். 759.
36. டி. மங்கை, 'தாலாட்டு ஒரு சமுதாய மதிப்பீடு' ஆராய்ச்சி, இதழ் - 4, நவம்பர் 1974, ப. 337.
37. இணைப்பு -2, நூ. எ. பா. 41.
38. இணைப்பு - 1, க. தி. பா. 41.
39. இணைப்பு - 2, நூ. எ. பா. 21.

40. இணைப்பு - 2, நூ. எ. பா. 3.

41. இணைப்பு - 1, க.தி. பா. 52.

42. ஆய்வாளர், நாகம்மை ஆச்சியுடன் செய்த உரையாடலில் பெற்ற கருத்து.

43. சி. பாலசுப்பிரமணியன், 'அடிக்குறிப்பு' தமிழ் இலக்கிய வரலாறு, எட்டாம் பதிப்பு, (சென்னை, பாரி நிலையம், 1969) அடிக்குறிப்பு எண். 3, ப. 18.

44. சி. பாலசுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, அடிக்குறிப்பு எண். 4, ப. 18.

45. இணைப்பு - 1, க. தி. பா. 1.

46. இணைப்பு -1, க. தி. பா. 5.

47. இணைப்பு - 1, க. தி. பா. 4.

48. இணைப்பு - 2, நூ. எ. பா. 4.

49. இணைப்பு - 2, நூ. எ. பா. 59.

50. இணைப்பு - 1, க. தி. பா. 49.

51. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.

52. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.

53. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.

54. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.

55. இணைப்பு - 2, நூ. எ. பா. 62.

56. இணைப்பு - 2, நூ. எ. பா. 65.

57. இணைப்பு - 2, நூ. எ. பா. 13.

58. இணைப்பு - 2, நூ. எ. பா. 1.

59. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.

60. இணைப்பு - 2, நூ. எ. பா. 36.

61. இணைப்பு - 1, க. தி. பா. 15.

62. இணைப்பு - 1, க.தி. பா. 2.

63. இணைப்பு - 1, க.தி.பா. 31.

64. வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் (உ.ஆ) பத்துப்பாட்டு, பெரும்பானாற்றுப்படை, (சென்னை, வை.மு. நரசிம்மன், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் கம்பெனி, 1961) பாடல் அடிகள் 435, 444.

65. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ) புறநானூறு, (சென்னை, கழகம், 1947) பாடல் எண். 178.

66. இராமநாதன் செட்டியார், 'நமது மரபு' நகரத்தார் மாநில மாநாட்டு மலர், (சென்னை, 1965) ப. 143.

67. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.

68. இணைப்பு - 2, நூ. எ. பா. 52.

69. இணைப்பு - 2, நூ. எ. பா. 27.

70. இணைப்பு - 1, க.தி. பா. 36.

71. இணைப்பு - 2, க. தி. பா. 36.

72. இணைப்பு 2, நூ. எ. பா. 23.

73. இணைப்பு - 2, நூ. எ. பா. 13.

74. இணைப்பு - 1, க. தி. பா. 25.

75. இணைப்பு - 1, க.தி . பா. 42.

76. இணைப்பு - 2, நூ. எ. பா. 13.

77. இணைப்பு - 2, நூ. எ. பா. 65.

78. இணைப்பு - 2, நூ. எ. பா. 38.

79. இணைப்பு - 2, நூ. எ. பா. 55.

80. இணைப்பு - 1, க.தி. பா. 6.

81. இணைப்பு - 2, க. தி. பா. 16.

82. இணைப்பு - 2, நூ. எ. பா. 27.

83. இணைப்பு - 2, நூ. எ. பா. 53.

84. இணைப்பு - 2, க. தி. பா. 51.

85. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.

86. இணைப்பு - 2, நூ. எ. பா. 6.

87. சு. சண்முகசுந்தரம், 'அடிக்குறிப்பு', திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு, ப.234.

88. இணைப்பு - 2, நூ. எ. பா. 24.

89. தமிழண்ணல் (தொ. ஆ.) தாலாட்டு ப. 43.

90. இணைப்பு - 1, க.தி. பா. 52.

91. இணைப்பு - 2, நூ. எ. பா. 57.

92. இணைப்பு - 1, க. தி. பா. 14.

93. இணைப்பு - 2, நூ. எ. பா. 15.

94. 'Superstition', Encyclopaedia Britanica, Volume-21, (The University of Chigago, 1768), P.577.

'Like many words having a derogatory sense, "Superstition" is often loosely and vaguely used, and is therefore not easy to dejine'.

95. இணைப்பு - 1, க. தி. பா. 30.

97. இணைப்பு - 1, க. தி. பா. 49.

98. இணைப்பு - 1, க. தி. பா. 49.

# முடிவுரை

நாட்டுப்பாடல்களுள் தாலாட்டுப் பாடல்கள் தலையாய இடத்தைப் பெறுகின்றன. செட்டிநாட்டாரின் வாய்மொழிப் பாடல்களுள் தாலாட்டுப் பாடல்கள் மிகுதியாக உள்ளன. இலக்கிய நயம், சமுதாய அமைப்பு ஆகிய இருநோக்குகளிலும் சிறப்பிடம் பெறுகின்றன.

இப்பாடல்களின் வடிவ அமைப்பை நோக்கும்பொழுது அவற்றில், பின்வரும் செய்திகள் தெளியப்படுகின்றன.

★ சாதிக்கு ஏற்பவும், சுற்றியுள்ள சமூகச் சூழலுக்கு ஏற்பவும் உலகியல் அறிவிற்கு ஏற்பவும் இவர்களது உணர்ச்சி வெளிப்பாடுகள் உள்ளன.

★ கற்பனைகள் உயர்வு நவிற்சி தோன்றும் வகையிலும் செல்வ நிலையைக் காட்டும் வகையிலும் உள்ளன.

★ தாழிசை அமைப்பிலும், கண்ணி அமைப்பிலும், விருத்த அமைப்பிலும் பாடல்கள் உள்ளன. எதுகை, மோனை போன்ற தொடை அமைப்புகள் நன்கு அமைந்து வடிவத்தைக் சிறக்கச் செய்கின்றன.

★ உறக்க உணர்ச்சியை ஊட்டுவதற்கேற்ற வகையில் ஒலிநயம் அமைந்துள்ளது.

★ உவமைகள் மிகுதியாக இடம் பெறவில்லை எனினும் இடம்பெற்ற உவமைகள் இவர்களது அனுபவ அறிவைக் காட்டுகின்றன.

★ உருவகங்கள் மிகுதியாக அமைந்து இலக்கியச் சுவையைக் கூட்டுவிக்கின்றன.

★ சொல்லாட்சிகள் செட்டிநாட்டுப் பெண்களின் கவிதை ஆற்றலை உணர்த்துகின்றன.

★ பாடல்களில் காணப்படும் அடைவளம் இவர்களது கூர்மை நோக்கை உணர்த்துகிறது.

★ வாய்மொழிப் பாடலாக இருப்பினும் கவிதை நடையைச் சிறப்பாகக் கொண்டுள்ளன.

★ சமுதாயக் கருத்தே இப்பாடல்களின் சிறப்புக் கூறாக உள்ளது.

★ புலன் மாற்றம், பொருள் மாற்றம், வினா விடை, அடுக்குரை, திரும்புரை, தற்குறிப்பேற்றம், பாடற் பொருளை மரபுத் தொடராக்குதல் போன்ற உத்தி நலன்கள் இப்பாடல்களுக்குக் கவிதைநயச் சிறப்பை அளிக்கின்றன.

★ இப்பாடல்கள் உணர்த்தும் செட்டிநாட்டு மக்கள் பற்றிய செய்திகளாவன:

★ செட்டிநாட்டுக் குடும்பத்தினர் கூட்டுக் குடும்ப அமைப்பில் வாழ்ந்தனர்.

★ உறவுமுறைகளில் ஐயா, தாய்மாமன் என்ற இரு உறவுகள் சிறப்பாகப் பேசப்படுகின்றன.

★ இவர்கள் சாதிக்குரிய தொழில்களாக வாணிகமும், கணக்கெழுதலும் பேசப்படுகின்றன. கல்வியின் தகுதிக்கு ஏற்பப் பெறும் வேலை பற்றியும் பேசப்பட்டுள்ளது.

★ ஆடவரும் மகளிரும் சமயப் பற்று மிகுதியாகக் கொண்டிருந்தனர். அதனால் மலிந்த கடவுள் நம்பிக்கையும், சடங்குகளும் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளன.

★ இவர்கள் செல்வ நிலையில் சீர்மை பெற்று இருந்தமையால் சமுதாயத்தில் நன்கு மதிக்கப்பட்டனர்.

★ தாலாட்டில் பழகுதமிழாகவும், பொருளாழம் மிக்கு இலக்கிய மணம் கமழ்வனவாகவும் சொற்கள் விளங்குகின்றன. இதனால் இவர்களது தமிழ்ப்புலமையை அறிய முடிகிறது.

★ இவர்களுக்குரிய உணவு வகைகள் நிறைய எனினும் பணியாரம், பாச்சோறு என்பன சிறப்பு உணவுகளாகக் குறிக்கப் பெறுகின்றன.

★ அரண்மனை போன்ற பெரிய வீடுகள் கட்டி வாழ்ந்தமை தெரிகிறது.

★ குழந்தைகளின் விளையாட்டுப் பற்றியும் விளையாட்டுப் பொருள்கள் பற்றியும் பேசப்பட்டுள்ளன.

★ கல்வி நிலையில் இச்சமூகத்தினர் பெற்றிருந்த சிறப்பைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

★ இவர்களுக்குரிய பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் பற்றிய செய்திகளை நன்கு எடுத்துக்காட்டுகின்றன.

★ இலக்கியக்கலை, கட்டடக்கலை, இசைக்கலை முதலான கலைகளில் இவர்கள் கொண்டிருந்த ஈடுபாட்டைச் சிறப்பாக எடுத்துக் கூறுகின்றன.

# இணைப்புகள்

# செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடல்கள்

## ஆய்வின் மூலங்கள்

(அ) களப்பணியில் திரட்டிய பாடல்கள்

(ஆ) நூல்களிலிருந்து எடுத்தாண்ட பாடல்கள்

1. தமிழண்ணல் (தொ.ஆ.),
   தாலாட்டு (குறிப்பிட்ட சில பாடல்கள் மட்டும்)

2. சோமலெ,
   செட்டிநாடும் தமிழும், பக். 200-215

3. ஆறு. அழகப்பன் (தொ. ஆ.)
   தாலாட்டுக்கள் ஐநூறு
   (குறிப்பிட்ட சில பாடல்கள் மட்டும்)

4. சுப. கண்ணம்மை ஆச்சி,
   பள்ளத்தூர் அழகஞ் செட்டியார் தாலாட்டு.

5. திருமதி திருநெல்லை ஆச்சி,
   ''பரம்பரையாய் நகரத்தார் பெண்கள்
   பாடிவரும் தாலாட்டு''
   (நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாற்றில்
   வெளியானது)

# களப்பணியில் திரட்டிய பாடல்கள்

1. தங்கமுத்தாம் தாவடமாம்
தனுஷ்கோடி இராமருக்கு
அங்க வைச்சுப் பூசை செய்யும்
அவர்க்கிளை தம்பியர்க்கும்
முத்துக் குமாரருக்கும்
முடிதரிச்ச ரங்கருக்கும்
தில்லைச் சிதம்பரருக்கும்
சிவகாமி அம்மனுக்கும்
குற்றால நாதருக்கும்
குழலாமணி அம்மனுக்கும்
மதுரைச் சொக்கருக்கும்
வடமதுரை மீனாளுக்கும்
பஞ்சவுக ஐவருக்கும்
படியளந்த மாயவருக்கும்
கொத்தவுக ஐவருக்கும்
கோபால கிருஷ்ணருக்கும்
அல்லியரசாணியர்க்கும்
அழகு துரோபதைக்கும்
நல்லதொரு மின்னொளிக்கும்
நாக மடந்தையர்க்கும்
பொதுவோ விளையாடும்
புள்ளிமான் கண்ணோ நீ
தனதா விளையாடும்
தங்கமான் கண்ணோ நீ.

2\. கொத்தோடே சீயக்காய்
கொடத்துடனே நல்லெண்ணெய்
அள்ளி தலைதேய்த்து - உங்களம்மாள்
ஆற்றுக்கோ போயிறங்கி
வேட்டி துவைத்துடுத்தி - உங்களம்மாள்
வீட்டுக்கோ வந்திறங்கி
காப்பிட்டு கைகழுவி
சாவியும் கைபிடித்து
கோட்டுக்கோ போய் - உங்களம்மாள்
குரிச்சி மேல் உட்கார்ந்து
வல்லவர்க்கும் புத்தி சொல்லும்
நல்லவரோ உங்களம்மான்.

பேர்: அழகம்மை ஆச்சி
ஊர்: ஆத்தங்குடி
நாள்: 13.1.1979.

3\. பொங்கு கடல் பொங்கிவர
பாம்பன் புவிநீர லைமோத
தனிக்கோடி பொங்குதுன்னு
இராமர் அணையிட்டாரோ
எங்கும் கடல் பொங்குதுன்னு
இராமர் இருந்து ஜெயங்கொண்டாரோ
கைகேசி சொல்படிக்கு
இராமர் காடாளப் போறாரோ
தாயாரவள் சொல்படிக்கு
இராமர் வழி நடந்தார்
பர்ணகசாலை கட்டி

பகவானோ பள்ளி வைத்தார்
இச்சையுள்ள இராவணனும்
பிச்சையின்னு கேட்டானாம்
அள்ளியிட்டாள் சானகையும்
பர்ணக சாலையுடன்
பதுவிருந்தும் பெத்துவந்தான்
கையிலிருக்கும் காரணத்தைச்
சொல்லு மின்றான்
சங்குன்னாள் அம்மன்
சமஞ்சுதர் பூந்தேரு
ஓடுன்னாள் அம்மன்
ஓடுச்சாம் பூந்தேரு
கூசாத இராவணனும்
கொண்டுவந்தான் தென்னிலங்கை
எங்கெங்கும்' தேடி
இருண்டவனம் தேடி
சுத்துமெங்கும் தேடி
தோகையரைக் காணோமே
ஆழி கைகொடுத்து
அனுமாரைத் தூ தனுப்பி
திருவாழி கைகொடுத்து
சீதை சிறைமூண்டாரோ
கணையாழி கைகொடுத்து
கண்டு சிறைமூண்டாரோ.

4. பச்சைப் பனை வகுந்து

பாறை வில்லை நாணேத்தி
எய்தாராம் அம்பை
எழனூற்று காதவழி
தொடுத்தாராம் அம்பை
தொன்னூற்று காதவழி
தெறிச்சாராம் வில்லை
ராவணர் சேனைதளம் அத்தனையும்
யாருடா இராவணா
ஆயகுழல் ஊதறது
ஏறுடா இராவணா
இறங்குடா மேடைவிட்டு
பாருடா இராவணா
ராமர் படைபொருதும் பாவினையை.

5. செங்கழனி மாலை
சிவன் தந்த பூமாலை
நற்பகழ மாலையின்னு
ராமர் உன்னைத் தந்தாரோ
செவந்திப்பூ மாலையின்னு
சீதையுன்னைத் தந்தாளோ
மல்லியப்பூ மாலையின்னு
மகாதேவர் தந்த கண்ணோ.

வள்ளியம்மை ஆச்சி
காரைக்குடி
9.1.1979

6. மாறுவெட்டி கூடை பின்னி
சொக்கர் வையைக்கோ மண்சுமந்து

புட்டுக்கு மண் சுமந்து
பிரம்பாலே அடியும் பட்டார்
கஞ்செவக்க மண்சுமந்து
கரைபிறழச் சேராடி
சேராடிச் சொக்கர்
சித்திரத்தேர் ஏறுனதும்
வாதாடி மீனாம்ப
வைரத்தேர் ஏறுவை
சொக்கர் தெருவுலே
சூதாடும் வீதியிலே
மீனா தெருவிலே
முழக்கமுள்ள மண்டபத்தே
அழகர் தெருவிலே
அலங்கார வீதியிலே
சொர்க்கத் தெருவிலே
சொக்கட்டா வீதியிலே
உக்க நெருங்கி
உறவாட வந்தவனோ.

7. யாருடைய தோழனிவன்
அரும்பா கருங்குழலான்
காமனுக்குத் தோழனோ
கணபதிக்கு மைத்துனனோ
மாமன் அரண்மனைக்கு
வாய்த்த மருமகனோ
அம்மான் அரண்மனைக்கு

அமைந்த மருமகனோ
மாமுடியார் எல்லைக்கும்
வந்த மருமகனோ.

8. மலைமேப் பசுமேய
மகுடமணி ஓசையிட
பொழுதிரங்க வாபசுவே
பொன்னுமகன் பால்குடிக்க
செடியிரங்கி வா பசுவே
செல்ல மகன் பால்குடிக்க
இராமர் பசுப்பிடிக்க
இலட்சுமணர் பால் கறக்க
சீதை தயிர் கடைய
செல்ல மகன் கண்ணசர.

உண்ணாமலை ஆச்சி
காரைக்குடி
9.1.1979.

9. வையை பெருகிவர
வாந்த மணல் ஊந்துவர
ஊறிவந்த தண்ணியிலே
ஒட்டிவந்த கட்டிமுத்தோ
பெருகிவந்த தண்ணியிலே
பின்னணைந்த சந்தனமோ
சந்தனமோ என்பொருளோ
சாமி தந்த தவப்பயனோ
கொட்டி வைத்த முத்தோ

குமிச்சு வைச்ச ரத்தினமோ
கட்டிக் கரும்போ
காணிக்கை ஆணிமுத்தோ
முத்தில் ஒரு முத்தோ
முதிர விளைந்த முத்தோ
தேற விளைந்த முத்தோ
தில் லைக்குகந்த முத்தோ
பாண்டிப் பெருமுத்தோ
பாட்டன்மார் ஆண்டமுத்தோ
ஆணிப் பெருமுத்தோ
ஐயாக்கள் ஆண்டமுத்தோ
முத்துமுத்து ஆத்துக்குள்ளே
மூணாத்துப் பாய்ச்சலிலே
முக்குளிச்சு முத்தெடுக்கும்
முத்துமகன் நித்திரையோ
நித்திரையும் போவரானாம்
சித்திரைப்பூத் தொட்டிலிலே
தாமரையும் பூக்குமாம்
தனக்கிசைந்த பொய்கையிலே
தாமரையின் வாழ்மலரோ
தங்கை பெற்ற குஞ்சலரோ.

விசாலாட்சி
காரைக்குடி
10.1.1979.

10. ஏனமுதான் என்னறியான்
இட்டகண்ணும் மைக்கரைய

கரும்புக்கழுதானோ கண்ணிலிட்ட
மைக்கரைய
பாலுக்கழுதானோ பவழக் கனிவாய் நோக
தேனுக்கழுதானோ சிரிச்ச கனிவாய் நோக
அடியார்க்கினியானோ ஆசைபதம்
உள்ளவனோ
சிறியா மனத்தாபம் தீர்க்கவுன்னு வந்தானோ.

11. கையிலாசம் தேடி காராம் பசுவழைச்சு
கொண்டு வந்த பாற்பசுவுக்கு
கொம்பெல்லாம் பொன்னெறமாம்
வாங்கி வந்த பாற்பசுக்கு
மடியெல்லாம் தங்க நெறம்
போட்டுக் கறக்க பொன்னாலே முக்காலி
அனைஞ்சு கறக்க அன்னகவுரும்
பொன்னாலே
தென்கடலி மாணிக்கம் தெரட்டி
அடுப்பேத்தி
வடகடலி மாணிக்கம் வாரி உமிபரப்பி
நாலூறு நற்பகழும் நடுவே தணல் வளர்த்து
நல்லாக் காய்ச்சிய நற்பசும்பாலை
மானத்தைப் பார்த்து வளரும்
பொறைபார்த்து
கோவத்தை ஆத்தி குடியுமின்னா
பாலமிர்தம்.

12. காட்டுப் பறகுருவி
பகலந்தி பட்டா எங்கிருப்பே

பொறுமையுள்ள சுப்பைய்யா
பூஞ்சரத்தின் மேலிருப்பே
பதுமையுள்ள வள்ளியம்மை
பாதம் பணிந்திருப்பேன்
சொக்கலிங்க சாமி
சோடினையின் மேலிருப்பே
மீனாட்சி அம்பாள்
விளக்கடியில் தானிருப்பே
சாலாட்சி அம்பாள்
சரஸ்வதி மேலிருப்பே.

13. தில்லையிலே சோறு வாங்கி
தில்லைச் சிலம்பரரைச் சேர்வை செய்து
எல்லையிலே வந்துதித்த
இலஞ்சியத்தை யாரடித்தார்
காணியிலே வந்துதித்த
கண்மணியை யாரடித்தார்
ஐத்தை அடிச்சாளோ
அரளிப்பூச் செண்டாலே
மாமி அடிச்சாளோ
மல்லியப்பூச் செண்டாலே
யாரடிச்சா ஏனழுதாய்
அடிச்சாரைச் சொல்லியழு
யாரும் அடிக்கவில்லை
ஆண்டுனவா தீண்டவில்லை
தானா அழுதானோ

தன்குணத்து முரண்டாலே
பாலா சிறுகுழந்தை
பசியால் அழுதானோ.

தெய்வானை ஆச்சி
காரைக்குடி
10.1.1979.

14. வாழை இலைபரப்பி
வந்தாரைக் கையமர்த்தி
தென்னை இலைபரப்பி
சென்றார்ரைக் கையமர்த்தி
தெருமறித்து அன்னமிடும்
தெசகரனார் பேரனோ
வழிமறித்து அன்னமிடும்
மகரார்சனார் பேரனோ.

15. பூப்பூத்த கோவிலிலே
பொன்னூஞ்சல் ஆடுதுன்னு
மாத்தொசந்த பூமுடியான்
முத்துமாலைக் கழுதானோ
அழுதா அமுதுண்கான்
அந்தபட்டா கண்தூங்கான்
பொழுதோடு அழுதிடுங்க
புள்ளைபசி ஆறுதக்கி
பகலோடு அழுதிடுங்க
பாலன் பசி ஆறுதக்கி.

16. செங்கழனி பூக்கும்
சிவனிருக்கும் ஆலயத்தில்
எங்களுக்குத் தெங்கழனி
எல்லையிலே பூத்தானோ
தாயார்க்குத் தங்கரளி
தலத்திலேயும் பூத்தானோ
மாதாவுக்கு மல்லியப்பூ
மடிதனிலே பூத்தானோ
பூத்த புளியருகே
பொன்னு பதிச்ச பம்பரம்போல்
ஆக்க விளையாண்டு
வேக்குதுன்னு வந்தானோ.

17. கால் மிஞ்சி மின்ன
கடுக்கஞ் சவடி மின்ன
மார்பதைக்க மின்ன
வருகிறவன் யாருமகன்
இன்னார் மகனோ
இந்திரனார் பேரனோ
மன்னர் மகனோ
மகராசர் பேரனோ.

18. மாசி வடுவோ வைய்யாசி மாம்பழமோ
கோடப் பிலாச்சுளையோ
கொஞ்ச வந்த ரஞ்சிதமோ

பருவப் பிலாச்சுளையோ
பஞ்சவுக பால்குடமோ.

சி.டி. வள்ளியம்மை ஆச்சி
காரைக்குடி
10.1.1979.

19. கரும்பு நட்ட செய்யல்லே
காலாஞ்சுப் பூப்பொறக்கி
சிந்தாமக் கொண்டு வா
சீரங்கர் திருமுடிக்குப் பூச்சாத்த
குலையாமே கொண்டுவா
கோதண்ட சாமி
கூந்தலுக்குப் பூச்சாத்த.

20. தெக்கே மழைபொழிய மீனாட்சியம்மை
செங்கைக்கே தீத்தம் வர
சேங்கை மணல் ஒதுக்கி
தென்னை பின்னை வைப்போமோ
தென்னை குலைநெருங்கி
செண்பகப்பூத் தாழ்மலர்ந்து
தென்னை வந்து வீசாதோ
செல்ல மகன் நித்திரைக்கு
வடக்கே மழைபொழிய மீனாட்சியம்மை
வையைக்கோ தீத்தம் வர
வையை மணல் ஒதுக்கி
வாழை வைப்போம் தென்னை வைப்போம்
வாழை குலைநெருங்கி

வாழை வந்து வீசாதோ - எங்க
வாழுமகன் நித்திரைக்கு.

21. மின்பூக்க லாவெரிக்க
மின்ன குளம் பெருக
மின்னலுக்கும் காதவழி
கண்ணாவளும் விளையாடி வந்தாளோ
சங்கு முழங்க சமுத்திரத்து மீன்முழங்க
எங்கு முழங்கவுன்னு ரங்கர் உன்னைத்
தந்தாரோ
அச்சடிக்கப் பொன்விளைய
வச்சிருக்கத் தந்தமக
வாழுவா நூ றுகோடி.

22. ராராட்ட தூ ணசைய
ராமர் கை அம்பசைய
வில்லை விசையேற்றி
விட்டெறிந்தர்ர் காதவழி
ஓடி எடுப்பாளோ
ஒருகால் சிலம்புதிர
திரும்பி எடுப்பாளோ
திருக்கால் சிலம்புதிர.

23. ஆளப் பொறந்தானுக்கு யாரு துணையிருப்பா
சாமந் து ணையிருக்கும் சந்திரரும் சூரியரும்
கூடத் து ணையிருப்பாள் கொத்தவனாள்
ஈசுவரியும்

ஒக்கத் துணையிருப்பாள் உமையவளும்
பார்வதியும்.

மு. சிகப்பி ஆச்சி
பள்ளத்தூர்
11.1.1979.

24. ஆறிரண்டு காவேரி
அதன் நடுவே சீரங்கம்
சீரங்கம் நேர் கிழக்கே
திருவானைக்காவலிலே
ஐம்புலிங்க நாதரும்
ஊற்றிலே வீற்றிருக்கார்
உதிர்ந்த பழம் திங்கவுன்னு
அகிலாண்ட ஈசுவரியும்
ஓடிப்போய் வீற்றிருக்காள்
கனிந்த பழம் திங்கவுன்னு
காற்றிலே வீற்றிருக்காள்.

25. வெள்ளிக் கடலாசி
வெங்கல மைக்கூடு
பேனா புடித்தெழுதும்
பெரிய குலவம்சமோ
எங்கள் குலம் மங்காமல்
இருக்க வேணுமின்னு
தங்கமணி பொங்க
தானாள வந்த கண்ணோ.

ஏ. உமையாள்
கோணாபட்டு
12.1.1979.

26. அவரை சலசலங்க
அம்புமணி காய்காய்க்க
கொடியவரை பிஞ்சுவிட
குடிதழைக்க வந்த மகன்
பச்சை இலுப்பை வெட்டி
பால் வடியத் தொட்டிகட்டி
அந்த நல்ல தொட்டியிலே
ஆளவந்த பாலகனோ!

27. ராராட்ட தூ ணசைய
ராமர் கை யம்பசைய
வெள்ளி ரதமசைய
வீமர் கை அம்பசைய
நாடசைய வார்த்தை சொல்லும்
ராஜாக்கள் உங்களய்யா
காடசைய வார்த்தை சொல்லும்
கருணவார் உங்களய்யா
வீடசைய வார்த்தை சொல்லும்
வீமவார் உங்களய்யா.

28. அழுதால் அரும்புதிரும்
அண்ணாந்தால் பொன்சிதறும்
சிரித்தால் முத்துதிரும்
செல்லமகன் வாய் திறந்தால்
தேன் சிதறும்

தேனோ திரவியமோ
தெவிட்டாத் மாங்கனியோ.

மா. நாகம்மை ஆச்சி
கோணாபட்டு
12.1.1979.

29. பொங்குகடல் பொங்கி வர
பாம்பன் புவிநீரலை மோத
எங்கும் கடல் பொங்குதுன்னு
இராமர் இருந்து ஜெயங்கொண்டாரோ
தனுஷ்கோடி பொங்குதுன்னு
இராமர் தானயங்கள் செய்தாரோ
தங்க முத்தாம் தாவடமாம்
தனுஷ்கோடி இராமருக்கு
லிங்கம் வச்சுப் பூசைசெய்யும்
ஆதி சிவனாரின்
ஜோதி சிவகாமி சுந்தரியாள்
தந்த கண்ணே.

30. ராரிக்கோ ராரிமுத்தோ
ராமருக்குப் பஞ்சு மெத்தை
பஞ்சுமெத்தை மேலிருந்து - ராமர்
பஞ்சாங்கம் பார்க்கையிலே
வயசு நூ றென்று சொல்லி
வாசிச்சார் பஞ்சாங்கம்
எழுத்து நூ றென்று சொல்லி
எழுதினார் பஞ்சாங்கம்.

31. கார்சியிலே பட்டெடுத்து
கப்பலிலே தொட்டி கட்டி
தொட்டி வரிந்து கட்டி
துரைமக ளைப் போட்டாட்டி
தொட்டிலுக்குங் கீழே
துணையிருப்பாள் மீனாட்சி
கட்டிலுக்குள் கீழே
காத்திருப்பார் சொக்கலிங்கம்.

32. ஆறிரண்டு காவேரி
அதன் நடுவே சீரங்கம்
சீரங்கம் ஆடி - என் கண்ணே
திருப்பாற் கடலாடி
தைப்பூசம் ஆடி - என் கண்ணே
மாசிக் கடலாடி
தைப்பூசம் ஆடி - என் கண்ணோ
தவம் செய்து வந்தவனோ
பட்டினி இருந்து
பலநாள் தவம் இருந்து
பகவானைச் சேவித்து நிற்கையிலே
பரிசாய் வந்தவனோ
மலைமேல் தவமிருந்த - எனக்கு
மயிலேறி வந்தவனோ.

33. நாழிச் சிறுசலங்கை
நன்னாழிப் பொன்சலங்கை

யாருக்கிடுவம் முன்னு
தேடித் திரியயிலே
எனக்கு இடுங்களுன்னு
எதிராக வந்தானோ
தனக்கு இடுங்களுன்னு
தவம் பெற்று வந்தானோ
ஓடி வந்த மைந்தனுக்கு
ஒருகாலில் பொன்சலங்கை
தேடிவந்த தந்தைக்கு
திருக்காலில் பொன்சலங்கை
ஈன்றெடுத்த தாயார்க்கு
இருகாலில் பொன் சலங்கை.

34. கரடி கவிபாட
கண்டைமணி தெண்டனிட
புலவர் கவிபாட
பொய்யுறக்கம் கொண்டாயோ
செங்கழனி மாலை
சிவன் தந்த பூமாலை
நைப்பகழ மாலை
இராமர் உன்னைத் தந்தாரோ
ஆதி செகமாலை
அம்மன் தந்த பூமாலை
தந்தார் வடமலையான்
தந்தாரு வேலவரு
புள்ளை தந்தாள் வள்ளியம்மை
பேரு சொல்லி ராராட்ட

மைந்தன் தந்தார் சொக்கலிங்கம்
வளமை சொல்லி ராராட்ட.

35\. காசி விசிறி கொண்டு
கையிலிரு செம்புகொண்டு
காசிக்கே போறாக
கைக்குழந்தை வேணுமின்னு
செஞ்சி விசிறி கொண்டு
சிறுசொம்பு தான் கொண்டு
செஞ்சிக்கே போறாக
தெய்வபுத்திரன் வேணுமின்னு.

36\. வெள்ளிமணிச் சட்டி
விலைமதியா வீரத்தண்டை
தங்கமணி அத்தனையும்
தான் அணிய வந்தாளோ
பொன்னுமணி அத்தனையும்
பூட்டவென்று வந்தவளோ.

37\. ஆத்துக்குள்ளே அம்பூனி
அந்தரங்கமாய்த் தொட்டிகட்டி
காத்து வந்து வீசவே
கருணை மவ கண்ணசர.

38\. பொழுதைப் பிடிப்போமா - என்கண்ணே
[illegible]ரானை எய்வோமா?

ராவைப் பிடிப்போமா - என் கண்ணே
ராவுணரை எய்வோமா?
கண்ணா வா கண்ணுறங்க
கானமயில் உறங்க
என்னவா கண்ணுறங்க
என்ன தவம் நாம்செய்வோம்?

ஆர்.எம். மீனாட்சி இராமநாதன்
காரைக்குடி
11.1.1979.

39. சித்திரைக்குச் சித்திரையாம்
சித்திரா பௌர்ணையாம்
சித்திரை மாதத்திலே
தென்மதுரை நாட்டியமாம்
மதுரை அதிசயமாம்
வாழ்மதுரை ஓவியமாம்
வெற்றிவேல் சப்பரமாம் - மீனாவரும்
வீதியெல்லாம் பூக்கடையாம்
பவளத்தால் சப்பரமாம் - மீனாவரும்
பாதையெல்லாம் பூக்கடையாம்
தங்க குதிரைகளாம்
சுவாமி வரும் வீதிகளெல்லாம்
வெள்ளிக் குதிரைகளாம்
விலாசமுள்ள வீதிகளெல்லாம்.

40. அவரமணி துவரமணி அரண்மனைக்கே
ஒத்தமணி

துவரமணி பெற்றெடுத்த துரைமகனே
நித்திரை செய்
மானத்து மீனோ மேகத்துப் பன்னீரோ
தாகத்தைத் தீக்க வந்த தங்கரதக் கிளியோ.

41. கோர்க்காத முத்தோ
கோதை கையில் குஞ்சரமோ
பாண்டிப்பரி முத்தோ
பாட்டன்மார் ஆண்ட முத்தோ
பதக்கத்தின் கல்லொளியோ
ஆரஞ்சு முத்தோ
ஆயிரத்தில் நல்லொளியோ
முத்திரையில் முத்தோ
முதிர விளைந்த முத்தோ.

42. துரைமுகத்து வியாபாரி
துரைமார்கள் உங்களய்யா
திரவியங்கள் எண்கோடி
தேடிவைப்பார் உங்களய்யா
வெள்ளி குத்தோலை
வெங்கல மைக்கூடு
விரசாய்க் கணக்கெழுதும்
வீமரோ உங்களய்யா.

நாச்சம்மை ஆச்சி
கீழச்சீவல்பட்டி
17.1.1979.

43. செம்பனுக்கோ வன்பெழுதி
செல்லாத நாள் எழுதி
வன்பெழுதி வாசிக்கும்
மன்னன் மருமகனோ
செம்பொன் வெட்டித்
தூண் நிறுத்தி
சீனி கொண்டு
கால் நாட்டி
கம்பன் மகன் சேனையர்க்கு
கைக்குதவி வந்தாயோ.

44. ஆராரோ ஆரிரரோ
அடிச்சாரைச் சொல்லியழு
ஆக்கினைகள் செய்திடுவேன்
தொட்டாரைச் சொல்லியழு
தோள்விலங்கு பூட்டிடுவோம்
யாரடித்த கண்ணீர்
ஆறாய் பெருகுகிறது.

45. வள்ளியின்னா வள்ளி
மான் வயிற்றில் பிறந்த வள்ளி
கொடிமேல் பிறந்த வள்ளி
கூவி யழுகையிலே
செடிமேல் பிறந்த வள்ளி
சீறி அழுகையிலே
வனத்தீர் குறவர்களும்
மான் பிடிக்கும் வேடுவரும்

அரச மக்கள் ஐவேரும்
அம்பு விளையாடயிலே
குழந்தை குரல் கேக்குதுன்னு
குறவேடர் ஓடிவந்து
மதலைகுரல் கேக்குதுன்னு
மான்வேடர் ஓடிவந்து
தூ க்கி எடுக்கி சொர்ணமடியில் வைத்து.
வாரி எடுக்கி வண்ண மடியில் வைத்து
வண்ண முகம் மண் துடைத்து
வள்ளியின்னு பேருமிட்டு - வடிவேல்
துணையுமின்னு
வளர்த்தார் வனந்தனிலே.

---

★ வள்ளியின்னு பேருமிட்டு
வள்ளி அருங்கியைத் தானெடுக்கி
அரண்மனை போய்ச்.சேர்ந்தாராம்
வள்ளி பசுங்கிளியைத் தானெடுக்கி
பட்டணம் போய்ச் சேர்ந்தாராம்
வள்ளி கொம்பனையைத் தானெடுக்கி
கோட்டை போய்ச் சேர்ந்தாராம்
கோட்டை போய்ச் சேர்ந்தவுடன்
வள்ளி கூலி கிளி விரட்டி.

- இப்படியும் பாடம்.

உழக்குத் தினை விதைத்து - வள்ளி
உத்தமியைக் காவல் வைக்க - வள்ளி
ஓடி கிளி விரட்டி
பதக்குத் தினை விதைத்து - வள்ளி
பத்தினியைக் காவல் வைக்க - வள்ளி
பறந்து கிளி விரட்டி
நாழித் தினை விதைத்து - வள்ளி
நாயகியைக் காவல் வைக்க - வள்ளி
நடந்து கிளி விரட்டி
குறுணித் தினை விதைத்து - வள்ளி
கொம்பனையைக் காவல் வைக்க - வள்ளி
கூவி கிளி விரட்டி
ஆலோலம் என்று சொல்லி - வள்ளி
அழகாய் கிளி விரட்டி - வள்ளி
இருந்தாள் பரண்மீது
கேசரிய நாரதரும் - வள்ளி
கிட்ட வந்து குத்த வச்சார்
பேர் பெரிய நாரதரும் - வள்ளி
பெண் மயிலே என்று சொன்னார்
திட்டென்று கீழ்குதிச்சு
தெண்டனிட்டாள் நாரதரை

வாருமையா நாரதரே
வந்ததென்ன சேதி என்றாள்
எங்கிருந்து வந்தீர்
எனக்கறிய கூறுமின்றாள்

பூலோகம் சென்று - வள்ளி
பூத்த மலரெடுத்துத்
தனிலோகம் சென்று - வள்ளி
தனித்த மலரெடுத்துக்
கந்தனுக்கு வள்ளியை - நான்
கலியாணம் செய்ய வந்தேன்
வேலவர்க்கு வள்ளியை
விவாகம் முடிக்க வந்தேன்
என்று சொல்லக் கேட்டு
எடுத்துரைத்தாள் வள்ளியவள்
இல்லாத வார்த்தைகளை
எடுத்துரைத்தீர் நாரதரே!
அண்ணன்மார் ஏழ்பேரும்
பொல்லாத கோபமுள்ளார்
கண்தப்பி போவதென்றால்
காற்றாய்ப் பறந்துவிடும்
உயிர்தப்பிப் போவதென்றால்
ஓடிவிடும் நாரதரே!
என்று சொல்லக் கேட்டு
எடுத்துரைப்பார் நாரதரும்;
''கந்தனுக்கு வள்ளியை - நான்
கலியாணம் செய்யாவிட்டால்
வேலனுக்கு வள்ளி உன்னை- நான்
விவாகம் முடிக்காவிட்டால்
தென்பழனி வேலவர்க்கு வள்ளி
உன்னை திருமணம் செய்யாவிட்டால்

இன்று முதல் வீணை தொடுவதில்லை
விபூதி தரிப்பதில்லை என்று சொல்லி
பேர் பெரிய நாரதரும் போட்டாராம் பெரும்
சபதம்.

நல்ல சபதமிட்டார்
நல்லதம்மா பெண்மயிலே
நான் வாரேன் என்று சொல்லி
வேலவர்க்கு முன்பாக
வெகுவிரைவாய் வந்து நின்றார்
வாருமையா நாரதரே
வந்ததென்ன சேதி என்றார்
எங்கிருந்து எங்கு வந்தீர்
எனக்கறிய கூறுமென்றார்.

வெள்ளிமலை தெற்கே
வேடர் தினைப்புனத்தில்
வள்ளி என்றால் வள்ளி
கொடிமேல் படரும் வள்ளி
சுப்பையா உந்தனுக்குத்
தோதான வள்ளி
சண்முகா உந்தனுக்குச்
சரியான வள்ளியவள்
வீணை கொண்ட நாரதரும்
வேலவர்க்குச் சொல்லி விட்டார்

தினைப்புனமும் காத்து - வள்ளி
திகைத்து நிற்கும் வேளையிலே
வனத்திருக்கும் வேடரைப் போல் - சுப்பையா
வந்தாராம் மாலையிட
தேனும் தினைமாவும்
தெவிட்டாத வேலவரும்
பாலும் தினைமாவும்
பசியாற வந்தாராம் வள்ளியிடம்
புள்ளிமான் புகுந்ததென்று - சுப்பையா
புகுந்தார் தனைப்புனத்தே
வள்ளிமான் வந்ததென்று - சுப்பையா
வந்தார் வனந்தனிலே

வெள்ளிமலை தெற்கே
விரலிமலை தென்மேற்கே
கல்லுமலைக் குள்ளிருந்து
கதிர்வேலர் ஓடிவந்து
வள்ளிதனை மா லையிட
வந்தார் வனத்தருகே.

வண்டாடப் பூமலர - வள்ளி
வள்ளி வனங்காக்க கண்டாரோ
வள்ளி அழகுக்கும் - வள்ளி
வலதுகைத் தேமலுக்கும்
கன்னத்து மஞ்சளுக்கும் - சுப்பையா
கண்டாசை கொண்டாரோ?
உட்கழுத்து மஞ்சளுக்கு - சுவாமி

உள்ளாசைப் பட்டாரோ
கூந்தல் அழகுக்கு - சுப்பையா
குறவேடம் கொண்டாரோ
ஓடினாள் வள்ளி
ஒளிந்தாள் வனந்தேடி
தேடினார் வேல்முருகர் - வள்ளி
திருவடியைக் காணாமல்
வருந்தினார் முருகர் - வள்ளி
வடிவழகைக் காணாமல்
நல்ல கிழவனைப்போல் - சுப்பையா
நடித்தாராம் தினைப்புனத்தில்
மெத்தப் பசிக்குதென்று - சுப்பையா
வித்தை மெத்த செய்தாராம்
தேனும் தினைமாவும் - வள்ளி
சேர்த்துக் கொடுத்தாளாம்
தாகமெடுக்குதுன்னு - சுப்பையா
சாலங்கள் செய்தாராம்!

காட்டிலே வாழுகின்ற
கன்னி வள்ளி நாயகிக்கு
எதைக் கண்டால் பயமென்றார்?
ஏந்திழையாள் வள்ளியர்க்குக்
கரடிபுலி சிங்கமென்றால்
கடுகளவும் பயமறியாமல்
ஆனையென்று சொன்னாக்கால்
அதிக பயமுண்டு!

கொடிபடர்ந்த வள்ளியர்க்குக்
கொண்டு வந்தார் வெள்ளானை
காட்டானைக் காட்டிச் - சுப்பையா
கலியாணம் செய்து கொண்டார்
அண்ணாவைத் தானினைந்து
ஆரணங்கை மாலை கொண்டார்!
கொண்டார் மனைவியாய்க்
கூட்டி வந்தார் தன்னருகே!
கிள்ளு வளையலிட்டுச் - சுப்பையா
கிளிமொழியை மாலையிட்டார்!
அடுக்கு வளையலிட்டுச் - சுப்பையா
ஆரணங்கை மாலையிட்டார்
பச்சை வளையலிட்டுச் - சுப்பையா
பசுங்கிளியை மாலையிட்டார்.

மீனாட்சி
ஆத்தங்குடி
13.1.1979.

46. பழனிமலை ஆண்டவர்க்கு
அரிசித்தினை விளையும் ஐயாக்கள் செய்களிலே
அண்ணாமலையார்க்கு
ஆனைகட்டிப் போரடிக்கும்
அய்யாக்கள் சேனைதளம்
சொம்புத் தினைவிளையும்
குறவருட நன்னாடு
ஐயா, குதிரை கட்டிப் போரடிக்கும்
கொற்றவர்கள் சேனைதளம்.

47. நாலாறு புன்னைமரம்
அதிலே அண்டகாக்கும்
ஐந்துத லைப் பூநாகம்
சீறிச்சாம் பூநாகம்
சிவந்துதாம் கண்களிரண்டும்
ஆறிச்சாம் கோபம்
ஐயா மடிதனிலே.

48. செம்பொன் நல்ல நேரேறி
சேரநல்ல பொன் கொண்டு
மாலை நல்ல நேரத்தில்
வருவார் மருமகனோ.

ஆர்.எம். மங்கலம் ஆச்சி
கானாடு காத்தான்
19.1.1979

49. ராராட்டத் தூணசைய
ராமர் கை அம்பசைய
அம்பு முழுதசைய ஆளப் பொறந்தாயோ?
வில்லு முருகசைய விளங்கப் பொறந்தாயோ?
காடுவெட்டி நாடாக்கி
கள்ளரெல்லாம் உள்ளமர்த்தி
நாடுபெற்று வருவார்கள்
ராஜாவோ உங்களய்யா?
வெற்றி பெற்று வருவார்கள்
வீமரோ உங்களய்யா

*சங்கரா உன் காவல்*
*சாத்தய்யா உன் அடிமை*
*வீரப்பா உன் காவல்*
*வேறு வினை வாராமல்*
*சொக்கலிங்கம் உன் காவல்*
*சொப்பனங்கள் தட்டாமல்*
*கறுப்பையா உன் காவல்*
*என்னய்யாவுக்கு கண்ணேறு வாராமல்*
*கண்டுணறு வந்தால்?*
*வெண்ணீறு இடுங்கள்*
*விளக்கெடுங்கள் திட்டிசுத்த*
*சுண்ணாம்பும் மஞ்சளுமாய்*
*என் ஐயாவுக்குச் சுற்றுங்கள்.*

கண்ணாத்தா ஆச்சி
நாட்டரசன் கோட்டை

***50.*** *மாமர் மருமகனோ? மைத்துனிமார் கைச்சிலம்போ?*

*தாமரைப் பூச்சாயலுள்ளாள்*
*வாயார வாழ்த்தி*
*வளர்ப்போமென்றார் ஊஞ்சலிலே*
*ஆணிப் பொன் வெட்டி.*
*அழகுமலை ஊஞ்சலிட்டு*
*மாணிக்கத் தொட்டிலில்*
*நீ வளர்ந்த மதகளிறோ*
*வங்காளம் கங்கையிலே*

மகரமீன் துள்ளுதுன்னு
சிங்கார அம்பெடுத்து
தெறிப்பார்கள் உங்களம்மான்.

51. அழுதா அமுதுண்கான்
அந்திபட்டா கண் தூங்கான்
பொழுதோடு அமுது இடுங்கள்
புண்ணியவார் பேரனுக்கு
பகலோடு அமுதிடுங்கள்
பாண்டியவார் பேரனுக்கு
மசன்டையே அமுதிடுங்கள்
மகராசா பேரனுக்கு.

வசந்தாள்
நாட்டரசன் கோட்டை
15.1.1979.

52. குளிக்க குளங்கள் கட்டி கும்பிடவும் கோயில் கட்டி
மதிக்க மடங்கள் கட்டிவைக்கும் மகராசா பேரனோ?
வங்காளச்சிட்டு வயலிறங்கி மேயுதின்னு
சிங்கார அம்பெடுத்து தெறிப்பார்கள் அம்மான்கள்
காரார் குழலாளுக்குக் கலியாணம் என்று சொல்லி
ஏலங் குழலாளுக்கு என்னென்ன மேளம் வரும்?
அம்மன் கோயில் மேளம் வரும்

அடுக்கடுக்காய் மாலை வரும்
சிவன் கோயில் மேளம் வரும்
சிவந்திப் பூ மாலை வரும்
மாத்தூரு மேளம் வரும்
மல்லிகைப் பூ மாலை வரும்
சாத்தய்யா மேளம் வரும்
சம்பங்கி மாலை வரும்.

வள்ளிக்கண்ணு
நாட்டரசன் கோட்டை
15.1.1979.

# நூல்களிலிருந்து எடுத்தாண்ட பாடல்கள்

*1*

சீராருந் தெய்வத் திருவருளா லேகிடைத்த
தாராருஞ் செல்வத் தனவணிகர் தவக்கொழுந்தோ 1

வாடா துலகதனை வாழ்விக்கு மாசக்தி
கோடா வினத்தெழுந்த குன்றாக் குடிக்குருந்தோ 2

ஆராரோ வென்றே அழுதபிள்ளை கண்ணுறங்க
ஓராட்டும் ஞான உயர்நாட்டு பைம்முளையோ 3

தாருலாம் தனவணிகர் தம்நாட்டில் வாழுகின்ற
பேரெலாம் வாழ்த்தெடுக்கும் பேரதனைப்
பெற்றவனோ 4

ஈரே ழுலகனிக்கும் இறையா யரசியற்றும்
பேரார் திருச்செந்திற் பெம்மான் அருள்நிதியோ 5

கண்ணே யுறங்குறங்கு, கற்பகமே நீயுறங்கு
எண்ணாரு மெங்கள் இலஞ்சியமே கண்ணுறங்கு 6

காகம் நிறங்காட்டிக் கரைந்து பயங்காட்டத்
தேகம் நடுங்கியதோ சீறியழா தேமகனே 7

சேவற் பெருங்கோழி சிறகடித்து கூரைமேல்
கூவிச் சினத்தோடே கொக்கரித்து நின்றதுவோ 8

கட்டுப் பனையிருந்த கள்ளருந்தி கண் சிவந்த
சிட்டுக் குருவியுன் னைச் சீறியதோ என்மகவே 9

ஆச்சி மடியிருக்க அருக ணைந்த வண்ணாத்திப்
பூச்சியும் உன்முகத்தைப் போதாய் நினைந்ததுவோ 10

தேனே தெவிட்டாத தெள்ளமுதே தீங்கனியே
ஏனோநீ அழுகின்றாய் என்னருமைக் கண்மணியே 11

கருடன்செய் கீர்த்தனந்தான் காதிற் கனிந்தொழுக
ஒருபயமு மில் லையினி யுவந்துநீ கண்ணுறங்கு 12

தேனுண்டு வண்டு செந்தாமரை சுழன்று
கானஞ்செய் இன்னிசையில் காதலனே கண்ணுறங்கு 13

வண்டாடும் பூங்குழலாள் மாதரசி யுன்னன்னை
கொண்டாடத் தான்பயந்த குணஞ்சிறந்த குஞ்சரமோ 14

பச்சைப் பசுங்கிளியோ பண்ணார்ந்த பூங்குழலாள்
உச்சி கொளும்வயிர ஒளிசேரும் மாமணியோ 15

கண்ணியநற் சீமாட்டி கையேந்தி முத்தமிடப்
புண்ணியமே யோருருவாய் போந்து பிறந்தவனோ 16

தாமமணி மார்பனோ தம்பிதுணை யுள்ளவனோ
மாவணிகர்க் கெல்லாம் மனக்கவலை தீர்த்தவனோ 17

மனத்தாற் பெரியளென வழங்குற்ற மாதரசி
வனப்பாய் மடியிருத்தி மகிழ்ச்சிகொள வந்தவனோ 18

அடல்பெரிய வீரியனோ அன்புகுடி கொண்டவனோ
கடல்கலங்க முன்னாள் கணைதொடுத்த சேவகனோ 19

உரங்கொண் டெளியவர்க்கோ யுயிர்வாழ முன்றந்தை
கரங்கொண்டு மனநுகரும் கவின்செய் மலர்ச்செண்டோ 20

ஆக்கஞ் சிறந்தோங்கும் அன்புயர்ந்த உன்றந்தை
கூக்கம் பிறழாமல் ஊன்றுகோ லாயவனோ 21

அறங்காட்டு நேர்விட் டகலாத உன்றந்தை
திறங்காட்டு நற்பயனாய்ச் சிறந்துற்ற பாலகனோ 22

தன்னாற்றல் மிக்குடைய தந்தை யுனையுதவ
என்னோற்றா ளென்றுசொல்லும் இன்னிசை
யளிப்பவனோ 23

தண்டை சதங்கையொடு தருகின் கிணிகிலுங்க
அண்டை யிருந்துவிளை யாடும் அவிர்மதியோ 24

செந்தாழம் பூவும் சிறுமுல்லை ரோஜாவும்
பைந்தாளுன் வாயமுதப் பான்மனத்துக் கொப்பாமோ 25

சிற்றில் சிதைத்துச் சிறுதேர் செலுத்திடுநாள்
சுற்றிவருந் தோழவர்களுந் தொட்டி லைவிட் டிறங்குவரே 26

உன்னைச் சினந்தாரை யொறுத்திடுவா ருங்களம்மான்
பின்னை எதற்கோ பிணங்கி யழுவதம்மா 27

மட்டில் மகிழ்ச்சியுடன் மனமார யத்தைம்மாள்
கட்டி யணைத்துனக்கு கனமுத்தந் தந்தாளோ 28

மார்பிற் பதக்கமொடு மணிமோ திரமாதி
சார்பிள்ளைப் பணியாவும் தந்தென்னை மகிழ்ந்தனளோ 29

நெற்றியசை சுட்டி நிலாவொளியை வீசிடுமேல்
சுற்றியுள்ள முத்தமெலாம் சுடர்மணியாய்த் தோன்றாதோ 30

மெய்ய ளைந்த இன்பமுடன் மேவுமெனி லீன்றோர்க்குன்
கைய ளைந்த கூழும் கருதமிர்த மாகாதோ 31

விற்பூட்டும் யாழிசையில் மேலதாம் தம்மக்கள்
சொற்கேட்ட லின்பமென மறைமொழியும் பொய்யாமோ 32

ஒன்பது கோடி உயர்முத்தம் உன்னுடைய
அன்பது தோய்ந்தவொரு அருமுத்தம் விலைபெறுமோ 33

பெற்ற மகப்பேற்றால் பிறவித் தளையவிழ்க்க
கற்றறிந்தோ ரெல்லாம் கருதாராம் நன்மகனே 34

தேனோ வமுதமோ தித்திக்கும் செங்கரும்போ
கோனோ வெனவிளங்கு குலமணியோ தாலேலோ 35

பொன்னே மணியே புகழுமது ரக்கனியே
தன்னேரி லாதவெங்கள் தவக்கொழுந்தே தாலேலோ 36

கோடைக் குளிர்தருவே கோதிலா நீரூற்றே
மேடையிளந் தென்றல்தரு மென்சுகமே தாலேலோ 37

உற்றாரும் பெற்றாரு மூராரும் வாழ்த்திமனங்
கற்றாவிற் காதலிக்கும் கண்மணியே தாலேலோ 38

கன்னலோ தேனோ கனிரசமோ கற்கண்டோ
இன்னமுத வெங்களரு நிதியோ தாலேலோ 39

மின்னொளியோ கண்ணொளியோ விளங்கு மணியொளியோ
பொன்னொளியோ யாங்கள் செய்த புண்ணியமோ 40

கிளர்கிளி களார்ப்பக் கிழமைநான் சோதிசெய
பண்ணின் மழ லைபயில் பண்ணவனே தாலேலோ 41

நல்லறத்தின் வித்தே நாடுஞ்சுகக் கொழுந்தே
இல்லறத்திற் கின்பருளு மெங்கோவே தாலேலோ 42

கண்டவர்கள் கொண்டாட காணார்கள் வேட்கைகொள
மண்டலத்தில் வந்தருளும் மாமணியே தாலேலோ 43

பெற்றவர்கள் தந்தவமே பேறார் குலமணியே
நற்றவர்கள் வாழவரு நல்லமுதே தாலேலோ 44

தித்திக்கும் செங்கரும்பே தெவிட்டாத தெள்ளமுதே
எத்திக்கும் வாழவரும் எங்கோவே தாலேலோ 45

மையிட்டு நீறுமிட்டு மாமணிப்பூத் தொட்டிலிட்டு
கைதொட் டிசைபுகல்வோம் கண்மணியே கண்வளராய் 46

மெய்வாய் கண்மூக்கு விரும்பு செவிப்புலன்கள்
உய்வாய்க் களிக்கவரும் ஒள்ளொளியே கண்வளராய் 47

முத்தே பவளமே முழுமணியே கட்டிலின்கண்
வைத்தே யிசைபகர்வோம் வள்ளலே கண்வளராய் 48

ற்றாத நீர்நிலையே வாடாத நன்மலரே
பெற்றோர்கள் போற்றவரு பெம்மானே கண்வளராய் 49

பண்வளர பாட்டிசைப்போம் பரமனருனார் கட்டிலின்கண்
கண்வளர்ந்து கண்விழிக்க கண்மணியே கண்வளராய் 50

காந்திமுனி போற்றும் கலைக்கடலின் எல்லைபெற
நீந்திவிளை யாடவந்த நேரியனே கண்வளராய் 51

வேலன் துணையுண்டு வேல்போல விழியுடைய
கோரக்குஞ் சரமகளுங் குறமகளுங் காப்புனக்கே 52

நீடாயு ளூற்று நிறைசெல்வ நன்குபெற்று
வாடாத கற்பகம்போல் வாழிநீ தாலேலோ. 53

2. ஐந்து கிளியெழுதி அம்மானை இரண்டெழுதி
கொஞ்சு கிளிக்கு ஐந்து பணம் கொடுப்பார்கள்
ஐயாக்கள்
ஆறாறும் பொன்னாலே அந்தணரும் பொன்னாலே
தேர்மயில் ஏறிவரும் தெய்வானை பொன்னாலே
வாகனத்து மேல் ஏறிவரும் வள்ளியம்மை
பொன்னாலே
ஏறுமேல் ஏறிவரும் இறைவரும் பொன்னாலே
தோகைமயில் ஏறிவரும் சுப்பிரமணியரும்
பொன்னாலே
வெள்ளிமயில் ஏறிவரும் வேலவரும் பொன்னாலே
தங்கமயில் ஏறிவரும் வேலவரும் பொன்னாலே.

3. கூடையிலே சோறு வைத்து
குடத்தோடு மோரு வைத்து
கூப்பிட்டு அன்னமிடும்
கொற்றவனார் பேத்தியோ.

4. வாழைப் பழத்தை
மதுரைக் கிளி கொய்யுதுன்னு
கிலுகிலுப்பை அம்பெடுத்து
மீனாட்சி அம்மன் கிளிவிரட்டப் போகையிலே
அங்கம் அசைய மீனா ஆபரணம் ஜோதிமின்ன
கும்பம் அசைய மீனா
கோதை சடை முத்துதிர
முன்பக்கம் கண்ணாடி மின்னப் பதித்து
முகப்புக்கு கல்லிழைத்து
தங்கம் பதித்து தருவிப்பார் தாய்மாமனே.

5. ஓடுதாம் மேகம் ஒளிவிடுதாம் ராணிமுகம்
ஆடுதாம் இரண்டு கிளி என் ஐயா
அவன் ஆடும் தொட்டிலிலே
அனந்தல் வருமறுதி, பாடுதாம் இரண்டுகிளி
பசுங்கிளியான் தொட்டிலிலே.

திருமதி. திருநெல்லை ஆச்சி
"பரம்பரையாய் நகரத்தார் பெண்கள் பாடிவரும் தாலாட்டு"
பக். 186.

அ. சேஷாத்ரி சர்மா, <u>நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு</u>, சென்னை, வானதி பதிப்பகம், 1970.

6. ஆவணித் திங்கள்
அழகஞ் செட்டியார் பட்பை
யாரும் படித்ததில்லை
அச்சி விடக் கேட்டதில்லை
நானா இசை வைத்து
ராராட்ட வேணுமென்று
இரணிக் கோயிலார்
பொதுப்படப்பு ஓவியத்தை
புகழுடனே நான் படிக்க
விக்கினங்கள் இல்லாமல்
மூஷிக வாகன
வினாயகனே காத்தருளும்
ராராட்டை நான் படிக்க
நாவு தடுமாறாமல்

நல்ல சரஸ்வதியே

நாவில் வரவேணுமம்மா

தனையரையே தொட்டிலிட்டு

தாலாட்டை நான் படிக்க

தாக்கல் தடுமாறாமல்

சரஸ்வதியே வாருமம்மா

இப்படப்பு ஓவியத்தை

என்னாலே இயன்ற மட்டும்

எங்கள் மகன் பிள்ளையற்கு

என்கண்ணே எடுத்துரைப்பேன் தாலாட்டாய்

குற்றங்கள் நீக்கி

உங்கள் குழந்தையைப்போல் பாவித்து

குணத்தை உபசரித்து

பொதுப்படப்பு தான் படைப்பாள்

பூவகத்தில் ரொம்ப இருக்கு

ஏழு ஊரார் கூடி இரணிக்கோலாட்கள்

பொதுப் படப்பு போல

புவன மெங்கும் கண்டதில்லை.

படப்பு படப்போர்கள்

பட்டினத்தில் ரொம்ப இருக்கு

பள்ளத்தூர் படப்பது போல்

பாருலகத்தில் கண்டதில்லை

வயசிலே மூத்தவர்கள்

வார்த்தை சொல்லக் கேட்டிருக்கேன்

வளமை தெரிஞ்சதினால்

மாமியார் காளியார்

மாது மணவாளர்
        அழகஞ் செட்டியார் எல்லோருமாக
ஏதுவாய் வழி நடந்து
        இளம்பில்லைக் கொய்ய வென்று
பில்லு வெட்டப் போகையிலே
        பெரிய சோலை அருகிலே
அழகஞ் செட்டியார்
        போய் மறைந்தார் கோயிலிலே
பெரியவுக காலத்தில்
        இரணிக் கோயிலார்
பொதுப்படப்பை தான் படைத்தார்
        ஏழு ஊரார் கூடி
இரணிக் கோயில் ஆட்கள்
        பெரும்படப்புத் தான் படைக்க
புள்ளி பெருகுச்சாம்
        பொன்னும் குவிந்ததாம்
அன்ன நடைப் பெண்டுகளும்
        ஆண்மை உள்ள ஆடவரும்
மாணிக்கம் போல் மைந்தர்களும்
        இரணிக் கோயிலார்
மனக் கருத்து முள்ள
        மந்திரி போல் ஆடவரும்
குயில்மொழி போல் பொண்ணுகளும்
        குணமான புத்திரரும்
கூடிப் படக்கிறதும்
        குறைகளொன்றும் இல்லாமல்

சேர்ந்து படக்கிறதும்
சிறப்பாய் நடக்கிறதும்
அழகஞ் செட்டியார் படப்பு என்று தெண்டனிட்டு
பணியாரம் சுட்டு வைப்பார்
பெரிய அண்டாவில்
பாச்சோறும் பொங்கி வைப்பார்
பள்ளையச் சாதம்
பானையிலே தான் வடிப்பார்
நித்தம் விளங்க வென்று
ரெட்டை வீடு தன்னிலே
நிலவெளக்கு நாலெரியும்
நல்ல படப்பென்று
நாலு விளக்கு எரியும்
சரியா விளங்கு தென்று
சரவிளக்கு நின்னெரியும்
மின்சார விளக்கு
வெளியெல்லாம் மின்னலிடும்
புள்ளி தெரிய வென்று
பேரெழுதும் சித்திரமும்
பங்கு தெரிய
பணியாரம் தான் கொடுக்க
பணம் வாங்கும் ஓவியமும்
தொட்டிவ ளை தொட்டிவ ளை
அய்யனார் யெல்கை
அழகஞ் செட்டியார் வளவில்
தொண்ணூறு தொட்டிவ ளை

செல்வக் குழந்தைகளுக்கு

தூ க்கம் வரத் தாலாட்ட

தொட்ட இடமெல்லாம் தொட்டிவ ளை

அருமைக் குழந்தைகட்கு

அனந்தல் வரத் தாலாட்ட

அழகஞ் செட்டியார் வளவில்

அயிநூ று தொட்டிவ ளை

முத்தத் தருகே

காளியார் வாசல்

முந்நூறு தொட்டிவளை

முத்தெடுத்து தொட்டிகட்டி என்கண்ணே

அழகஞ் செட்டியார்

முடிமன்னர் பேரு சொல்லி

முறமை சொல்லி ராராட்டி

பட்டெடுத்து தொட்டி கட்டி

பாட்டனார் பேரு சொல்லி

பதமை சொல்லி ராராட்டி

அய்யாக்கத் தொட்டிலிலே

அனந்தல் வர ராராட்ட

சீயாக்கத் தொட்டிலிலே

செல்வம் வர ராராட்ட

பேரு சொல்லி ராராட்ட

பிள்ளை தந்தார் அய்யனார்

வளமை சொல்லி ராராட்ட

மஞ்சம் தந்தார் அழகஞ் செட்டியார்

வச்சு விளையாட

மதலை தந்தார் காளியார்
அய்யனார் கோயில்
ஆலயமும் சென்று
அபிசேகங்கள் செய்தவுடன்
பருப்புடனே நெய் வார்த்துப்
பள்ளையமும் தான் படைத்து
பாச்சோத்துப் பள்ளையம்
பக்கத்தே தானிருக்கும்
பழனி விபூதி
பானை இரண்டிருக்கும்
விபூதித் தட்டோடே
சிகப்பு திருச்சொர்ணம் இட்ட இருக்கும்
இதைக் காணவேணுமென்று
கனசனங்கள் வந்திருக்கும்
தெண்டனிட வேண்டுமென்று
ஜெக சனங்கள் வந்திருக்கும்
கும்பாபிஷேகம் போல்
கூட்டம் ரொம்ப வந்திருக்கும்
கும்பிட்ட பேர்களுக்கு
குறைகள் எல்லாம் நீங்கிவிடும்
தெண்டனிட்ட பேர்களுக்கு
தீவினைகள் நீங்கி விடும்.
கையெடுத்த பேர்களுக்கு
கவலை எல்லாம் நீங்கிவிடும்
குழந்தை தொட்டி கட்டுவதும்
கோடி சனம் வாரதுவும்

மதலை தொட்டி கட்டுவதும்
மாசனங்கள் வாரதுவும்
பிள்ளை பிறக்க வேண்டுமென்று
பிரார்த்தனைகள் செய்பவரும்
பாலைங்க தொட்டிக்குப்
பணியாரமும் தான் கொடுப்பார்
தொட்டிப் பணியாரமும்
தொன்னையிலே பாச்சோறும்
இரணிக் கோயிலார்
தோதாக் கொடுக்கிறதும்
பொண்ணுக்குப் பொண்ணு
பேத்திக்குப் பேத்தி
பேரனுக்கும் தேவி
புடிச்சுங்கும் இப்படப்பு
மாதுக்கு மாது மகபுள்ளை பேத்தி
மாது மருமகள் வருகிற நற்படப்பு
வருகும் சனங்கட்கு
அழகஞ் செட்டியார் வாசல்
பெரிய வளவிடமும் பத்தாது
இன்னம் சனம் வந்தாலும்
இரணிக் கோயிலார்
எய்க்காமல் சோறிடுவார்
சகல சனங்கட்கும்
சாப்பாடு செய்து வைத்து
வெத்திலை பாக்கு
விசிறிகளும் தான் கொடுப்பார்

பசித்து வருவோருக்கு
பசியமத்த வேணுமென்று
தவிச்சு வரும் பிராம்மணாளுக்கு
சாதமிட வேணுமென்று
இரணிக் கோயிலார்
சத்திரமும் கட்டி வைச்சார்
மருசாதி ஆட்களுக்கு
சாப்பாட்டுச் சீட்டு
தகுந்தபடி கொடுப்பார்
கார்விடும் டைவர்களுக்கு
கலர் கொடுத்த சீட்டுத்தான்
கேட்ட உடனே
கிட்டநின்று தான் கொடுப்பார்
அட்டி ஒன்றும் சொல்லாமல்
அட்சணமே தான் கொடுப்பார்
டிக்கட்டைக் கண்டவுடன்
நேர்மையுள்ள சாப்பாடு
அச்செழுத்தைக் கண்டவுடன்
அத்தனை சாதிக்கும்
அன்னம் கறிக் குழம்பு
அள்ளியிட்டு நிற்பார்கள்
இந்தி மனுசன்
எதிக்கை ஒரு பாராத்தான்
தமிழ் மனுசன்
சரியான காவல்தான்
பின்கடவு உள்ள தெல்லாம்

பெலமான காவல்தான்
எள்ளளவும் போகாமல்
அழகஞ் செட்டியார்
எல்லையிலே காவல்தான்
இட்டிலிச் சட்டி
இருபது செட்டிருக்கும்
எண்ணிக்கை இல்லாமல்
இட்டிலிகள் ரொம்ப இருக்கும்
அதுக்குத் தகுந்தபடி
சாம்பார் அண்டாவில் தானிருக்கும்
உப்புமா காப்பி
ஓவியமாய்ச் செய்திருக்கும்
பால் ஊத்தி தயிர் உறையும்
பாதிச்சாம வேளையிலே
பலகாரம் தானிருக்கும் திங்கள் அடுத்த
செவ்வாய்க் கிழமை அன்று
ஏழுமணிக்குக் காப்பி பலகாரம்
எதுவாகத்தான் கொடுப்பார்
பத்து மணி வரைக்கும்
பலகாரம் தான் நடக்கும்
இல்லையென்று சொல்லாமல
எடுத்து வந்து வைப்பார்கள்
மத்தியானச் சாப்பாட்டிற்கு
விசாரணைக் காரர் வந்து
கறிவகைகள் ஆச்சா என்று
காரியமாய் மேல் பார்ப்பார்

தாட்டெலையை போட்டு வைத்து
சரியாகப் பந்தி வைப்பார்
பானையில் சாதமும்
பக்குவமாய்த் தானிருக்கும்
கூட்டுக் கறிகளும்
குழம்பு வகை நேத்திகளும்
சாம்பார் ஓவியமும்
தயிர் பச்சடி நேத்திகளும்
பச்சடிகள் ஓவியமும்
பாயாச நேத்திகளும்
வடையுடனே அப்பளமும்
வர்க்க வகைகளும்
மோர்க் குழம்பு ஓவியமும்
முறுக்கான சாப்பாடும்
பொரிச்ச பொரிக்காயும்
போஜனங்கள் ஓவியமும்
வேதியர் சமையலும்
வெகு முறுக்குச் சாப்பாடும்
நெருக்கடிகள் இல்லாமல்
நின்று விசாரிப்பார்
தக்க புகழுடைய
தருமரெல்லாம் விசாரணைதான்
வெத்திப் புகழுடைய
வீமரெல்லாம் விசாரணைதான்
மனுசா மனுசரெல்லாம்

அழகஞ் செட்டியார் படப்புக்கு
விசாரணைக்கு வந்து நிற்பார்
மட்டமுள்ள ஆட்களும்
மைனர்களும் பந்தி வைப்பார்
இடைவேளைக் காப்பி
இரண்டு பலகாரமுண்டு
ஆறுமணி வரைக்கும்
அருமையாய்தான் கொடுப்பார்
அடுத்தும் ஒரு படப்பு
காளியார் ஆயாள் படப்பென்று
நித்தம் விளங்க வென்று
ரெட்டை வீடு தனிலே
நில விளக்கு நாலெரியும்
நல்லா விளங்க வென்று
நாலுவிளக் கெரியும்
சரியாய் விளங்கவென்று
சரவிளக்கு நின்னெரியும்
பக்குவமாய் பர்ச்சோறும் பொங்கிவைத்து
பானையில் சாதம்
பதத்துடனே தான் வடித்து
பணியாரம் சுடுகிற
பாவினை தான் பெண்டுகளும்
பக்க நின்று பந்தி வைக்கும்
பாங்கான ஆண் பிள்ளைகள்
பக்கத்தே நின்று
பால் சாம்பிராணி புகையுமிட்டு

சிகப்பு ஓலைப்பாய் விரித்து
சேலைகளைப் பாரிச்சு
காளியார் படப்பென்று
கண்டாங்கி பாரிச்சு
மல்லிகைப் பூவை
மகிரவே சாத்தி
ஏழுஊர் ஆட்களுக்கு
ஏழ வட்டி வைத்து
ஏழவட்டி தனிலே
எதவாச் சாதமிட்டு
வாழைக்காய் கறியுடன்
வகையாய்த் தான் படைத்து
பருப்புடனே நெய்வார்த்துப்
பள்ளையமும் தான் படைத்து
பாச்சோத்து பள்ளையம்
பக்கத்தே தானிருக்கும்
விபூதித் தட்டோடே
திருச்சொர்ணத் தட்டிருக்கும்
கும்பிட்ட பேர்களுக்கு
குறைகள் எல்லாம் நீங்கிவிடும்
தெண்டனிட்ட பேர்களுக்குத்
தீவினைகள் நீங்கிவிடும்
கையெடுத்த பேர்களுக்கு
கவலை எல்லாம் நீங்கிவிடும்
நேரம் சுணங்காமல்
நெருக்கடிகள் இல்லாமல்

காலம் சுணங்காமல்
காளியார் படப்பென்று
விசாரணைக்காரர்
கனச் சுறுக்காய் சோறிடுவார்
புதன் கிழமை அன்று
காலைப் பலகாரம்
ஏழு மணிக்கு
எதமாய்க் கொடுக்கறதும்
பத்துமணி நேரம் மட்டும்
பலகாரம் தான் நடக்கும்
மத்தியானச் சாப்பாடு
விசாரணைக்காரர் வந்து
மணியும் சுணங்காமல்
வாங்களென்று பந்தி வைப்பார்
வீடு வர வேண்டுமென்று
சனங்கள் வெகுசுருக்காய் சாப்பிடுவார்
ஏழு மணி வரைக்கும்
காப்பி பலகாரம்
எதமாய்க் கொடுக்கிறதும்
ஏலங்கள் போடவென்று
அழகஞ் செட்டியார்க்கு
எரம்பப் பணம் சேர்க்கவென்று
இரணிக்கோயில் ஆட்கள்
எல்லோரும் தானிருந்து
பாச்சோத்து அண்டா ஏலம்
பணம் ஒசத்திக் கேட்போருக்கு

பாலாய் பெருகுமாம்
பவனாய்க் குமியுமாம்
பாலன் பிறக்குமாம்
மிகுந்த விலை கொடுத்து
மஞ்சள் எடுப்பவருக்கு
மச்சம் குவியுமாம்
மஞ்சள் பிறக்குமாம்
மனக்கிலேசம் நீங்குமாம்
ஒசந்த விலை கொடுத்து
உப்பு எடுப்பவருக்கு
ஒன்னு நூ றாகுமாம்
ஒசந்த பணம் சேருமாம்
உப்பாய்ப் பொலியுமாம்
சகல சாமானும் ஏலம்விட்டு
சுவாமிக்கு பணம் சேர்த்து
சகல சனங்களும்
சந்தோசம் பேசி
மங்களமாக
அவர்கள் மனை இடம்போய்ச் சேருவார்கள்
எழுதப் படிக்க
எனக்குத் தெரியாது
நானா எடுத்து என்கண்ணே
ராராட்டத்தான் படித்தேன்
ஐயனார் தன் கிருபை
அழகஞ் செட்டியார் தயவாலே
காளியாத்தாள் சம்மதத்தால்

கடவுள் அனுக்கிரகம்
கவியாய் அமைந்தது
பள்ளத்தூர் பொதுப் படப்பை
இரணிக் கோயிலார்
படைக்கும் வகை ஆட்களும்
படப்பு அதிசயத்தைப்
பார்க்க வருபவரும்
பாலனுக்குத் தொட்டி கட்ட
பாங்குடனே வந்தவரும்
தனையார்களைத் தொட்டிலிட்டுத்
தாலாட்டைக் கேட்டவரும்
நல்ல படப்பென்று
நாவாலே சொன்னவரும்
கனசனங்கள் அத்தினையும்
கண்ணாலே பார்த்தவரும்
நானென்று முன்னுக்கு
நாட்டமாய் நிற்பவரும்
உருகும் சனங்களை
வரவேற்க நின்றவரும்
வந்த மனுசாளுக்கு
வார்த்தை மொழி சொன்னவரும்
சமையலுக்குச் சாமான்
சரியாய்க் கொடுப்பவரும்
சமயல் செய்து வைப்பவரும்
சலியாமற் பரிமாறும்
சரியான ஆட்களும்

வேணுமென்று வேகமாய்
வேலை உழைப்பவரும்
பொதுப் படப்பை தாலாட்டாய்
ஒங்க பொண்ணு படித்தவரும்
மைக் உதவி செய்த
உங்கள் மாதுடைய புத்திரரும்
ஆவணித் திங்களிலே
அழகஞ் செட்டியார் படப்பு
அதிசயந்தான் என்றவரும்
அடுத்த நாள் செவ்வாயில்
காளியார் படப்பு
காட்சிதான் என்பவரும்
புதன்கிழமை அன்று
போயிட்டு வருவோமென்று
கும்பிட்டு விபூதி கோடிசனமெடுத்து
விபூதிபூசி வீடு வருபவரும்
அத்த னைக்கும் மேற்பார்க்கு
இரணிக் கோயிலார்
ஆடவரும் ஆச்சிகளும்
ஆண்முதல் பொண்ணு வரை
அத்தனை பேர்களும்
ஆல் போல் தழைத்து
அருகது போல் வேரோடி
வாழ்வார் வளருவார்
வற்றாராய் வாழ்ந்தில்லார்
மக்களுடன் செல்வமும்

மனம் போலே வாழ்ந்திருப்பார்
மக்களுடன் செல்வாக்காய்
மங்களமாய் வாழ்ந்திருப்பார்
இத்துடனே தாலாட்டை என்கண்ணே
எதமாய் முடித்திடுவோம்
இத்துடனே தாலாட்டை என்கண்ணே
எதமாய் முடித்திடுவோம்
பொதுப்படப்பு ஓவியத்தை
புகழுடனே ராராட்ட
வேணுமென்று அச்சிலிட்டோர்
மேன்மேலும் வாழ்ந்திருப்பார்
வேணுமென்று அச்சிலிட்டோர்
மேன்மை பெற வாழியதே
நல்ல படப்பை
ராராட்ட வேணுமென்றே
நன்மையுடன் அச்சிலிட்டோர்
நலம் பெற்று வாழ்ந்திருப்பார்
நன்மை என்று அச்சிலிட்டோர்
நலம் பெறவும் வாழியதே.

சுப. கண்ணம்மை ஆச்சி, பள்ளத்தூர்
அழகஞ் செட்டியார் தாலாட்டு,
காரைக்குடி, செந்தமிழ்ப் பதிப்பகம்.

7. ஏனழுதான் என்னரியான்
ஏலம்பூ வாய் நோக

கரும்புக் கழுதானோ
　　கண்ணிலிட்ட மை கரைய
சிலம்புக் கழுதானோ
　　செங்கமல வாய் சிவக்க
மண்ணிலொரு புன்னை மரம்
　　வருசமொரு பூப்பூக்கும்
வருந்திஒரு காய் காய்க்கும்

என்னரியான் புன்னை மரம்
　　இலையுதிரப் பிஞ்சு வரும்
புன்னைப் பூக்கொய்ய வந்த
　　புலந்திரனை யாரடித்தார்
மகிழம்பூக் கொய்ய வந்த
　　மகனாரை யாரடித்தார்
ஆரும் அடிக்கவில்லை
　　ஐவிரலும் தீண்டவில்லை
தானா அழுகின்றான்
　　தம்பி துணை வேண்டுமென்று
அவனா அழுகின்றான்
　　ஆத்தாள் மடி தேடி.

8. ஆராயிரவர்க்கும்
　　அறியவந்த பார்ப்பாருக்கும்
காரியமும் சொல்லி
　　கணக்குரைப்பார் பேரனோ!

9. ஆனைகட்டிப் போரடிக்கும்
அம்மானார் சேனைதளம்
குதிரைகட்டிப் போரடிக்கும்
கோடிப்பேர் சேனைதளம்
மான்கட்டிப் போரடிக்கும்
மாமுடிமார் சேனைதளம்
அம்மானார் செய்களிலே
அவலுக்கொரு நெல்லெடுத்து
பள்ளிதனைக் கூட்டிப்
பதம்போல் அவலிடித்து
இடைச்சி த னைக் கூட்டி
இலைபோல் அவலிடித்து
அவல் அழகைக் கண்ட தம்பி - நீ
அழகை அமர்ந்தாயோ.

10. காடுவெட்டி நாடாக்கி
கற்களெல்லாம் உள்ளழுத்தி
நாடுபெற்று வாரார்கள்
ராசமுடி ஐயாக்கள்
சீமைப் பெற்று வாரார்கள்
செல்லமுடி அம்மான்மார்
அம்மானார் எல்லையிலே
என்ன வைத்தால் தோப்பாகும்?
வைத்த பயிர் வளரும்
வாழை வைத்தால் தோப்பாகும்

சேர்த்த பயிர் வளரும்
தென்னை வைத்தால் தோப்பாகும்
தொட்ட இடம் துலங்கும்
தோட்டம் பயிராகும்
தென்னையும் வாழையும்
சேர்த்து வைத்தால் தோப்பாகும்
வாழையும் தென்னையும்
வாங்கி வைத்தால் தோப்பாகும்
இஞ்சி பயிராகும்
எலுமிச்சை தோப்பாகும்
மஞ்சள் பயிராகும்
மாது ளையும் தோப்பாகும்
கொத்திஞ்சிக் காய்க்கும்
கொடிமிளகு பிஞ்சு விடும்
ஏலக்காய் காய்க்கும்
எழுனூ று பிஞ்சு விடும்
சாதிக்காய் காய்க்கும்
தாய்மாமன் எல் லையிலே.

11. கண்ணில் உறுமணியோ - எங்கள்
கலிதீர்த்த பெட்டகமோ!
பொன்னில் உறுமொளியோ
பூவிலுறும் வாசனையோ!
கொடிக்கால் மருக்கொழுந்தோ
கோதை கையில் பூச்சரமோ!

12. ஏழு கடல் நீந்தி
எடுத்து வந்த தாமரைப்பூ!
பத்துக் கடல் நீந்திப்
பறித்து வந்த தாமரைப்பூ!
அணைத்து மனம்மகிழ - நாங்கள்
அள்ளி வந்த தாமரைப்பூ!
கொஞ்சி மனம்மகிழ - நாங்கள்
கொண்டு வந்த தாமரைப்பூ!

13. மாசில்லா முத்தோ
மணிவயிரத் தோளானோ!
கல்விக் களஞ்சியமோ
கற்றோர்க்குத் தாயகமோ
செல்வத் திருவிளக்கோ
செம்பொன் சுடரொளியோ
ஆதி அருள் விளக்கோ
ஆனந்தப் பேரொளியோ
தூ ண்டா மணிவிளக்கோ
சோதிச் சுடரொளியோ
மாணிக்கத் தூ ணோ
மரகதப் பூமுடியோ
வானத்தின் மீனோ
மேகத்தின் மின்னொளியோ.

14. குடகு சிறுமலையாம்
கண்ணியவான் ஆடும் மலை

அரிசித் தினைவிளையும் நீபிறந்த
அண்ணாமலை நாடு
நெய்ப் பவழக்காய் தறுக்கும்
உனதுதல வாசலிலே.

15. 'ஏலங்குழலாளனுக்கு' என்னென்ன ஆலத்தி
ஆலத்தி சுற்றுங்கள் அரிய குமரனுக்கு
சுற்றுங்கள் ஆலத்தி 'சோழகுமாரனுக்கு'!

16. சின்னஞ் சிறுகிளியே தினைகொய்ய வந்தாயா?
பச்சை சிறுகிளியே பழந்தின்ன வந்தாயா
எங்கிருந்தாய் இன்னேரம் இளங்கிளியே
சொல்லிடுவாய்
பரமசிவன் முன்பாக பாதத்தின் கீழிருந்தேன்
மஞ்சட் சிறுகிளியே மதியம்போல் எங்கிருந்தாய்
மலைப் பழனி வேலவர்தம் மண்டபத்தின்
மேலிருந்தேன்
சின்னஞ் சிறுகிளியே விடிகாலம் எங்கிருந்தாய்?
தென்மதுரைச் சொக்கர் திருவடியின் கீழிருந்தேன்.

17. உன்னுறக்கம் நீ கொள்ள
உத்தமியாள் தாலாட்ட
சாலை வழி உறங்க
சமுத்திரத்தின் மீனுறங்க
நாடெல்லாம் தூங்க
நடுக்கழனி நெல்தூங்கப்

பாலில் பழந்தூங்கப்
　　பாதிநிலாத் தான்தூங்க
பொற்கொடியாள் தாலாட்டப்
　　புத்திரனே நித்திரைசெய்!
மங்கையர்கள் தாலாட்ட
　　மைந்தனே நித்திரை செய்!

18. ஆட்டுக்கடி தாதியரே
　　அன்னக்கிளி கண்ணுறங்க
ஊட்டுங்கடி பாலை
　　உத்தமியே! தாதியரே
தொட்டிலுக்குங் கீழே - என் கண்ணம்மா
　　துணையிருப்பாள் மாரியம்மாள்
கட்டிலுக்குங் கீழே - என் கண்ணம்மா
　　காத்திருப்பாள் காளியம்மாள்.

19. பாளையத்து ராசனோ நீ!

ஆராரோ ஆரிரரோ - என் கண்ணே நீ
　　ஆராரோ ஆரிரரோ!
தூங்கடா என் நல்லகண்ணே - என்
　　கண்ணே துணையடா நித்திரைபோ
நித்திரையும் போகாயோ - என் கண்ணே நீ
　　சித்திரப் பூத் தொட்டிலிலே!
தூங்காத கண்ணுக்கு - என் கண்ணே
　　உனக்குத் துரும்பு கொண்டு மை எழுதி
மைஎழுதிப் பொட்டுமிட்டு - என் கண்ணே

மனமகிழ்ந்து நீ தூ ங்காய்!
வானத்து மீனோ - என் செல்வக் கிளியே நீ
வளரும் பிறையோ - நீ
வனக்குருவி போல வந்து - என்
மனக் கவலை தீர்த்தாயோ!
கடல் அரசு பவழமலை - என் கண்ணே
உனக்கு கண்காணா ராச்சியங்கள்
உனக்கு நிலையரசு வேண்டுமென்று - என் கண்ணே நீ
நின்று தவம் செய்த னையோ
பாலாறு நெய்யாறு - கண்ணே
பாலும் பசியாறு!
பாலாற்றுத் தண்ணியிலே - என் கண்ணே
பசியாற்றி வந்தனையோ
கரும்போ கலகலங்க - என் கண்ணே
உனக்கு கல்லாறும் தண்ணி வர
கரும்பு நட்ட கொல்லையிலே - என் கண்ணே நீ
விரும்பி நட்ட செங்கரும்போ!
சர்க்கரையோ நெய்க்கரும்போ - என் கண்ணே
சாதி மருக்கொழுந்தோ
மாசி மலர்ந்துவரும் - என் கண்ணே
உனக்கு மலைமேகம் சூழ்ந்துவரும்
மாசிப் பிறை கும்பிடய்ய - என் கண்ணே
மாமன் கிளை வாடிவென்றே
தைப்பிறை கும்பிடய்ய - என் கண்ணே
தகப்பன் கிளை ஓங்கவென்றே

பாட்டனார் எல்லையிலே - என் கண்ணே
உனக்கு பட்டுவந்து நிற்குதய்யா! உன்
பட்டுவிலை மதிக்க - என் கண்ணே
பத்துபேர் உன் மாமன்
தேனோ திரவியமோ ! - என் செல்வமே
தெவிட்டாப் பலாச்சுளையோ - என்
அன்பே ஆரமுதே
அன்னமே நீ உறங்காய்
மயிலாடக் குயில்கூவ - என் கண்ணே
உனக்கு மாடப்புறா சங்கூத !
சங்கு முழங்குதய்யா - உனக்குச்
சங்கரனார் கோயிலிலே - நீ
வேண்டும் ஐயா ஆண்டவனை - என் கண்ணே உனக்கு
வேறு பிணி அண்டாது
கும்பிடய்யா ஆண்டவனை - என் கண்ணே உனக்கு
குற்றமொன்றும் அண்டாது
அன்னக்கிளி போகுதடா - என் கண்ணே
தின்னக்கனி கொண்டு வர!
தின்னக் கனிபோடு - என்னையன்
திருமுடிக்குப் பூப்போடு
வெள்ளியாலே வாகனமாம் - என் கண்ணே
உனக்கு வெளிவரத் தீவட்டியாம்!
பொன்னாலே வாகனமாம் - என் கண்மணியே
உனக்கு போகவரத் தீவட்டியாம்
அல்லியோ உன் தாயி - என் கண்மணியே
அருச்சுனரோ உன் தகப்பன்

தங்கத்தாலே தாலி - என் கண்ணே
உனக்குத் தருவாரோ உன்மாமன்
பொன்னாலே மங்கலமாம் - என் கண்ணே
உனக்குப் போடுவார் உன் மாமன்
வெள்ளி மலையழகா - கண்ணே நீ
வேடர்மலை தன்னழகா
சென்னி மலையழகா - கண்ணே
சிவன் மலையின் தேரழகா
செட்டி மகனே நீ - என் கண்ணே
கனகசெட்டி தன் மகனோ!
பார்ப்பான் மகனோ நீ - என் கண்ணே
பாளையத்து ராசனோ!
கட்டபொம்மு போல நீ - என் கண்ணே
கட்டழகா வாழ்ந்திருப்பாய்.

தமிழண்ணல் (தொ. ஆ.), தாலாட்டு, காரைக்குடி, பாவை நிலையம்,
மூன்றாவது பதிப்பு, 1963.
பக். 36 - 66.

20. ஆராரோ ஆரிரரோ
ஆறிரண்டும் காவேரி
காவேரி கரையிலேயும்
காசிபதம் பெற்றவனே
கண்ணே நீ கண்ணுறங்கு
கண்மணியே நீ உறங்கு
பச்சை இலுப்பை வெட்டி

பவளக்கால் தொட்டி கட்டி
பவளக்கால் தொட்டிலிலே
பாலகனே நீ உறங்கு!
நானாட்ட நீ தூங்கு!
நாகமரம் தேரோட
தேரு திரும்பி வர
தேவரெல்லாம் கை எடுக்க
வண்டி திரும்பி வர
வந்த பெண்கள் பந்தாட
வாழப்பழ மேனி
வைகாசி மாங்கனியே
கொய்யாப் பழமேனி - நான் பெத்த
கொஞ்சி வரும் ரஞ்சிதமே
வாசலிலே வன்னிமரம்
வம்மிசமாம் செட்டிகுலம்
செட்டி குலம் பெத்தெடுத்த
சீராள நீ தூ ங்கு
கொறத்தி கொறமாட
கொறவரெல்லாம் வேதம் சொல்ல
வேதஞ்சொல்லி வெளியேவர
வெளிலேறிப் போகுதய்யா!
மாசி பொறக்குமடா!
தையை பொறக்குமடா - உங்க
தகப்பன் குடியீடேற
ஆராரோ ஆரிரரோ
கண்ணே நீ உறங்கு.

21. ஆறாம் பெரியேரி
அக்கரையும் பொன்னேரி
பொன்னேரி போய் திரும்ப
பொழுது இல்லாப் புண்ணியராம்
நல்ல மான் கொல்லையிலே
புள்ளி மான் மேயுதடா
புள்ளிமான் புடிச்சிக்கட்ட
புடிகவுறு பொன்னாலே
காசி அளப்பான் செட்டிமகன்
முத்தளப்பான் வேவாரி
வரிசையிட்டான் தாய்மாமன்
அஞ்சுகிளி மையெழுதி - உங்க
ஐயனார் பேர் போட்டு
கொஞ்சுகிளி போகுதய்யா!
கோவக்கனி கொண்டுவர
அன்னக்கிளி போகுதய்யா - உனக்குத்
தின்னக்கனி கொண்டுவர
தூங்கற கண்ணுக்கெல்லாம்
துரும்பு கொண்டு மையெழுத
கன்னான் மகளும் நீ
காசித் தட்டான் தன்மகனாம் நீ
சென்றுசெட்டி பேரனாம் நீ
மானத்து மீனாம் நீ
மச்சி செட்டி தன்மகனாம்
தோட்டத்து மீனோ நீ!
தொரை ரங்க இளாமணியோ

வண்டு கொடஞ்ச மரம்
தும்பி தொளைச்ச மரம்
தூ ணாகுமோ தொட்டிலுக்கு
ஏறாத மலையேறி
இளவாழை மூங்கைவெட்டி
எட்டாத தொட்டிலிட்டு
எட்டாத தொட்டிலிலே
தொட்டாரும் கண்மணியே
தொட்டிலிட்ட நல்லம்மாள்
பட்டினியாய்ப் பேறாண்டா
பட்டினியாய்ப் போனமாமன் - உனக்கு
பரியங் கொண்டு வருவானோ!

நா. வானமாமலை, தமிழக நாட்டுப் பாடல்கள், சென்னை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரவேட் லிட், 1964. பக். 85-89.

22. காடாக் கிடந்த இடத்தைக்
கைத்தலமாய் உண்டு பண்ணி
செடியாக் கிடந்த இடத்தை
சிவத்தலமாய் உண்டு பண்ணி
ஐயாக்கள் கட்டிய
அரசடியும் ஊருணியும்
பாட்டன்மார் கட்டிய
படித்துறையும் பாதாளமும்
கண்டக்கால் தம்பி
பயப்படுவான் என்று சொல்லி

வாசலின் மேல் கங்கை
வரவழைத்தார் ஐயாக்கள்
செங்கையில் தண்ணீர்
திருப்பி விட்டார் மாமன்மார்.

23. பத்துப்பொன் மெத்தை
பசும்பொன் தலகாணி
ஐந்துபவுன் தட்டு
அது நிறைய வெற்றிலை
சாதிக் களிப்பாக்கு
சங்குசுட்டார் சுண்ணாம்பு
ஏலங் களிப்பாக்கு
இளங்கொடிக்கால் வெற்றிலை
செதுக்காமல் தின்னெறக்கும்
செனகனார் பேரனோ!

24. வடக்கே திருப்பதியாம்
வாசலெல்லாம் பூந்தோட்டம்
பூவெடுத்து பூசை செய்ய
புண்ணியனாய் வந்தவனோ
தெற்கே திருப்பதியாம்
தெருவெல்லாம் பாலாறு
பாலெடுத்துப் பூசைசெய்ய
பாண்டியனாய் வந்தவனோ!

25. ஆளப் பொறந்தவனே

தைமாதப் பிறை பார்க்க
தவம் பெற்று வந்தவனே
முப்பாட்டன் ஆண்ட
முகப்பும் தலைக்கடையும்
தப்பாமல் ஆளத்
தவம் பெற்று வந்தவனே!

26. தங்கம் நறுக்கி
மறுவாட்டம் தூ ண்நிறுத்தி
வெள்ளை வளைபூட்டி
மேகவண்ணத் தொட்டிகட்டி
பச்சை இலுப்பை வெட்டி
பால்வடிய தொட்டி கட்டி
அந்த நல்ல தொட்டிலிலே
ஆட்டுங்கடி தாதியரே
அன்னக்கிளி கண்ணுறங்க
ஊட்டுங்கடி பாலை
உறக்கம் வரும் வரை!

27. வெள்ளிப் பலகையிலே - நீ
விளையாட வந்தவனோ?
கள்ளிப் பலகையிலே - நீ
கணக்கெழுத வந்தவனோ
ஈச்சமரத் தொட்டிலிலே - என் கண்ணே நீ
இருந்தாட வந்தவனோ?
மூங்கில் மரத் தொட்டிலிலே - என் கண்ணே நீ

கண்மூட வந்தவனோ
ஆனைமுகத் தொட்டிலிலே - என் கண்ணே நீ
அசைந்தாட வந்தவனோ!

28. பாசி படர்ந்த மலை - என் கண்ணே
பங்குனித்தேர் ஓடும் மலை
ஊசி படர்ந்த மலை - என் கண்ணே
உத்திராட்சம் காய்க்கும் மலை
ஆதி சிவனும் அங்கிருக்கும்
தேவாதியும் கூடிமுனைந்து
குழந்தை வரம் தந்தாரோ?

29. கண்ணோ கமலப்பூ - என் கண்ணே
கையிரண்டும் தாமரைப்பூ
மேனி மகிழம்பூ - என் கண்ணே
மெல்லி நல்லாள் சிற்றடியாள்
சிற்றடியாள் நானுனக்கு
செய்த தவம் நீகேளு
முற்றம் மெழுகி - என் கண்ணே
முழுச்சிவப்பாய்க் கோலமிட்டு
பச்சை பரப்பி - என் கண்ணே
பகவானைத் தெண்டனிட்டுப்
பாலாடைக்குப் பால் கொடுத்து - என் கண்ணே
பசித்தோர் முகம் பார்த்து
எட்டாத கோயிலுக்கு என் கண்ணே
எட்டி விளக்கேற்றி

தூ ரத்துக் கோயிலுக்கு - என் கண்ணே
தூ ண்டா விளக்கேற்றி - நான்
திங்கள் முழுகி - என் கண்ணே
திருத்தணிக்குப் போகையிலே
திருத்தணி முருகர் - என் கண்ணே
திருவுளத்தில் கொண்டாரோ
மாமயில் முருகரும் என் கண்ணே
மனமகிழ்ந்து கொண்டாரோ
மாதம் முழுகி - என் கண்ணே
மதுரைக்குப் போகையிலே
மதுரை நகர் சொக்கலிங்கம் - என் கண்ணே
மனமகிழ்ந்து கொண்ட - என் கண்ணே
மாதேவர்கள் எல்லோரும்
திருநீறு தந்தால் என் கண்ணே
செலவழிந்து போகுமென்று
திருக்காது குண்டலத்தை - என் கண்ணே
சிறப்பாகத் தந்தாரோ
மாலை கொடுத்தால் - என் கண்ணே
மலர்வாடிப் போகுமென்று
மாங்கனியைக் கைகொடுத்து - எனக்கு
மைந்தன் கலி தீர்த்தாரோ.

30. நாலு சவுக்கையாம்
நடுவே கொடிமரமாம்
கொடிமரத்தைச் சுற்றிவந்து
குழந்தைவரம் கேட்கையிலே

ஏழைக் குடியென்று - பரமசிவன்
எடுத்துவிட்டான் பால்குடத்தை
அருகின குடியென்று - பரமசிவன்
அள்ளிவிட்டான் அருமருந்தை
காணிக்கை கொண்டு
கடைத்தெருவே போகையிலே
மாணிக்கப் பிச்சையென்று - சுப்பையா
மடிப்பிச்சை தந்தாரோ.

31. ஆயிரங்காலம்
அரசுக்கு நீர் வார்த்து
முந்நூறு காலம்
முல்லைக்கு நீர் வார்த்து
தொன்னூறு காலம்
துளசிக்கு நீர் வார்த்து
எடைக்கு எடை பொன்கொடுத்து
எடுத்து வைத்த சித்தடியோ?

32. கரும்பசைய கண் தூ ங்க
கல்லாற்றுத் தண்ணி வர
கல்லாற்றுத் தண்ணியிலே - தம்பி நீ
நின்றாடும் பம்பரமோ
பம்பரமோ எம்பரமோ
பரமசிவர் தந்த கண்ணோ
எம்பரமோ பம்பரமோ
ஈசுவரனார் தந்த கண்ணோ.

33. சங்குவெள் ளைத் தாமரைபபூ
தனுக்கோடி இராமருக்கும்
அங்கம் வைத்துப் பூஜைசெய்யும்
அவர்க்கிளைய தம்பியர்க்கும்
காலைக் கடம்பருக்கும்
காசி விஸ்வேஸ்வரருக்கும்
அன்னபூரணி உன்னை
அள்ளி எடுக்கத் தந்தாளோ?
தனதாய் விளையாட
தங்கம் உன்னைத் தந்தாளோ?
பேசி விளையாட
பிள்ளை உன்னைத் தந்தாளோ?

34. தெற்கே சிவகாசி
தென்புறம் இராமேஸ்வரம்
இராமேஸ் வரத்திலும்
நல்ல தண்ணீர் பொய்கையிலே
குளித்து முழுகி
கும்பிட்டு நிற்கையிலே
கும்பிட்ட கைக்கு - இராமர்
குழந்தை வரம் தந்தாரோ
சங்கரன் கோயிலுக்கு
தவத்திற்குப் போகையிலே
தவமும் கொடுத்தாரோ
சாமி என்றும் தந்தாரோ

35. செம்பொன் வெட்டித்தூ ண் நிறுத்தி
சீனிகொண்டு கால்நாட்டி
கம்பன் மகள் சேனையர்க்கும்
கைக்குதனியாய்த் தந்த கண்ணோ?

36. ஆராரோ ஆரிரரோ
ஆரிரரோ ஆராரோ
ஆரடித்து நீ அழுதாய்
அஞ்சனக்கண் மைகரைய
சீரெடுத்த செல்வமிகு
சீமான் திருக்குமரா
பாலில் விருப்போ
பணியாரம் வேண்டி னையோ
சோலைப் பசுங்கிளியே - என்
சுந்தரமே சொல்லியழு
சப்பாணி கொட்டித்
தளர்ந்தனையோ அல்லது உன்
கைப் பாவைக்காக
கலங்கி அழுதனையோ?

37. சங்கரனார் கோயிலிலே
தனித்தாழையிலே பூவெடுத்து
சங்கரருக்கும் சாத்தி
சாந்தொழிலாளர் பேரனோ
அம்மனுக்கும் சாத்தி
அடிபணிவார் பேரனோ

சிவனுக்கும் சாத்தி
தெரிசிப்பார் பேரனோ.

38. வெள்ளி எழுத்தாணி
வெண்கலத்தால் மைக்கூடு
தொட்டுக் கணக்கெழுதும்
துரைராஜா பேரனோ?
ஏறுவதும் கப்பல்
இறங்குவதும் துறைமுகம்
படிப்பதும் தமிழ்
பார்ப்பதுவும் பணக் கணக்கு.

39. ஆரா குழலிடுங்க
ஐவருமாய் மையிடுங்க
சீராமர் நெற்றிக்குத்
திருநாமப் பொட்டிடுங்க
பொட்டிடுங்க மையிடுங்க
புண்ணியவார் பேத்திக்கு
மையிடுங்க பொட்டிடுங்க
மகராசா பேத்திக்கு.

40. காய்ந்த நீராடினால்
கருக்கும் திருமேனிஎன்று
குளிர்ந்த நீராடினால்
கூதல் அடிக்குமென்று
பாதாளம் வெட்டிப்

படிகொண்டார் பாட்டன்மார்
பாதாளம் கண்டாக்கால் - தங்கை
பயப்படுவாள் என்று சொல்லி
பூந்தோப்புக் குள்ளாகப்
பொய்கை கொண்டார் அய்யாக்கள்
பூந்தோப்புக் குள்ளாகத் தங்கை
போய்க் குளிக்க மாட்டான்னு
ஆகாச கங்கை
அனுப்பிவைத்தார் பேத்தியோ
ஆகாச கங்கை
அனலுறைக்கும் என்ற சொல்லி
வாசலிலே காசிநதி
வரவழைத்தார் பேத்தியோ.

41. தங்கத்தால் இட்டுவட்டி
சாதிமிட வெள்ளிவட்டி
வெள்ளியினால் இட்டுவட்டி
விதத்தில் ஒரு தொட்டிகட்ட
பட்டெடுங்கள் தொட்டிகட்ட
பவுன் உரையுங்கள் பொட்டுமிட
பொன் உரைத்துப் பொட்டுமிட்டு
பொழுதுறங்கப் பாய் விரித்து
பஞ்சாச்சரம் போல
பட்டு மெத்தையுமே விரித்து
பாருங்கடி தாதிகளா
படுத்துறங்கும் பாவினையை

ஆட்டுங்கள் அன்ன ஊஞ்சல்
அழுகை அமருமட்டும்
ஊட்டுங்கள் பாலமிர்தம்
உறக்கம் தெளியுமட்டும்.

42. காடெல்லாம் தேடி
காராம் பசுஒட்டி
ஒட்டிவந்த பாற்பசுவுக்கு
உடம்பெல்லாம் பொன்னிறமாம்
கொண்டுவந்த பாற்பசுவுக்கு
கொம்பெல்லாம் பொன்னிறமாம்
உட்கார்ந்து பால்கறக்க
முக்காலி பொன்னாலே
அணைந்து பால்கறக்க
அணைக்கயிறு பொன்னாலே
பிடித்துப் பால்கறக்க
பிடிசொம்பு பொன்னாலே
தென்கடல் மாணிக்கம்
திரட்டி அடுபோக்கி
வடகடல் மாணிக்கம்
வாரி உமிபரப்பி
நெய்பவளம் போல் நடுவே
நிமிரும் தணல் வளர்த்து
சங்கு கழுவி
தளிகையிலே பாலாற்றி
சங்குபால் குடித்திடுவாய் - என் கண்ணே

உங்கள் குலம் பேர்சொல்ல
பால்குடித்து கண்வளராய் - என் கண்ணே
பாட்டன் குலம் வளர.

43. அழுதால் அரும்புதிரும்
அண்ணாந்தால் பொன் சிதறும்
சிரித்தால் முத்துதிரும் - செல்வமகன்
வாய் திறந்தால் தேன் சிதறும்
தேனோ திரவியமோ - என் கண்ணே
தெவிட்டாத மாங்கனியோ.

44. கண்ணுமணி பொன்னுமணி
கந்தருட வேலுமணி
வேலுமணி வேண்டுமென்று
வெகுநாளாய்த் தவமிருந்தோம்
சின்னமணி பொன்னுமணி
சிவனுடைய வேலுமணி - இந்த
சிவமணி வேண்டுமென்று
சிலநாளாய்த் தவமிருந்தோம்
மாங்கனியோ தேங்கனியோ
மதுரைப் பலாச்சுளையோ
தேங்கனி வேண்டுமென்று
தேடித் தவமிருந்தோம்.

45. அரசே உனைவேண்டி
ஆடாத தீர்த்தமில்லை

பொருளே உனைவேண்டிப்
போகாத கோயிலில்லை
மாமாங்கம் ஆடி
மதுரைக் கடலாடி
சீரங்கம் ஆடி
திருப்பாற் கடலாடி
வற்றாத பொய்கையிலே
வந்துதித்த செல்வமே - நீ
கற்கண்டு சர்க்கரையோ
கணுவில்லாச் செங்கரும்போ
சர்க்கரையோ கற்கண்டோ
சாதிப் பலாக்கனியோ
பூசைக் குடமோ
பொய்சொல்லா வாசகமோ
ஆசைக் கிளியோ
அசைந்தாடும் பம்பரமோ
சோலைப் பசுங்கிளியோ
சொல்பெரிய வாசகமோ
சொர்ணப்பொன் தொட்டிலிலே - சோதி
சிகாமணியே கண்வளராய்.

ஆறு. அழகப்பன் (தொ.ஆ)
தாலாட்டுக்கள் ஐநூறு, சென்னை.
பாரி நிலையம், 1972.

46. ஸ்ரீரங்கம் ஆடி
திருப்பாக் கடலாடி
மாமாங்கம் ஆடி
மதுரைக் கடலாடி
சங்குமுக மாடி
சாயாவனம் பார்த்து
முக்குளமும் ஆடி
முக்தி பெற்று வந்த கண்ணே.

47. வெள்ளிவளை பூட்டி
விலாசமாய்த் தொட்டிகட்டி
தங்கவளை பூட்டி
சதுர அலங்காய் தொட்டி கட்டி
பச்சை இலுப்பை வெட்டி
பால் வடியத் தொட்டி கட்டி
தொட்டியிலே அட்டணக்கால் போட்டுத்
தூ ங்கறது ஆரு மகன்
சீதை மகனோ ஸ்ரீராமர் தந்த கண்ணோ
அல்லி மகனோ அரிராமர் மருமகனோ.

48. மானுடா ஓடுது
மறியிடா நல்லதம்பி
மானோடும் வீதி எல்லாம்
தானோடித் திரிந்தானோ
ஓடித் திரிந்தானாம் .

ஒருசால் சிலம்புதிர
தேடித் திரிந்தானாம்
திருக்கால் சிலம்புதிர.

49. அல்லி அரசியர்க்கும்
அழகு துரோபதைக்கும்
பங்கையம் சிறுகண்ணாள்
பவளக் கொடியாள்க்கும்
மாயரொட தங்கை
மாது சுபத்திரைக்கும்
மேகத்தில் மின்னுகிற
மின்னொளியாள் தனக்கும்
கொத்தவர்கள் ஐவருக்கும்
கோபால கிருஷ்ணருக்கும்
தனதாய் விளையாடும்
தமிழோ புனக்கிளியோ
பொதுவாய் விளையாட்டும்
புள்ளிமான் நித்திரையோ.

50. மீன்பூக்க நிலவெரிக்க மின்னல் குளம் பெருக
மின்னலிலே காதவழி தம்பி நீ விளையாடி
வந்தாயோ?
அச்சடிக்கப் பொன்விளைய ஆதிச்சார் உன்நாடு
வைத்திருக்கத் தந்தமகன் வாருவான் நூறுகுடி
குடகு சிறுமலையாம் கண்ணியவான் ஆடுமலை
அரிசித் தினைவிளையும் நீ பிறந்த அண்ணாமலை
நாடு.

ஆனை கட்டிப் போரடிக்கும் அம்மானார் சேனைதலம்
குதிரைகட்டிப் போரடிக்கும் கோடிப்பேர் சேனைதலம்
மான்கட்டிப் போரடிக்கும் மாமுடியார் சேனைதலம்
அம்மானார் செய்களிலே அவலுக்கொரு நெல்லெடுத்து
பள்ளிதனை கூட்டிப் பதம்போல் அவல் இடித்து
இடைச்சித னைக் கூட்டி இலைபோல் அவல் இடித்து
அவல் அழகை கண்ட தம்பி - நீ அழுகை அமர்ந்தாயோ.

51. காடு வெட்டி நாடாக்கி
கள்ளரெல்லாம் உன் அமர்த்தி
நாடுபெற்று வாராக
ராஜாக்கள் உங்கள் ஐயா.

52. முல்லைப்பூக் கட்டடமாம்
முகப்பு எல்லாம் உத்திரமாம்
முகப்பைத் திறந்து விட்டால்
முல்லைப்பூ வாசனையாம்
முல்லைப்பூ வாசனையாம்
உங்கள் ஐயா மூத்தவுக யோசனையாம்.

53. என் அரிய அம்மானார் என்ன கொண்டு
வந்தார்கள்
அக்கரையில் சக்கரையும் அதிமதுரத் தென்னை
வட்டும்
கோடைப் பலாச்சுளையும் குலைசேர்ந்த
மாங்கனியும்

போட்டு விளையாட பொன்னாலே அம்மானை
கட்டி விளையாடக் காசிச் சிண்டுமணி
வைத்து விளையாடவண்ண கிலுகிலலலலலலலுப்பை
ஓட்டி விளையாட ரெயிலா ரயில் வண்டி
சாதிக் களிப்பாக்கும் சங்குவெள்ளைச் சுண்ணாம்பும்
ஏலங் கிராம்பும் இளங்கொடிக்கால் வெற்றிலையும்
அத்தனையும் கொண்டு அறியவந்தார் அம்மானார்.

54. நெத்திக்குச் சிட்டி
நிழல் பார்க்கக் கண்ணாடி
காலுக்குத் தண்டை
கைக்குக் கணையாளி
கொண்டு வந்தும் காண்பாக
கோதைக் கிளிக்கம்மானார்.

55. கோர்ட்டைத் திறந்து
குறிச்சியிலே உட்கார்ந்து
ஜட்ஜோடே பேசும்
தருமவா பேரனோ
வக்கீலோடே பேசும்
மகராசர் பேரனோ.

56. பரட்டைப் புளியமரம்
பந்தடிக்கும் நந்தவனம்

நந்தவனம் கண்திறந்து
நாலுவகைப் பூவெடுத்து
பூ எடுத்துப் பூஜை பண்ணும்
புண்ணியவள் பேரனோ
மலரெடுத்துப் பூஜை பண்ணும்
மகராஜா பேரனோ
அரும்பெடுத்துப் பூஜைபண்ணும்
அர்ச்சுணவன் பேரனோ.

57. வித்தகசாலை கட்டும்
வீமருட பேரனோ
பாடகசாலை கட்டும்
பாண்டியனார் பேரனோ
குளிக்க குளமும் வெட்டி
கும்பிடவும் கோயில் கட்டி
அசராமல் அன்னமிடும்
அருச்சுனவா பேரனோ.

58. சேற்றிலொரு செங்களநீ (ர்)
திங்களொரு பூப்பூக்கும்
நூ ற்றிலொரு பூவெடுத்து
முடிப்பார் மகனாரே

வங்காளம் சிட்டு
வயலிறங்கி மேயிதின்னு
சிங்கார வில்லெடுத்து
தெரிப்பார் மகனாரோ

ஆற்றுக்கும் தெற்கே
அழகருக்கும் தென்கிழக்கே
சோற்றுக்கும் தூ யவெள்ளை - சொக்கர்
சொல்லிவர விட்டாரோ.

சம்பா கதிரடித்து - சொக்கர்
தவித்து நிற்கும் வேளையிலே
சொர்ணக் கிளிபோல - மீனா
சோறுகொண்டு போனாளாம்
நேரங்கள் ஆச்சுதென்று - சொக்கர்
நெல்லெடுத்து எய்தாராம்
கல்லோ கிடக்குதென்று - சொக்கர்
கடுங்கோபம் கொண்டாராம்

அள்ளி எறிந்தாராம்
அளவற்ற கூந்தலிலே
மயங்கி விழுந்தாளாம்
மல்லியப்பூ மெத்தையிலே
சோர்ந்து விழுந்தாளாம்
சொக்கட்டாங்காய் மெத்தையிலே

அழுத குரல் கேட்டு
அழகர் எழுந்திருந்து
வரிசை கொடுத்தாராம்
வையத்தில் உள்ள மட்டும்
சீரு கொடுத்தாராம்
சீமையில் உ ் ள மட்டும்

மானா மதுரைவிட்டார்
மதுரையிலே பாதிவிட்டார்
தல்லா குளமும் விட்டார்
தங்கச்சி மீனாளுக்கு
தளுகையிலே பாதி விட்டார்.

மதுரைக்கும் தெற்கே
மழைபெய்யாக் கானலிலே
வெள்ளிக் கலப்பை கொண்டு - சொக்கர்
விடியக்காலம் ஏர்பூட்டித்
தங்க கலப்பை கொண்டு - சொக்கர்
தரிசுழுகப் போனாராம்
தரிசாய் கிடந்த நிலம் - சொக்கர்
சம்பா விதைபாவிச்
சருகுச் சம்பா நாத்துநட்டுப்
பிடித்து விதைபாவிப்
பெருங்கடல் தீர்த்தம் வந்து
வாரி விதை பாவி
வைகை நதித் தீர்த்தம் வந்து
அள்ளி விதை பாவி
அழகர்மலைத் தீர்த்தம் வந்து
எங்கும் விதைபாவி
ஏழுகடல் தீர்த்தம்வந்து
சரஞ்சரமாய் நெல்விளையும்
கோபுரம்போல் போர் ஏறும்
கட்டுக் கலம் காணும்

பொன்சொளகு கொண்டு
பொதி தூ ற்றி நிற்பாராம்
பொன்மரக்கால் கொண்டு
பொதியளந்து நிற்பாராம்.

59. இரும்பாலே ஊரணியாம்
இருபுறமும் தாமரையாம்
தாமரையின் நூ லெடுத்துத்
தனிப்பசுவின் நெய்யுருக்கி
வாழெலையும் மாவிளக்கும்
வச்செடுத்த குஞ்சலரோ
தென்னலையும் மாவிளக்கும்
சேர்த்தெடுத்த குஞ்சலரோ
குஞ்சலரோ அஞ்சலரோ
ஆடும் சிதம்பரரோ.

60. மண்ணிலொரு புன்னை மரம்
வருந்தியொரு காய்காய்க்கும்
ஜானகையாள் புன்னைமரம்
தழைநெருங்கி காய்காய்க்கும்
பூ நாலு, காய் மூணு
புனக்கிளியாள் புன்னைமரம்
தாயார் சொற்படிக்கு இராமர் வழிநடந்தார்
பர்ணக சாலைகட்டி
சுவாமி பகவானும் பள்ளி கொண்டார்
வடிவுள்ள மான்வந்து

மருகி விளையாடையிலே
வகையறியாச் சீதையரும் சாமி
மான் எனக்கு வேணும்மென்றாள்
மானைப் பிடிக்க வனம் புகுந்தார் ஈஸ்வரரும்
பிச்சையென்றான் இராவணனும்
அள்ளியிட்டாள் ஜானிதான்
கூசாமே சீதையரைக்
கொண்டு வந்தான் தென்னிலங்கை
ராமர் - வைத்த இடம் காணாமல்
வாடி அலைந்தாராம்
தேடித் திரிந்தாராம்
திருக்கால் சிலம்பதிர
ஓடித் திரிந்தாராம் - ராமர்
ஒருகால் சிலம்பதிர
ஆழி கைகொடுத்து
அனுமாரைத் தூ தனுப்பி - ராமர்
சிறை மீட்டாராம்
கணையாழி கைகொடுத்து - ராமர்
காரிகையை மீட்டாராம்.

61. ஆரடித்தார் ஏனழுதாய்
கொம்புக் கனியே
கோதுபடா மாங்கனியே
வம்புக் கழுதாயோ
வாயெல்லாம் பால் வடிய
மாமன் அடித்தானோ

மல்லியப்பூச் செண்டாலே
அத்தை அடித்தாளோ
அல்லிமலர்ச் செண்டாலே

அடித்தாரைச் சொல்லியழு
ஆக்கினைகள் செய்து வைப்போம்
தொட்டாரைச் சொல்லியழு
தோள்விலங்கு போட்டுவைப்போம்
ஆரும் அடிக்கவில்லை
ஐவிரலும் தீண்டவில்லை
தானா அழுகின்றான்
தம்பிதுணை வேண்டுமென்று
அவனா அழுகின்றான்
ஆத்தா (ள்) மடிதேடி.

62. தென்னுதமிழ் வளர்த்த
தென்னவராம் பாண்டியர்க்கு
பிள்ளைக்கலி தீர்த்த
பெருமானும் நீதானோ?
மாம்பழத்தைக் கீறி
வயலுக்கு உரம்போட்டுத்
தேன்பாய்ந்து நெல் விளையும்
செல்வமுளார் புத்திரனோ!

வெள்ளித்தேர் பூட்டி
மேகம்போல் மாடுகட்டி

அள்ளிப் படியளக்கும்
அதிட்டமுள்ளார் புத்திரனோ!
வாரிப் படியளக்கும்
மகிமையுள்ளார் புத்திரனோ
சேற்றிலொரு செங்கழுநீர்
திங்களொரு பூப்பூக்கும்!
நூற்றிலொரு பூவெடுத்து
முடிப்பார் மகனாரோ!
இன்னார் மகனோ
இனியார் மருமகனோ
தனதாய் விளையாடும்
தமிழோ புனக்கிளியோ
பொதுவாய் விளையாடும்
புள்ளிமான் நித்திரையோ!

63. சங்கினால் பால் கொடுத்தால்
சந்தனவாய் நோகுமென்று
தங்கத்தினால் சங்கு செய்து
தருவார்கள் தாய்மாமன்!
அத்தை மடிமேலும்
அம்மான்மார் தோள்மேலும்
வைத்து விளையாடும்
மாமணியே கண்வளராய்!
அம்மான் அரண்மனைக்கு
அமைந்த மருமகனோ
மாமன் அரண்மனைக்கு
வாய்த்த மருமகனோ!

64. வாடிய நாளெல்லாம் வருந்தித் தவமிருந்து
தேடிய நாள்தன்னில் செல்வமாய் வந்த கண்ணா!
மலடி மலடியென்று வையகத்தார் ஏசாமல்
மலடி என்ற சொல்லை மாற்றப் பிறந்தாயோ!

65. கரும்புருகத் தேனுருகக்
கண்டார் மனமுருக
எலும்புருக பெற்ற கண்ணே!
இலக்கியமே கண்வளராய்!
அழுதால் அரும்புதிரும்
அண்ணாந்தால் பொன்னுதிரும்
சிரிச்சா சிறுமுத்துதிரும் - செல்வமகன்
வாய்திறந்தால் தேன்சிதறும்!
தேனோ திரவியமோ - என் கண்ணே !
தெவிட்டாத மாங்கனியோ!

66. கரும்போ இனிதேனா
கற்கண்டோ சர்க்கரையோ!
சர்க்கரையோ முக்கனியோ
சாதிமருக் கொழுந்தோ
கொடிக்கால் மருக்கொழுந்தோ கண்ணம்மா
கோதை கையிற் பூச்சரமோ!
சாதிமருக் கொழுந்தோட கண்ணம்மா
சரங்கொடுத்த பூச்சரமோ!

67. அவரை சலசலங்க அம்புமணிப் பிஞ்சிறங்க

*கொடிஅவரை காய்க்க குடிதழைக்க வந்தமகனோ*

*பச்சை இலுப்பை வெட்டி பால்வடியத்*

*தொட்டிகட்டி*

*அந்த நல்ல தொட்டியிலே - என் கண்ணம்மா*

*ஆளவந்த பாலகனோ!*

சோமலெ, செட்டிநாடும் தமிழும், சென்னை, பாரி நிலையம், இ. பதிப்பு, 1960, பக். 198-215.

★★★

## பாடியவர்கள்

| எண். | பெயர் | வயது | சாதி | ஊர் | கல்வி |
|---|---|---|---|---|---|
| 1. | அழகம்மை ஆச்சி | 54 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | ஆத்தங்குடி | - |
| 2. | உண்ணாமலை ஆச்சி | 55 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | காரைக்குடி | - |
| 3. | உமையாள் | 32 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | கோனாபட்டு | 8வது வரை படித்தவர் |
| 4. | கண்ணாத்தாள் ஆச்சி | 55 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | நாட்டரசன் கோட்டை | - |
| 5. | சிகப்பி ஆச்சி | 65 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | பள்ளத்தூர் | - |
| 6. | தெய்வானை ஆச்சி | 44 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | காரைக்குடி | - |
| 7. | நாகம்மை ஆச்சி | 87 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | கோனாபட்டு | - |
| 8. | நாச்சம்மை ஆச்சி | 70 | நாட்டுக் கோட்டைச் | கீழச்சிவப்பட்டி | |

## பட்டியல்

| நாள் | பாடியவர் கருத்து | ஆய்வாளர் கருத்து |
|---|---|---|
| 13.1.79 | சிறு வயதிலிருந்து பாடிய பழக்கத்தாலும், தம் தாயார் தாலாட்டுப் பாடித் தொட்டி லாட்டியதாலும் தமக்கும் இப் பழக்கம் நன்கு உள்ளது எனக் கூறினார். | கடவுள் பற்றிய பாடல்கள் பாடுவதில் ஆர்வ முள்ளவராக உள்ளார். திருத்தமாக உச்சரித்தவர். |
| 9. 1. 79 | மற்ற இனத்தினருக்குத் தெரிந்த பாடல்களை அருகிலிருந்து கேட்ட பழக்கத்தாலும், தம் தாயார் மூலமாகவும் தெரியும் எனக் கூறினார். | குரலினிமை உடையவர். தாலாட்டுப் பற்றிச் சில தகவல்கள் தந்தவர். |
| 12. 1.79 | தம் தாயார் பாடியதைக் கேட்டு எழுதி வைத்துக் கொண்டு தம் குழந்தைக்குப் பாடியதால் தெரியும் என்கிறார். | பாடல் அடி பிறழாது திருத்தமாக உச்சரிப்புடன் தெளிவாகப் பாடியவர். |
| 15. 1. 79 | தம் தாயார் பாடுவதைக் கேட்டுக் கொண்டிருந்த பழக்கத்தால் தமக்கும் பாட வருகிறது என்று கூறினார். | தாலாட்டுப் பாடல்களில் நல்ல பயிற்சியும், தேர்ச்சி யும் உடையவர். புத்த கங்களில் உள்ள பல்வேறு தாலாட்டுக்களில் செட்டி நாட்டுத் தாலாட்டுக்களை மட்டும் குறித்துத் தந்தவர். |
| 11. 1.79 | அடுத்த வீட்டினர் பாடியதைக் கேட்ட பழக்கம். | கடவுள் பற்றிய தாலாட்டுக்களை மிகுந்த ஆர்வமுடன் பாடியவர். |
| 10. 1.79 | தம் தாயார் பாடிய பழக்கம் தமக்கும் வந்தது என்றார். | உணர்ச்சி வசப்பட்டுப் பாடியவர். |
| 12. 1.79 | நினைவில் இல்லை என்று கூறினார். பின் நினைவு படுத்தி ஒருசில பாடல்களைப் பாடினார். | நல்ல பயிற்சி உடையவர் அல்லர் |
| 17. 1.79 | பரம்பரைப் பழக்கத்தால் தமக்கே பாடத் தெரியும் என்றார். | சொல் வளம் செறியும் பாடல்களை இயல்பான குரலுடன் பாடியவர். |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 9. | மங்களம் ஆச்சி | 45 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | கானடுகாத்தான் | - |
| 10. | மீனாக்ஷி | 48 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | ஆத்தங்குடி | - |
| 11. | மீனாக்ஷி ராமநாதன் | 40 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | பள்ளத்தூர் | 8வது வரை படித்தவர் |
| 12. | வசந்தான் | 33 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | நாட்டரசன் கோட்டை | ஆசிரியை பயிற்சி பெற்றவர் |
| 13. | வள்ளிக்கண்ணு | 28 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | நாட்டரசன் கோட்டை | பள்ளி இறுதி வகுப்பு வரை பயின்றவர். |
| 14. | வள்ளியம்மை ஆச்சி,சி.டி | 68 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | காரைக்குடி | - |
| 15. | வள்ளியம்மை ஆச்சி | 64 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | காரைக்குடி | - |
| 16. | விசாலாட்சி | 26 | நாட்டுக் கோட்டைச் செட்டியார் | காரைக்குடி | பள்ளி இறுதி வகுப்பு வரை பயின்றவர். |

| | | |
|---|---|---|
| 19. 1.79 | தம் தாயார் தமக்கு பாடிய போதும் தம் சகோதரிகளுக்குப் பாடியபோதும் கேட்ட பழக்கத் தால் வந்தது என்றார். | நல்ல குரலினிமையுடன் பாடியவர். |
| 13. 1.79 | தம் மூத்த தமக்கையார் பாடியதைக் கேட்டுக் கொண்டி ருந்த பழக்கத்தால் பாடியது என்றார். | பாடப் பாடியவர். |
| 11. 1.79 | தாயார், அண்ணியார்ஆகிய வர்கள் சொல்லக்கேட்டு எழுதி வைத்துக் கொண்டு பாடிய பழக்கம் என்றார். | நிறையப் பாடல்களைக் குரலினிமையுடன் பாடியவர். பாடல்களைச் சேகரிக்க உதவியாக இருந்தவர். |
| 15. 1.79 | தம் தாயார் பாடிய பழக்கத்தால் ஓரிரண்டு பாடல்கள் தமக்குத் தெரியும் என்று கூறிப் பாடியவர். | தெரிந்த பாடல்களைத் தவறின்றிப் பாடபேதங்-களையும் குறிப்பிட்டுப் பாடியவர். |
| 15. 1.79 | தம் தாயார் பாடிய பழக்கம் தமக்கு வருகிறது என்றார். | குறைந்த பாடல்கள் தெரிந்தவராய் இருப்பினும் தெளிவாகப் பாடியவர். |
| 10. 1.79 | தம் தாயார் நன்கு பாடுவதால் அவர்களிடம் கேட்ட பழக்கம் என்றார். | தாமாகவே முன் வந்து பாடியவர். பாடம் பிறழாது பாடியவர். |
| 9. 1.79 | தம் தாயார் பாடிய பழக்கத்தால் தமக்கும் பாடவரும் என்றார். | மிகுதியான தாலாட்டுப் பாடல்கள் தெரிந்தவர். இசையுடன் பாடியவர். வல்லினம், மெல்லினம் சற்றுத் தவறுதலாக உச்ச ரித்தவர். |
| 10. 1.79 | தாலாட்டுப் பாடல்களைப் தாயார் சொல்லக் கேட்டு எழுதி வைத்துக் கொண்டு படித்ததால் தமக்குத் தெரிந்தது என்றார். | திருத்தமாகவும் ஓசையுட னும் பாடியவர். காரைக்குடி யில் அவருக்குத் தெரிந்தவர் இல்லங்கட்கு அழைத்துச் சென்று பாடல்களைச் சேகரிக்க உதவியவர். |

## இணைப்பு – 4 தெய்வப் பெயர்கள்

1. அகிலாண்டேஸ்வரி - க.தி.பா. 24.
2. அம்மன் - க.தி.பா. 34.
3. அண்ணாமலையார் - க.தி.பா. 46.
4. அய்யனார் - நூ. எ. பா. 6.
5. அன்னபூரணி - நூ. எ. பா. 33.
6. அரிராமர் - நூ. எ. பா. 47.
7. அழகர் - நூ. எ. பா. 58.
8. ஆதிசிவனார் - க. தி. பா. 29.
9. ஆண்டவன் - நூ. எ. பா. 19.
10. இராமர் - க. தி. பா. 22.
11. இலட்சுமணர் - க. தி. பா. 8.
12. இறைவன் - நூ. எ. பா. 2.
13. ஈசுவரனார் - நூ. எ. பா. 32.
14. ஈஸ்வரர் - நூ. எ. பா. 60.
15. உமையவள் - க. தி. பா. 23.
16. கணபதி - க. தி. பா. 7.
17. கந்தன் - க. தி. பா. 45.
18. கதிர்வேலர் - க. தி. பா. 45.
19. கறுப்பையார் - க. தி. பா. 49.
20. கடவுள் - நூ. எ. பா. 6.
21. கந்தர் - நூ. எ. பா. 44.

22. கண்ணம்மா - நூ. எ. பா. 66.

23. காமன் - க. தி. பா. 7.

24. காளியார் - நூ. எ. பா. 6.

25. காளியம்மாள் - நூ. எ. பா. 18.

26. காலைக்கடம்பர் - நூ. எ. பா. 33.

27. காசி விஸ்வேஸ்வரர் - நூ. எ. பா. 33.

28. காளியாத்தாள் - நூ. எ. பா. 6.

29. குற்றாலநாதர் - க. தி. பா. 1.

30. குழலாமணி அம்மன் - க. தி. பா. 1.

31. குறமகள் - நூ. எ. பா. 1.

32. கொத்தவனாள் ஈசுவரி - க. தி. பா. 23.

33. கேசரிய நாதர் - க. தி. பா. 45.

34. கோபாலகிருஷ்ணர் - நூ. எ. பா. 38.

35. கோதண்டசாமி - க. தி. பா. 19.

36. சரஸ்வதி - க. தி. பா. 12.

37. சந்திரர் - க. தி. பா. 23.

38. சண்முகா - க. தி. பா. 45.

39. சங்கரா - க. தி. பா. 49.

40. சங்கரனார் - நூ. எ. பா. 19, 37.

41. சங்கரன் - நூ. எ. பா. 34.

42. சாலாட்சி அம்பாள் - க. தி. பா. 12.

43. சாத்தய்யா - க. தி. பா. 49.

44. சாமி - நூ. எ. பா. 60.
45. சிதம்பரர் - க. தி. பா. 31.
46. சிவகாமி அம்மன் - நூ. எ. பா. 32.
47. சிவன் - க. தி. பா. 5.
48. சீதை - க. தி. பா. 3.
49. சீராமர் - க. தி. பா. 39.
50. சுப்பையா - க. தி. பா. 45.
51. சுவாமி - க. தி. பா. 45.
52. சுப்ரமணியர் - நூ. எ. பா. 2.
53. சுவாமி பகவான் - நூ. எ. பா. 60.
54. சூரியர் - க. தி. பா. 23.
55. சென்னிமலை அழகன் - நூ. எ. பா. 19.
56. சொக்கர் - க. தி. பா. 6.
57. சொக்கலிங்க சாமி - க. தி. பா. 12.
58. சொக்கலிங்கம் - க. தி. பா. 31.
59. தனுஷ்கோடி இராமர் - க. தி . பா. 29.
60. தங்கச்சி மீனாள் - நூ. எ. பா. 58.
61. தில்லை சிதம்பரர் - க. தி . பா. 13.
62. திருச்செந்தூர் பெம்மாள் - நூ. எ. பா. 1.
63. திருத்தணி முருகர் - நூ. எ. பா. 29.
64. தெய்வம் - நூ. எ. பா. 1.
65. தெய்வானை - நூ. எ. பா. 1.

66. தேவாதி - நூ. எ. பா. 28.

67. தென்மதுரைச் சொக்கர் - நூ. எ. பா. 16.

68. தைப்பிறை - நூ: எ. பா. 19.

69. நல்ல சரஸ்வதி - நூ. எ. பா. 6.

70. பகவான் - க. தி. பா. 32.

71. பழனிமலை ஆண்டவர் - க. தி. பா. 46.

72. பரமசிவன் - க. தி. பா. 16.

73. பார்வதி - க. தி. பா. 23.

74. மதுரைச் சொக்கர் - நூ. எ. பா. 35.

75. மலைப்பழனி வேலர் - நூ. எ. பா. 16.

76. மதுரைநகர் சொக்கலிங்கம் - நூ. எ. பா. 29.

77. மாயவன் - நூ. எ. பா. 37.

78. மாசக்தி - நூ. எ. பா. 1.

79. மாரியம்மாள் - நூ. எ. பா. 18.

80. மாசிப்பிறை - நூ. எ. பா. 19.

81. மாமயில் முருகர் - நூ. எ. பா. 29.

82. மாதேவர் - நூ. எ. பா. 29.

83. மீனாட்சி - க. தி. பா. 6.

84. மீனாக்ஷி அம்பாள் - க. தி. பா. 12.

85. மீனாக்ஷி அம்மை - க. தி. பா. 20.

86. மீனா - நூ. எ. பா. 58.

87. மீனாக்ஷி அம்மன் - நூ. எ. பா. 4.

★★★

| இணைப்பு - 5 | | அணிகலன்கள் |
|---|---|---|
| 1. அவரமணி | - | நூ. எ. பா. 40 |
| 2. அடுக்கு வளையல் | - | க. தி . பா. 45 |
| 3. ஆபரணம் | - | நூ. எ. பா. 4. |
| 4. கிள்ளு வளையல் | - | க. தி. பா. 45. |
| 5. கணையாழி | - | க. தி. பா. 3. |
| 6. கடுக்கஞ்சாவடி | - | க. தி. பா. 17. |
| 7. கால்மிஞ்சி | - | க. தி. பா. 17. |
| 8. குஞ்சரம் | - | க. தி. பா. 41. |
| 9. கோக்காத முத்து | - | க. தி. பா. 41. |
| 10. சிலம்பு | - | க. தி. பா. 22. |
| 11. செம்பொன் | - | நூ. எ. பா. 13. |
| 12. தங்கமுத்து தாவடம் | - | க. தி . பா. 1. |
| 13. தங்கமணி | - | க. தி. பா. 25. |
| 14. தங்கவளை | - | நூ. எ. பா. 47. |
| 15. தண்டை | - | நூ. எ. பா. 54. |
| 16. தங்கத்தாலி | - | நூ. எ. பா. 19. |
| 17. திருவாழி | - | க. தி. பா. 3. |
| 18. திருக்காது குண்டலம் | - | நூ. எ. பா. 29. |
| 19. துவரமணி | - | நூ. எ. பா. 40. |
| 20. நற்பகழுமாலை | - | க. தி. பா. 5. |
| 21. நன்னாழில் பொன் சலங்கை | - | க. தி. பா. 33. |

22. நற்பகழும் - க. தி. பா. 11.
23. நாழ்ச்சிறு சலங்கை - க. தி. பா. 33.
24. நெற்றியரைச்சுட்டி - நூ. எ. பா. 1
25. நெற்றிச்சுட்டி - நூ. எ. பா. 1.
26. பதக்கத்தின் கல்லொளி - க. தி. பா. 41.
27. பச்சை வளையல் - க. தி. பா. 45.
28. பவன் - நூ. எ. பா. 6.
29. பவளக்கால் தொட்டி- நூ. எ. பா. 47.
30. பூச்சரம் - நூ. எ. பா. 10.
31. பொன் - க. தி. பா. 21.
32. பொன் சலங்கை - க. தி. பா. 33.
33. பொன்னுமணி - நூ. எ. பா. 36.
34. மணிமோதிரம் - நூ. எ. பா. 1.
35. மணிவயிரம் - நூ. எ. பா. 13.
36. மரகதப்பூமுடி - நூ. எ. பா. 13.
37. மாணிக்கம் - க. தி. பா. 11.
38. மார்பதைக்கம் - க. தி. பா. 17.
39. மார்பிற் பதக்கம் - நூ. எ. பா. 1.
40. மாசில்லாத முத்து - நூ. எ. பா. 13.
41. முத்து - க. தி. பா. 9.
42. முத்துமாலை - க. தி. பா. 15.
43. முருகு - க. தி. பா. 49.
44. விலைமதியா வீரத்தண்டை- க. தி. பா. 36.

★★★

இணைப்பு - 6

## செட்டிநாட்டில் வழங்கும் வழக்குச் சொற்கள்

1. அனைஞ்சு - அனைந்து - க. தி. பா. 11.
2. அட்டி - தடங்கல் - நூ. எ. பா. 6.
3. அம்மான் - மாமன் - க. தி. பா. 7.
4. அந்தி-இருட்டு நேரம் - க. தி. பா. 15.
5. அசராமல்-தளராமல் - நூ. எ. பா. 57.
6. ஆறுதக்கி-ஆறுதற்கு - க. தி. பா. 15.
7. ஆக்கினை-கேட்டினை - க. தி. பா. 44.
8. ஆச்சி - அக்கா - நூ. எ. பா. 1.
9. ஆத்தா - அம்மா - நூ. எ. பா. 7.
10. இட்டிலி - இட்லி - நூ. எ. பா. 6.
11. இடைப்பகலை-நண்பகலுக்கும், மாலைப் பொழுதிற்கும் இடையிலுள்ள நேரம் -நூ. எ. பா. 6.
12. உக்க- மிக நெருங்கி - க. தி . பா. 6.
13. ஊருணி - குளம் - நூ. எ. பா. 22.
14. எழுத்து - வயது - க. தி. பா. 30.
15. எதவாக- ஓரளவு (இதமாக)- நூ. எ. பா. 6.
16. என்னரியான்-எனக்கரியான்- நூ. எ. பா. 7.
17. எய்க்காமல்-சளைக்காமல் - க. தி. பா. 6.
18. ஏலங்குழலாளன்-ஏலவாசனையுடைய குழலையுடையவன் - நூ. எ. பா. 15.

| | | |
|---|---|---|
| 19. ஐத்தை - அத்தை | - | க.தி . பா. 13. |
| 20. ஐயா - தாத்தா | - | க. தி. பா. 27. |
| 21. ஒயிலான ரயில் வண்டி அழகான ரயில் வண்டி | - | நூ. எ. பா. 53. |
| 22. ஒவியம்-ஓவியத்தின் அழகு போன்ற என்ற பொருளில் ஆகுபெயராக வருகிறது | - | க. தி. பா. 39. |
| 23. கஞ்செவக்க-கண்சிவக்க | - | க. தி. பா. 6. |
| 24. கடலாசி - கடதாசி | - | நூ. எ. பா. 25. |
| 25. கண்டாங்கி - சேலை | - | நூ. எ பா. 6. |
| 26. காசிச்சிண்டு மணி-விளையாட்டு சாமானில் ஒருவகை. காசியிலிருந்து வாங்கி வருவதால் | - | க. தி. பா. 53. |
| 27. கண்ணசர-கண்ணுறங்க | - | க. தி. பா. 8. |
| 28. கூதல்-குளிர் | - | நூ. எ. பா. 40. |
| 29. கோவம்- கோபம் | - | க. தி. பா. 47. |
| 30. சமஞ்சுதாம்- அமர்ந்ததாம் | - | க. தி. பா. 3. |
| 31. சலியாமல் - சோம்பலின்றி | - | நூ. எ. பா. 6. |
| 32. சிலம்பரர் - சிதம்பரர் | - | க. தி. பா. 13. |
| 33. சீனி - சர்க்கரை | - | நூ.எ.பா. 43. |
| 34. சீமை- வெளியூர் | - | நூ. எ. பா.10. |
| 35. சுத்து - சுற்று | - | க. தி. பா. 3. |
| 36. சுணங்குதல் - தாமதித்தல் | - | நூ. எ. பா. 6. |
| 37. சுருக்காய் -வேகமாய் | - | நூ. எ. பா. 6. |
| 38. செய்கள் - நிலங்கள் | | நூ. எ. பா. 46 |

39. சொப்பனம் - கனவு - க. தி. பா. 49.

40. டைவர் - வண்டியோட்டி - நூ. எ. பா. 6.

41. தனதா - தனக்குரியதாக - க. தி. பா. 1.

42. தலகாணி-தலையணை - நூ. எ.பா. 22.

43. தாட்டெலை-முழுமையான வாழை இலை-நூ. எ.பா.6.

44. தாக்கல் - செய்தி - நூ.எ.பா. 6.

45. திங்கவுன்னு-தின்ன வேண்டும் என்று- க.தி.பா. 24.

46. திட்டென்று - விருட்டென்று - க. தி.பா. 45.

47. திருச்சொர்ணம் - பொட்டு - நூ.எ.பா.6.

48. தெக்கே,- தெற்கே - க. தி. பா. 20.

49. தெண்டனிடுதல்- வணங்குதல் - க. தி. பா. 34.

50. தோதான - பொருத்தமான - க. தி. பா. 45.

51. நீறு - திருநீறு - நூ. எ.பா. 1.

52. நைப்பகழ மாலை - நற்பவளமாலை- க. தி. பா. 34.

53. பகழம் - பவளம் - க. தி. பா. 10.

54. பணம் - 2 அணாவையும் குறிக்கும். முன்னர் பணம் வெள்ளி நாணயமாக இருந்தது. - நூ. எ. பா. 2.

55. படைப்பு-ஒரே குடியில் தோன்றிய முன்னோரை அவர்களுடைய வழித்தோன்றல்கள் வழிபடும் சடங்கைப் படைப்பென்பர். க. தி. பா. 6.

56. பணியாரம்-பலகாரம் (வெள்ளை அப்பம்) - நூ. எ. பா. 36.

57. பவுன்-தங்கம் - நூ. எ. பா. 41.

58. பாவினையை-அழகினை - நூ. எ. பா. 4.

59. பாதிச்சாமம் - நடு இரவு - நூ.எ.பா. 6.

60. பிலாச்சுளை-பலாச்சுளை - நூ. எ. பா.18

61. பிணி-நோய் - க. தி. பா.19.

62. புள்ளை-பிள்ளை - நூ. எ. பா. 34.

63. புள்ளி-திருமணமானவர்கள் - க. தி. பா. 6.

64. பூட்டுதல் - அணிதல் - நூ. எ. பா. 36.

65. பெத்து - பெற்று - க. தி. பா.3.

66. பெலமான - பலமான - க. தி. பா.6.

67. பெண்டுகள் - பெண்கள் - க. தி. பா.6.

68. பொறை - பிறை - நூ. எ. பா.11.

69. மகிர - நிரம்பி வழிய - நூ. எ. பா.6.

70. மசன்டை - விடியற்காலை - நூ. எ. பா. 11.

71. மரக்கறி -காய்கறி உணவு - நூ.எ.பா. 6.

72. மருசாதி - மற்ற சாதி - நூ. எ. பா.6.

73. மாறு- ஓலை - க. தி. பா. 11.

74. மானம் - வானம் - க. தி.பா.15.

75.மாவிளக்கு-மாவில் விளக்கு ஏற்றி இறைவனை வணங்குதல் - க. தி.பா. 59.

76. மீன்பூச்சு-நட்சத்திரம் தோன்ற - நூ.எ.பா. 21.

77. முக்குளிச்சி - மூழ்குதல் - க.தி.பா. 9.

78. முகப்பு- முன்பக்கம் - நூ.எ.பா.4.

79. யாருக்கிடுவமுன்று- யாருக்கிடுவோம் என்று- க.தி.பா.33.

80. ராராட்டு - தாலாட்டு - க.தி.பா. 27.

| | | |
|---|---|---|
| 81. லாவெரிக்க - நிலா ஒளி விட | - | நூ.எ.பா.21. |
| 82. வட்டி-உணவு உண்ணும் தட்டு | - | நூ.எ.பா.41. |
| 83. வாந்த - வார்ந்த | - | க. தி.பா. 9. |
| 84. விலாசமுள்ள-அகலமுள்ள | - | க.தி.பா.39. |
| 85. விரசாய் - வேகமாய் | - | நூ.எ.பா.42 |
| 86. விக்கினங்கள்-தவறுதல்கள் | - | நூ.எ.பா. 6. |
| 87. வெண்ணீறு - திருநீறு | - | க.தி.பா. 49. |
| 88. வேக்குது - வேர்க்குது | - | க. தி.பா. 16. |
| 89. முண்டார் - முட்டார் | - | க.தி.பா. 3. |

★★★

# ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள்

அழகப்பன், ஆறு. நாட்டுப்புறப்பாடல்கள் - திறனாய்வு, சென்னை, கழகம், 1973.

அழகப்பன், ஆறு. (தொ.ஆ), தாலாட்டுக்கள் ஐநூறு, சென்னை, 1972.

இளம்பூரணர், (உ.ஆ), 'பொருளதிகாரம்', தொல்காப்பியம், சென்னை, கழகம், 1974.

கண்ணம்மை ஆச்சி, சுய, பள்ளத்தூர் அழகஞ்செட்டியார் தாலாட்டு, காரைக்குடி, செந்தமிழ்ப் பதிப்பகம், ஆண்டு இல்லை.

குணசாகரர், (உ.ஆ) யாப்பருங்கலக்காரிகை, சென்னை, கழகம், 1940.

சண்முகசுந்தரம், சு., நாட்டுப்புற இயல் ஓர் அறிமுகம், சென்னை, இலக்கிய மாணவர் மன்ற வெளியீடு, 1976.

சீனிவாசன், இரா., சக்தி வழிபாடு, நாகர்கோவில், ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், 1975.

சுப்பிரமணியம், பா. ரா., தமிழக நாட்டுப் பாடல்கள், சென்னை, வானதி பதிப்பகம், 1978.

சுப்பிரமணியம், ச.வே., (ப.ஆ), கேரளப் பல்கலைக்கழக ஆய்வு மலர், தொகுதி இரண்டு, கேரளப் பல்கலைக்கழகம், 1972.

சேஷாத்ரி சர்மா, (ப.ஆ), நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு, சென்னை, வானதி பதிப்பகம், 1970.

சோமலெ, செட்டிநாடும் செந்தமிழும், இரண்டாம் பதிப்பு, சென்னை, வானதி பதிப்பகம் 1960.

ஞானப்பிரகாசம்,வி.மி. - அறவாணன்,க.ப. (பதிப்பாசிரியர்கள்) நாட்டுப்புற இலக்கியப் பார்வைகள், சென்னை, பாரி நிலையம், 1965.

தண்டாயுதம், இரா., நாவல் வளம், சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், 1975.

தமிழண்ணல், தாலாட்டு, மூன்றாம் பதிப்பு, காரைக்குடி, பாவை நிலையம், 1963.

பரந்தாமனார், அ.கி., கவிஞராக, சென்னை, பாரி நிலையம், 1964.

முத்துபழனியப்பச் செட்டியார், பெ. நா. மு., மலேயாவின் தோற்றம், பினாங்கு, மெர்கெண்டைல் பிரஸ், 1938.

வரதராசன், மு., இலக்கியத்திறன், சென்னை, பாரி நிலையம், 1965.

வானமாமலை, நா., தமிழக நாட்டுப் பாடல்கள், சென்னை, என்.சி.பி.எச். 1964.

ஜகந்நாதன், கி. வா. குழந்தை உலகம், சென்னை, அமுத நிலையம், 1952. ஆய்வேடு.

சண்முகசுந்தரம், சு., திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாய அமைப்பு, பி.எச்.டி. ஆய்வுரை, சென்னை, சென்னைப் பல்கலைக்கழகம், 1977.

## இதழ்

ஆராய்ச்சி, இதழ் - 4, நவம்பர் 1974.

## மலர்

நகரத்தார் மாநில மாநாட்டு மலர், சென்னை, நகரத்தார் ஜக்கிய சங்கம், 1965.

நாட்டுப்புற இயல் கருத்தரங்கு, அடையாறு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 26- 27 மார்ச் 1977.

## அகராதி

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி, தொகுதி-3.

## கலைக்களஞ்சியம்

கலைக்களஞ்சியம், தொகுதி -4, சென்னை, ஓரியண்ட் லாங்மன்ஸ் லிட்.

## ஆங்கில நூல்கள்

Bowra, C.M., Primitive Song, London, Weidon Feld Nicolson, 1962.

Owen Watson (Editor), LongmanModern English Dictionary, Second Edition, London, Longman, group Limited, 1976.

Tristram Coffin (Editor), American Folklore, Washington, United States Information Agency,

Encyclopaedia Britanica, Volume-21, The University of Chicago, 1768.



## எமது புதிய வெளியீடுகள்

- தமிழில் முடியும் - தொகுப்பு
- உலக வரலாற்றில் பெண்கள்- தமிழாக்கம்
  - வி. ராதாகிருஷ்ணன்
- மார்க்சிசமும் மதமும் - எஸ். தோதாத்ரி
- ஜீவ காவியம் - கருமலைப் பழம் நீ
- சக்கர வியூகம் - டாக்டர் அ. சிவக்கண்ணன்
- மனம் கவர்ந்த குறள்கள் - தொகுப்பு